அறிமுகப்படுத்துகிறோம்!

சிக்®

ரோஸ்

கண்டிஷனர் ஷாம்பூ









ரோஜாத் தோட்டத்தில் தவழும் அதே நறுமணம்.





# பாட்டிக்கு வயதாகவில்லை!




''பாட்டீ... பாட்டீ...''

''என்னடி கண்ணு... என்ன வேணும்'' என்று தன்னைப் 'பாட்டி' என்று கூப்பிட்ட தனது பேரன், பேத்தி குழந்தைகளை ஆசையோடு தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சும் பாட்டிகள் எல்லாம் இன்றைய நிலைமையில் அறுபது எழுபது வயதைத் தாண்டியவர்களாக இருப்பார்கள்.

''பங்கஜம் பாட்டி... மீனாட்சி பாட்டி... காமாட்சிப் பாட்டி என்று பெயரை உடைய கொஞ்சம் மூத்திய தலைமுறையைச் சேர்ந்த பாட்டிமார்கள் தன்னுடைய பேரன் பேத்திகள் தங்களைப் பாட்டி என்று கூப்பிடுவதில் பெருமிதம் அடைபவர்கள்.

பாட்டி என்ற சொல்லுக்கு வயதானவள் என்று பொருள் வழங்கி வருவது, இன்றைய நாகரிகத்தில் புதிதாகப் பாட்டி ஸ்தானத்தை ஏற்கும் பெண்மணிகளுக்கும், எதிர்காலத்தில் பாட்டி ஸ்தானத்தை ஏற்கப் போகும் பெண்களுக்கும் சற்று சங்கடத்தைத் தந்து வருகிறது என்பதைப் பல குடும்பங்களிலும் காணலாம்.

தனது மகனோ, மகளோ, மருமகனோ, மருமகளோ தன்னைப் பாட்டி என்று அழைக்கச் சொல்லி தங்களது குழந்தைகளைப் பழக்க பல மாடர்ன் பாட்டிமார்களும் இன்று விரும்புவதில்லை.

ரொம்பவும் நாகுக்காக 'அம்மம்மா' என்று அழைக்கச் சொல்கிறார்கள்.

தங்களுடைய சந்ததிகளுக்குக் குழந்தைகள் வேண்டும். ஆனால் தனக்கு வயதாகி விட்டதாகத் தெரியக் கூடாது. இதுதான் இன்றைய பல பெண்மணிகளின் மனோ நிலை.

தனது பேரக் குழந்தையுடன் வெளி இடங்களுக்குச் செல்லும் போது அவனோ அவளோ ஏதோ ஞாபகத்தில் 'பாட்டீ' என்று கூப்பிட்டு விடும் போது ஏதோ 'ஷாக்' அடித்தாற் போல நடந்து கொள்ளும் பாட்டிமார்களின் செய்கை பலருக்கும் மெல்லிய புன்னகையை வரவழைக்கிறது.

என்றும் இளமையாக இருக்க வேண்டும்



என்று ஆசைப்படுவதில் தவறில்லை. அதிலும்.முந்தியதலைமுறையினரைக்காட்டி லும் இன்றைய தலைமுறையினருக்குத் தங்க ளுக்கு வயதாகி விட்டது என்பதைக் காட்டிக் கொள்ள விருப்பமே இல்லை. ஒப்புக் கொள்ள முடியாத ஒரு விஷயமாக இருக் கிறது.

இயற்கையாக வயதாவதைச் செயற்கை யால் எவ்வளவு தூரம் குறைக்க முடியுமோ அத்தனை முயற்சிகளையும் செய்து கொண் டிருக்கிறார்கள்.

மேக்கப், ஆடை அலங்காரம், எக்ஸர் ஸைஸ், யோகா என்று தங்களது அழகை,




உடலைப் பாதுகாத்துக் கொண்டு வரும் இன்றைய கன்னிப் பெண்கள் இளம் தாய் மார்கள் எதிர்காலத்தில் தங்களது பேரக் குழந்தைகள் தங்களைப் பாட்டி என்று கூப் பிடுவதை விரும்புவார்களா?

சரண்யா பாட்டி, நித்யா பாட்டி, ப்ரீதா பாட்டி, வித்யா பாட்டி...

இளமையான புதுமையான பெயர்களுக் குப் பின்னால் பாட்டி என்ற முதுமையான வார்த்தையா?

இன்னும் நாற்பது ஐம்பது ஆண்டுகளுக் குப் பிறகு இன்றைய நிலையில் கவர்ச்சிகர மான பெயர்களை வைத்துக் கொண்டிருக் கும் பெண் குழந்தைகள், தங்களைப் பாட்டி என்று அழைப்பதைச் சிந்தித்துப் பார்த்தால் மிகவும் ரசமாக இருக்கிறது.

இதற்கு என்ன செய்யலாம்?

குழந்தைகளின் பெயர்களில் புரட்சி நடந்து கொண்டிருப்பதைப் போல 'பாட்டி' என்ற சொல்லுக்கும் புதுமையான இளமை யான பெயர் ஒன்று கண்டுபிடிக்க வேண் டும்.

'அம்மம்மா' என்று பாட்டியை அழைப் பது பரவாயில்லை. மலையாளத்திலும் பாட் டியை 'அம்மும்மா' என்றுதான் அழைக் கிறார்கள்.

'கிராண்ட்மா' என்று சுருக்கமாக ஆங்கி லத்தில் அழைப்பதும் பரவாயில்லை. அதைக் காட்டிலும் 'நானி' என்று இந்தியில் கூப்பிடு வது மிகவும் கைகொடுப்பதாகத் தோன்று கிறது.

இந்தியிலேயே பேசிப் பழகுபவர்களுக்கு அந்த வார்த்தையின் வயது தெரியலாம். ஆனால் தமிழிலேயே பேசி வருபவர்களுக்கு அந்த வார்த்தை புதுமையாகத் தெரியலாம்.

இன்னும் கூட ஆராய்ச்சி செய்து தமிழி லேயோ அல்லது வேறு மொழிகளில் — ஜெர்மன், ப்ரெஞ்ச் போன்ற மொழிகளாக இருந்தாலும் கூடப் பரவாயில்லை — பாட்டி என்ற சொல்லுக்கு யாருக்கும் எளிதில் புரி யாத கவர்ச்சிகரமான வார்த்தைகள் இருந் தால் உபயோகப்படுத்தத் தொடங்கலாம்.

பாட்டிகளுடைய நிலைமை இப்படி.

ஆனால் தாத்தாக்களின் நிலைமையோ?

பழைய மாதிரி அப்படியேதான் இருக் கிறது.

தங்களது பேரக் குழந்தைகள் தங்களை 'அம்மம்மா' என்று கூப்பிடச் சொல்லிப் பழக்கப்படுத்தும் பாட்டிமார்கள் தங்களது கணவரைப் பேரக் குழந்தைகள் 'தாத்தா' என்று கூப்பிடுவதைத் தடை செய் வதில்லை.

அப்படி அவர் கூப்பிடப்படுவதில் அவர்க ளுக்கு ஒரு சந்தோஷம்.

அதாவது 'அம்மம்மா' என்று தான் கூப் பிடப் படுவதால் தாங்கள் இளமையாக இருப்பதாகவும், தங்களது கணவர் 'தாத்தா' என்று கூப்பிடப்படுவதால் அவர் கிழவராக ஆகிவிட்டதாகவும் அவர்களுக்கு ஒரு நினைப்பு. பாவம் இன்றைய தாத்தா மார்கள்!






- மிக அதிக அளவு
- 400 பக்கங்களுக்கு மேல்
- விலை ரூ. 40/-
- தபால் செலவு ரூ. 6/-

It's really a good book to learn spoken English — Kapil Dev



13 இந்திய மொழிகளில் பிரசுரிக்கப்படுகிறது

பத்திரிகை மற்றும் கல்வியாளர்களால் போற்றப்படுகிறது

4,00,00,000 (4 கோடிகள்) க்கும் மேலான வாசகர்களால் பின்பற்றப்படுகிறது

## அனைத்து காலங்களிலும் வியத்தகு அதிக விற்பனை

# அதிவேக சாதனை

AVAILABLE AT leading bookshops, Higginbothams Railway Book Stalls throughout India or ask by VPP from:-



**PUSTAK MAHAL** Khari Baoli, New Delhi - 6. Phone: 239314

*Showroom:* 10-B, Netaji Subhash Marg, New Delhi- 110002. Phone: 3268292

*Branch Office:* 22/2 Mission Road (Shama Rao Compound), Bangalore-560027

Stockists: MADRAS — MADRAS BOOK HOUSE, 49 Ranganathan St., T. Nagar • P.T. BELL & CO.; THIRUMALAI BOOK HOUSE, Sunkurama Chetty St. • NEW CENTURY BOOK HOUSE; HIGGINBOTHAM'S, Anna Salai • KENNADY BOOK HOUSE, Mt. Road • VIJAYA STORE; RAVI BOOK HOUSE, Mylapore ARUNA BOOK MART, W. Mambalam • MELODY BOOK CENTRE; PURSAI BOOK CENTRE, Pursawalkom



கிரைண்டருக்குள்ளிருந்து, குழவியை வெளியே எடுக்கக் கஷ்டமாயிருக்கும். அரைத்து முடித்தவுடன், கிரைண்டர் முழுதும் ஊற்றிவிட்டு, எடுத்தால், வெயிட் கம்மியாக இருக்கும்.

— பார்வதி.

பெண்கள் தங்களிடமிருந்து வயதை அடையாளம் காண்பிக்கும் பாட்டி என்ற வார்த்தையை நீக்கி விட்டதை இன்னும் புரிந்து கொள்ளாமல் தங்களிடம் மாத்திரம் வயதை அடையாளம் காண்பிக்கும் தாத்தா என்றவார்த்தையை ஒப்புக்கொண்டு இருக்கிறார்கள்.

யுகங்கள், யுகங்களாகத் தொழப்பட்டு வரும் தொண்டு கிழவனாகிவிட்ட கடவுளுக்கே யாரும் தன்னைக் கிழவன் என்று சொல்வது பிடிப்பது இல்லை.

இதோ ஒரு சம்பவம் —

முருகன் என்ற சொல்லுக்கே அழகு, இளமை, மணம், தெய்வத் தன்மை என்ற பொருள்கள் உண்டு.

அப்பேர்ப்பட்ட முருகனின் புகழைப் பாடுவது நக்கீரர் இயற்றிய 'திருமுருகாற்றுப் படை' பாடல்கள்.

திருமுருகாற்றுப் படையின் கடைசி வரிகளை,

''இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே''

என்று முடித்திருந்தார். நக்கீரர் அந்தப் பாடலைப் பாடி முடித்ததும் முருகப் பெருமான் எழுந்தருளி வந்து 'கற்கிமுகி' பூதத்தைக் கொன்று நக்கீரரையும் அவருடன் சிறைப்பட்டிருந்த மற்றவர்களையும் விடுவித்ததாக நம்பப்படுகிறது.

முருகன் மறையும் போது நக்கீரரைப் பார்த்து, ''அப்பா, நம்மைக் கிழவனென்று சொன்னாயே'' என்று புன்சிரித்து மறைந்தாராம்.

என்றும் இளமையுடன் இருக்கும் முருகனைக் கிழவனென்று குறிப்பிட்டது தவறோ என்று எண்ணிய நக்கீரர், ''குன்றம் எறிந்தாய்'' என்ற புதிய பாடலைப் பாட ஆரம்பித்து, ''என்றும் இளையாய் அழகியாய்'' என்று பாடவே முருகன் மனம் மகிழ்ந்து நக்கீரருக்கு அருள் புரிந்தாராம். இது எப்படி இருக்கு?

எத்தனை ஆயிரங் காலங்களாக வயதாகி விட்ட முருகப் பெருமானுக்கே தன்னை யாரும் கிழவன் என்று அழைப்பது பிடிக்காமல் இருக்கும் போது, அல்பம் ஐம்பது, அறுபது வயதான மனுஷர்கள் தங்களைக் கிழவன் என்று சொல்லிக் கொள்ள வேண்டுமா?

ராமசாமித் தாத்தா, கிருஷ்ணசாமித் தாத்தா, அப்பாசாமித் தாத்தா, இது பரவாயில்லை. அருண் தாத்தா, அஸ்வின் தாத்தா, சச்சின் தாத்தா, சஞ்சய் தாத்தா.

இன்றைய ஆண் குழந்தைகள் எதிர்காலத்தில் தாத்தாக்கள் ஆகும் போது அவர்கள் மாத்திரம் தங்களது உறவோடு தங்களது வயதை அடையாளம் காட்டிக் கொள்ள வேண்டுமா?

ஏன் யாரும் தாத்தாக்களை 'அப்பப்பா' என்று கூப்பிடப் பழக்க மாட்டேனென்கிறார்கள்?

உடனடியாக அவசரத் தேவை, தாத்தாவுக்கு ஏற்ற இளமையான அழகான வார்த்தை.

தாத்தாக்களே விழித்துக் கொள்ளுங்கள்! பாட்டிமார்கள் செய்யும் சதியில் இருந்து உங்களை, உங்களது இளமையைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!

— கமலநாதன்

## புதியவை அறிமுகம்

சீயக்காய்ப் பொடியும், ஷாம்பூவும் வேறு வேறு என்று இருந்தது போக, இரண்டையும் இணைத்திருக்கிறார்கள் சிக்கா ஷாம்பூ தயாரிப்பாளர்கள். இது பொடியாக இருந்தாலும் நீரில் கரைத்தவுடன் ஷாம்பூ தன்மை கிடைக்கிறது. சீயக்காய் தவிர பதினான்கு வகை மூலிகைகள் இதில் அடங்கியுள்ளதாம். விஜய்சித்தா நிறுவனம் தயாரிப்பை, காமதேனு விநியோகிப்பாளர் நிறுவனம் தமிழகம் மற்றும் அருகிலுள்ள மாநிலங்களுக்கு விநியோகிக்கும் உரிமையைப் பெற்றுள்ளது.

மங்கையர் மலர் &
ஸ்ரீபெட் வழங்கும்

# இதுதான் சமையலறை! - போட்டி

ஒவ்வொரு இல்லத்தரசியும் தன் வீட்டு வாசல் கோலம் முதல் சமையலறை வரை அழகாகவே வைத்துக் கொள்ள விரும்புவார். அதுவும் சமையலறை — இல்லத்தரசியின் சுத்த உணர்விற்கும், சுகாதார விழிப்பிற்கும், கலையுணர்விற்கும் எடுத்துக் காட்டாக விளங்குவது.

அந்த வகையில்தான் ஸ்ரீபெட்ஜார் தயாரிக்கும் நிறுவனம் இல்லத்தரசிகளை ஊக்குவிக்க விரும்புகிறது.



பெட் ஜார்கள் இல்லத்தரசியைப் போலவே குடும்ப நலத்தில் கண்ணும் கருத்துமாக இருப்பவை. இது பிளாஸ்டிக் யுகம். தகவல் தொடர்பு சாதனம் முதல், வீட்டுச் சாமான் டப்பா வரை எல்லாமே பிளாஸ்டிக்கில் தயாரிக்கப்படும் காலம். எனவே சிறந்த தரமான பிளாஸ்டிக்(பெட்)கினால் தயாரிக்கப்படும் ஸ்ரீபெட் ஜார் இல்லத்தரசிகளுக்குப் பல அனுகூலங்களைச் செய்கிறது. இது உடையாதது; கனமில்லாதது; எடுக்க, வைக்க வசதியானது. தவிரவும் சுத்தம் என்ற வகையில் பார்க்கும் போதும் கிருமிகளை அண்ட விடாமல் பார்த்துக் கொள்கிறது. பல அழகிய வண்ணங்களிலும் கிடைக்கிறது.

மங்கையர் மலர் என்றுமே உங்கள் அந்தரங்கத் தோழி. அதனால்தான் இந்த இரண்டு நிறுவனங்களும் இணைந்து 'இதுதான் சமையலறை' போட்டியை நடத்த முன்வந்துள்ளன.

**நீங்கள் செய்ய வேண்டியது:-**

உங்கள் சமையலறையை மூன்று கோணங்களில் வண்ணப்படங்களாக எடுத்துக் கொள்ளுங்கள். சமையலறையை ஏன் இவ்வாறு அமைத்திருக்கிறேன் என்ற ஒரு குறிப்பையும் எழுதுங்கள். இந்த அறிவிப்பின் கடைசியில் வெளிவந்திருக்கும் கூப்பனைப் பூர்த்தி செய்து மேற்

சொன்ன இரண்டையும் இணைத்து மங்கையர் மலர் முகவரிக்கு அனுப்பி வையுங்கள். புகைப்படங்களைத் திருப்பி அனுப்ப இயலாது.

போட்டி கூப்பன்கள் வந்து சேர வேண்டிய **கடைசி தேதி:20.4.'91**

* நடுவர்களால் புகைப்படங்கள், குறிப்பு இவற்றை வைத்து முதற் சுற்று தேர்வு நடக்கும். அவற்றிலிருந்து சில இல்லத்தரசிகளின் சமையலறைகள் தேர்ந்து எடுக்கப்படும்.

* அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட சமையலறைகளை நடுவர் குழு மே முதல் வாரத்தில் நேரில் வந்து பார்வையிடுவார்கள். (போக்கு வரத்து செலவு உங்களைச் சேராது.) முன் கூட்டியே அவரவருக்குத் தகவல் தெரிவிக்கப்படும்.

* அவற்றினின்று முதற் பரிசு, இரண்டாம் பரிசுகளுக்கான சமையலறைகள் தேர்ந்தெடுக்கப்படும்.

* இப் போட்டியில் கலந்து கொள்ள மிக அலங்காரமான, வசதியான சமையலறையாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. இல்லத்தரசியின் கவனத்தையும், கலையுணர்வையுமே அடிப்படைத் தகுதியாக எடுத்துக் கொள்கிறோம்.

* மங்கையர் மலரில் வெளியிடப்பட்டுள்ள கூப்பனை இணைத்து அனுப்பும் விண்ணப்பங்கள் மட்டுமே அங்கீகரிக்கப்படும்.

* போட்டி சம்பந்தமான எந்தவொரு முடிவிற்கும் ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.




'இதுதான் சமையலறைப் போட்டி' என உறையின் மீது குறிப்பிட்டு, மங்கையர் மலர், ரேஸ்கோர்ஸ் ரோடு, கிண்டி, சென்னை – 600 032 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

* போட்டியில் தேர்ந்தெடுக்கப்பட்ட சமையலறைகளும், இல்லத்தரசிகளின் புகைப்படங்களும் ஜூன் '91 மங்கையர் மலரில் வெளிவரும்.

* **போட்டி தமிழ்நாடு மாநிலத்திலுள்ள ஊர்களுக்கு மட்டுமே உரியது.** வெளி மாநிலங்களுக்கோ, வெளி நாட்டிற்கோ உரியது அல்ல.

**முதற் பரிசு: வி. ஸி. ஆர்.**

**2 இரண்டாம் பரிசுகள்: வாக்யூம் கிளீனர்**

**100 ஆறுதல் பரிசுகள்: 6 ஸ்ரீபெட் பாட்டில்கள் அடங்கிய கிஃப்ட் பேக்**

**இதுதான் சமையலறை**

**போட்டி கூப்பன்**

**.................................... ஆகிய நான் மேற்சொன்ன நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டுப் போட்டியில் கலந்து கொள்கிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.**

**கையொப்பம்.**









வீட்டுப் பணிப் பெண்களுக்கான கோலப் போட்டி

இந்து நாள் கல்யாணம் என்பார்களே. அது இன்றைக்கு எங்கே நடக்கிறது? ஆனால் அப்படித்தான் இருந்தது சமீபத்தில் நடந்து முடிந்த கோலப் போட்டிகள். தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் மங்கையர் மலரோடு இணைந்து கோலப் போட்டி நடத்த முன்வந்த போது, தென்நாட்டிற்கே உரிய கோலக்கலையை ஊக்குவிக்கிறோம் எனப் பெருமிதமே எழுந்தது.

○ சென்னையில் பெரிய அளவில் பொது மக்களுக்காகக் கோலப் போட்டி நடக்கவில்லை. இதுதான் முதல் தடவை.

○ எட்டு வயது சிறுமி முதல் என்பது

* புதுமைக் கோலம் — முதற் பரிசு * ஆர். விஜயா, சென்னை — 3




**பள்ளி மாணவியருக்கான கோலப் போட்டி**



• நடுவர்கள் ஷீலா, விஜயலட்சுமி, மணியம் செல்வன் தம்பதிகள்.

வயது ரங்கநாயகிப் பாட்டி வரை அனைத்துத் தரப்பினரும் கலந்து கொண்டார்கள். வேலைக்குப் போகும் பெண்கள், ரத்த தானம் செய்து விட்டு வந்த லயன்ஸ் இளப் சேவகி, பள்ளியிலிருந்து ஓடோடி வந்த மாணவி, காலை எட்டு மணிக்கே வந்து விட்ட மூதிய பெண்மணி, இப்படி இந்தக் கோலப்போட்டி நடந்த கண்காட்சித் திடலே களைகட்டி இருந்தது.

○ வீட்டில் உள்ள பணிப் பெண்களுக்காக இதுவரை யாரும் கோலப் போட்டி நடத்திய









தில்லை. அந்த வகையிலும் இது முதல் தடவைதான்.

○ மங்கையர் மலருக்குப் பல வெளியூர் வாசகிகள் குறைபட்டு எழுதி இருந்தார்கள். 'நாங்கள் எப்படி சென்னை வரை வருவது? சென்னை வாசகிகள் அதிர்ஷ்டசாலிகள்' என்று. ஆனாலும் பல வெளியூர் வாசகிகள் வந்து கலந்து கொண்டனர். கல்கத்தாவில் இருந்து உடுமலைப் பேட்டை வரை பலர்.



நடுவர்கள் உஷா, கவுரி, ஜெயராஜ் தம்பதிகள்.

## கல்லூரி மாணவியருக்கான கோலப் போட்டி

○ நிறைய கோலங்களில் மத ஒற்றுமையைப் பற்றிக் குறிப்பிட்டு இருந்தார்கள். பெண் குழந்தைகள் ஆண்டைப் பற்றிச் சிலர். எண்ணைப் பஞ்சம் பற்றி ஒரு





• புதுமைக் கோலங்கள்: இரண்டாம் பரிசு — ஜி. ராஜேஸ்வரி, சென்னை — 34.

கோலம். இப்படி கோலத்தை வெறும் கோல மாக இல்லாமல், அதில் சமுதாயக் கருத்துக் களையும் இணைத்திருந்தது நன்றாக இருந் தது.

○ முதல் நாள் வீட்டுப் பணிப் பெண்களுக் கான கோலப் போட்டிக்கு நடுவர்களாக ஓவியர் மணியம் செல்வன், திருமதி லீலா சங்கர சுப்பையன், திருமதி. விஜயலட்சுமி வந்திருந்தார்கள். லீலாவிற்கு ரொம்ப குறை. 'இத்தனை திறமை இருக்கே, இப்படி சாணி மெழுகிய மேடும் பள்ளமான தரையில் போட வைத்து விட்டார்களே, இப்படிப் பட்ட போட்டிகளுக்கு நிரந்தர அரங்கங் களை அமைக்க வேண்டும்' என்று.

○ இரண்டாவது நாள் ஓவியர் ஜெயராஜ், திருமதி. கமலி ஸ்ரீபால், திருமதி. உஷா செல்வம் நடுவர்கள். கல்லூரி மாணவிகளுக் கான போட்டியில் இரண்டாவது பரிசு பெற்ற கோலம், குறிப்பிட்ட கோட்டைத் தாண்டி விட்டது என்பதால் இரண்டாவது இடத்தைப் பெற்றது. ஜெயராஜ் அந்தக்

## இல்லத்தரசிகளுக்கான மாவுக் கோலம்



மூன்றாம் பரிசு
எஸ். ராதா, சென்னை — 53.

(16 — 6 வரிசை நேர்ப்புள்ளி இரு பக்கமும் ஒன்று விட்டு கடைசி 6 புள்ளி இரண்டு வரை)



முதற் பரிசு
கலைமதி, சென்னை — 101.



• ரங்கோலி: முதற் பரிசு —, கலைமதி, சென்னை — 101.

கோலத்தை வெகுவாகப் பாராட்டினார். 'இதிலிருந்து வாழ்க்கைத் தத்துவமே தெரிகிறது. எத்தனை திறமை இருந்தாலும் கட்டுப்பாடும் நமக்குள் இருக்க வேண்டும் என இதிலிருந்து தெரிகிறது' என்றார். கொடுத்த அரை மணியில் ஒரு தவறும் இல்லாமல் சிக்கலான அந்தக் கோலத்தைத் தீர்க்கமாகப் போட்டிருந்தாள் அந்த மாணவி.

○ மூன்றாவது நாள் மாவுக் கோலத்திற்குப் போட்ட இடம் போதாமல் நான்கு அரங்கங்களை ஏற்பாடு செய்ய வேண்டியதாகி விட்டது. இங்குதான் கண்காட்சியின்




• ரங்கோலி: இரண்டாம் பரிசு



* நடுவர்கள் லலிதா, கீதா, அனுராதா ரமணன்



* மாவுக் கோலம்

இரண்டாம் பரிசு
எம். எஸ். ஜெயலட்சுமி, சென்னை — 23.

சிறப்பு அதிகாரி மாரிமுத்துவின் இரவு பகல் பாராது உழைத்த திறமையைச் சொல்ல வேண்டும். அவரும், அவருடைய உதவியாளர்களும் விடிய விடிய அரங்கங்களைத் தயார்ப்படுத்துவதில் முனைந்தார்கள். அன்றைய தினம் ஓவியர் இராமு, திருமதி. சுந்தரி, திருமதி மோகனா சந்திரசேகரன், ஆகியோர் வந்திருந்தனர். போட்டி முடிவுகளை அறிவிக்க இரவு ஏழு மணி ஆயிற்று. எதைத் தேர்ந்தெடுப்பது என்பதில் அத்தனை சிக்கல். அப்படி எல்லாம் அற்புதமாக இருந்தன.

○ நான்காம் நாள் ரங்கோலிப் போட்டிக்கும் பெண்கள் நூற்றுக்கணக்கில் கோலமிட வந்திருந்தனர். நடுவர்களாக வந்திருந்த திருமதி. அனுராதா ரமணனும், திருமதி. கீதா மோகனும், ஓவியர் லலிதாவும் திணறி விட்டார்கள்.

இந்த இரண்டு போட்டிகளிலும் கலைமதி என்ற பெண்மணி முதல் பரிசு பெற்றார். இவர் வீட்டிலே மட்டுமே கோலம் போடுபவராம். எங்கேயும் யாரிடமும் கற்றுக் கொள்ளவில்லை. நல்ல நுணுக்கமான கை வேலை. கலரை இணைப்பதில் நல்ல கற்ப

* நடுவர்கள் சுந்தரி, மோகனா, இராமு தம்பதிகள்.





நடுவர்கள் அம்புஜம், ராஜலட்சுமி, வேத கணபதி.

னைத் திறன். இரண்டு நாளும் நடுவர்களின் ஏகோபித்த முடிவுகளில் இவர் முதற் பரிசு களைப் பெற்றார்.

○ கடைசி நாள் புதுமையான கோலங்களில் நீர் மேல் கோலம், நீர் மேல் பூக் கோலம், நீர் கீழ் கோலம், பூக் கோலம், பழக் கோலம் என அரங்கமே கமகமவென ஒரே 'வாசனை. அன்று நடுவர்களாக திருமதி. அம்புஜம் துரை, திருமதி. ராஜலட்சுமி விக்ரமன், ஓவியர் வேதகணபதி வந்திருந்தார்கள்.

வாழையின் சகல பாகங்களையும் பயன்படுத்தி ஒரு கோலம் போட்டிருந்தார்கள். பார்க்க ரம்யமான காட்சி. பழக் கோலத்தில் ஆதிமூலமே எனக் கதறிய யானையின் காட்சி நன்றாக இருந்தது. வெற்றிலையைக் கடைசி அடுக்காக வைத்து பழம் பூ காய் இலை என வண்ணக் கலவையை உண்டு படுத்தியவர் இரண்டாவது பரிசு தட்டிக் கொண்டு போனார்.

○ இத்தனை நாளும் நடந்த போட்டிகளின் பார்வையாளர்களைக் கண்காணித்த போது ஒரு விஷயம் தெரிந்தது. சாதாரணமாக ரங்கோலி, புதுமைக் கோலங்கள் போடுபவர்கள் அதன் அழகின் பரிமாணங்களை, டிசைன்களை அவ்வளவு எளிதாக வெளியில் சொல்வதில்லையாம். பலரும் வந்து 'ஸ்கெட்ச்' எடுத்து வரைந்து கொண்டு போனார்கள். தெரியாதவர்கள் தெரிந்து









• ரஞ்சனி — மூன்றாம் பரிசு

கொண்டார்கள்.

○ ஆறாவது நாள் மாலை தலைமைச் செயலாளர் மனைவி திருமதி. மோனி அந்தோணி பரிசுகளை வழங்கினார். எல்லோர் முகத்திலும் ஒரே மகிழ்ச்சி.

ஒரு கல்யாணம் நல்லபடியாக நடந்து முடிந்த சந்தோஷம் எல்லோருக்கும். மாரி முத்து, 'இது ஒரு நல்ல ஆரம்பம். இப்படி வருஷா வருஷம் நடத்த முயற்சிக்கிறோம்' என்றார்.

கோலப் போட்டிக்கு வந்திருந்த அத்தனை பேருக்கும் கோபுரம் பூசு மஞ்சள் தூள், சிக் க்ளாமர் ஷாம்பூ, பெட், நண்டு சோப், நந்தினி ஸ்வீட்ஸ் இவற்றுள் ஒன்று கொடுக்கப்பட்டது.

— **பவித்ரா.**

படங்கள், வண்ணப்படங்கள்: **உத்ரா.**

**மற்றும் ஆறுதல் பரிசுக் கோலங்கள் வரும் இதழ்களில் தொடரும்.**



• பரிசு பெறும் சுலைமதியுடன் உஷா செல்லம், மஞ்சுளா ரமேஷ், மோனி அந்தோனி

# ஃபில்டர் காப்பியின் சுவை...
# நிமிடங்களிலா அல்லது உடனடியாகவா?



ஃபில்டரில் மூன்று
ஸ்பூன் காப்பித்
தூளை போடவும்.

கொதிக்கின்ற
வெந்நீரை மெது-
வாக ஃபில்டரில்
ஊற்றவும்.





டிகாக்ஷன்
இறங்கும் வரை
காத்திருங்கள்

டிகாக்ஷன்
ரெடியா?
டம்ளரில் ஊற்றி
சுவைக்கு பாலும்,
சர்க்கரையும்
சேர்க்கவும்.






ஒரு ஸ்பூன் ப்ரூ
இன்ஸ்டன்ட்
எடுத்து டம்ளரில்
போடவும்.



சூடான வெந்நீரில்
கலக்கவும்.

சுவைக்கு பாலும்,
சர்க்கரையும்
சேர்க்கவும்.






ஆஹா! ஃபில்டர் காப்பியின் அருமையான சுவை

## ப்ரூ

இது ஃபில்டர் காப்பியைப் போன்றே சுவையானது.
ஸ்ட்ராங்கானது, சௌகரியமானது, சிக்கனமானது

Ogilvy & Mather 3172 TAM

# 13

அந்தப் பேப்பர் விளம்பரம் 'பளிச்' சென்று கண்ணில் பட்டது. ஒரு பெண்கள் நிறுவனத்தில் டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கற்றுக் கொடுக்கிறார்களாம், இல வசமாக. இதில் சேர்ந்தால் என்ன? கல்லூரிப் படிப்பு என்பது கேள்விக்குறியாக இருக்கும் இந்த நேரத்தில் இப்படி, கற்றுக் கொண்டாலாவது வேலை கிடைக்கும். அம்மாவுக்கும் உதவியாக இருக்குமே!

சித்ரா ஓரக்கண்களால் சமையல் அறையில் இருந்த அம்மாவைப் பார்த்தாள். வாய் ஏதோ சுலோகம் முணுமுணுக்க, கை வேலை பார்த்துக் கொண்டிருந்தது. கேட்டுப் பார்த்தால் என்ன? மெதுவாக எழுந்து போனாள்.

''அம்மா...''

'என்ன?' என்பது போலத் திரும்பினாள் சாந்தா. பம்ப் ஸ்டவ்வை அடித்துக் கொண்டே.

''ரொம்ப அடிக்காதே. டமால்னு வெடிச்சுடும்'' என்றாள் சித்ரா சிரித்துக் கொண்டே.

''இந்த முள்ளங்கி வெந்தே தொலைக்க மாட்டேங்கிறதேடீ. முத்தல் போல இருக்கு. மாமி கொடுத்தாளேன்னு வாங்கிண்டு வந்துட்டேன்.''

''மாமி முத்தலா இருக்கவேதான் உனக்குக் கொடுத்திருக்கா...''

''போகட்டும். இந்தப் பேச்சுன்னாவே உனக்குக் கோபம் வந்துடும். விஷயம் என்ன சொல்லு...''

''கே. கே. நகர்ல ஒரு இன்ஸ்டிடியூட்லே டைப், ஷார்ட் ஹாண்ட் கோர்ஸ் சொல்லித் தர்றாளாம். இன்னைக்குப் போய் அப்ளிகேஷன் வாங்கிண்டு வர்றேன்மா...''

என்ற மகளை நிமிர்ந்து பார்த்தாள் சாந்தா. அவளுடைய மௌனம் சித்ராவைக் கலக்கியது.

''அம்மா...''

''ஏம்மா, இந்த அம்மாவாலே காலேஜ் படிக்க வைக்க முடியாதுன்னா...?''

''அம்மா...'' கரகரவென்று கண்களில் கண்ணீர் வந்தது. சாந்தாவைக் கட்டிக் கொண்டாள். ''ஸாரிம்மா... அம்மா...'' விம்மும் பெண்ணை அணைத்துக் கொண்டாள்.

''சித்து... நேத்து அண்ணா நடந்துண்ட விதம் உனக்குக் கவலையாப் போயிடுத்தா... அண்ணாவை நம்பியா இதுநாள் வரை உன் படிப்பைப் படிச்சே...? என் கை இருக்குடீ... பன்னிரண்டு வயசிலே கரண்டியைக் கையிலே எடுத்தவ... அது நம்மைக் காப்பாத்தும்...''

''அம்மா... அம்மா...'' கதறி அழுதாள் சித்ரா. சாந்தாவிற்கு அவளையும் மீறிக் கண்களில் கண்ணீர் வழிந்தது.

கடவுளே... எனக்குற்ற வாழ்க்கை இது தானா? நீ ரொம்ப மனம் நொந்து போயிருந்த நேரத்தில் என் வாழ்க்கையைப் படைச்சியா...? ஏன் எனக்கு மட்டும் அலையே ஓய மாட்டேனென்கிறது...?''

கண நேரத்தில் தன்னைச் சமாளித்துக் கொண்டவள்,

''சீ... சீ... என்னடீ இது...? அழாதே... நீ போய் அப்ளிகேஷன் வாங்கிண்டு வா. முடிஞ்சா காலேஜ் படி. இல்லே இந்த வருஷம் இந்த கோர்ஸ் படியேன். அதனால என்ன? டைப் படிச்சா ரொம்ப நல்லதுன்னு மணி வீட்ல கூட அன்னிக்குப் பேசிண்டிருந்தா... அடுத்த வருஷம் காலேஜ் படிச்சாப் போச்சு...''

என்று சிரித்தாள். சித்ரா எழுந்து கொண்டாள். ''மணி மாமா வீட்ல டைப்ரைட்டிங், ஷார்ட்ஹேண்ட் பத்தி என்ன பேச்சு...?''

''யமுனாவை அதில சேர்க்கிறாங்களாம். படிச்சு வச்சுண்டா எப்பவானாலும் வேலை கிடைக்குமாமே...?''

''அவங்க செய்யறது எப்பவும் அவங்களுக்கு உசத்தி. யமுனாவுக்கு டோட்டல் ரொம்ப கொறைச்சல். நிச்சயமா காலேஜ்ல சீட் கிடைக்காது. அதுக்கு இப்படிக் கௌரவமாச் சொல்லிப்பா...''

எழுந்து தன்னுடைய மேஜையருகே போய் அமர்ந்து கொண்டாள். யமுனா சுமாராப் படிச்சாலும் அவளுக்கும் இதே கோர்ஸ். ஸ்கூல் பர்ஸ்ட்டே வந்தாலும் எனக்கும் இதேதான். சிரிப்பு வந்தது... இதற்கு யாரைக் குற்றம் சொல்ல?

அவளுக்கு எல்லாவித வசதியும் உண்டு. எனக்கு அம்மா சொன்ன மாதிரி அம்மாவோட கையும், கரண்டியும் தவிர யார் துணை? அண்ணா ஏன் இப்படி மாறிட்டான்? பருவ வயசுன்னா அது இப்படிக் கூடவா மாறச் சொல்லும்? எத்தனை அடக்கமாக இருந்தவன்? வெள்ளை வெளே

## யௌவன கர்வம்



ரென்று வேட்டியைத் துவைத்துக் கட்டிக் கொண்டு, சிறு விபூதிக் கீற்றுடன், அதட்டலே இல்லாமல் பேசுபவன் இன்றைக்கு எல்லாம் தலைகீழாக...

நேற்று இரவு... அப்பா, எப்படி இந்த அளவுக்குப் பேசும் துணிவு வந்தது?

இரவு பதினோரு மணிக்குப் படபட வெனக் கதவைத் தட்டிய ஸ்ரீதரனுக்குச் சித்ரா கதவைத் திறக்கும் வரை பொறுமை இல்லை.

"என்னண்ணா...? இப்பதான் அம்மா தூங்கினா..." என்று கிசுகிசுத்த சித்ராவைப் பொருட்படுத்தாமல் உள்ளே சென்றான். அவனிடம் இருந்து கிளம்பிய நறுமணம் சென்ட்டா, பாக்கா, சிகரெட்டா எது வென்று தெரியவில்லை. அதற்குள் சாந்தா விழித்துக் கொண்டாள்.

"ஸ்ரீதரா... ஏம்பா இவ்வளவு நேரம்?" சிவந்த கண்களுடன் எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

"கொஞ்சம் வேலை இருந்தது..." சட்டையைக் கழற்றியவன், பேண்ட்டை மாற்றி லுங்கியில் புகுந்தான்.

"டிரெஸ் சரியா இருந்ததாப்பா...?"

"ம்...ம்..."

"சித்ரா... அண்ணாவுக்குச் சாப்பாடு போடு..."

"வேண்டாம்... பசியில்லே..."

"சாப்பிடாம படுத்துக்காதேடா... ஒரு வாய் சாப்பிடு..."

"சும்மா ஏன் தொண தொணங்கிறே? தூங்கறவ, தூங்கறதுதானே....? எனக்குப் பசிச்சா சாப்பிடத் தெரியாதா...?"

சாந்தா புரியாமல் ஸ்ரீதரனைப் பார்த்தாள். என்ன ஆச்சு இவனுக்கு...?

"ஸ்ரீதரா..."

பதில் பேசாமல் வெளியே கை, கால் கழுவிக் கொண்டு வந்தவன் படுக்கையை விரித்தான்.

சாந்தா எழுந்து விட்டாள். சித்ரா அவள் பக்கத்தில் வந்து, "அம்மா, நீ படுத்துக்கோ... அண்ணா தூங்கட்டும்..." என்றாள்.

'சள்'ளென்று எரிந்து விழுந்தான் ஸ்ரீதரன். "என்ன அர்த்தராத்திரிலே ரெண்டு பேரும் டிராமா போடறீங்க? மனுஷன் வந்தால் நிம்மதியா இருக்க முடியறதில்ல. எப்பப் பாரு கொழந்தைக்குப் பின்னாடியே சுத்தற மாதிரி என்ன எழவு...?"

சாந்தாவுக்குக் கோபம் வந்தது. "ஏன் இப்படி எரிஞ்சு விழறே? என்ன ஆயிடிச்சு இப்போ? சாப்பிட்டுட்டுத் தூங்குன்னு சொன்னது தப்பா? இப்பல்லாம் ஏன் உனக்கு இப்படிக் கோபம் வர்றது? நான் என்னடா பண்ணுவேன்? அப்பா இல்லாத குழந்தைகளை வச்சுண்டு திண்டாடறேன். இத்தனை நாள் சரியா இருந்த நீ என்னென்னவோ பேசறே...?"

ஸ்ரீதரனுக்கு அடக்கி வைத்திருந்த கோபமெல்லாம் பீறிட்டது. "உன் புலம்பலைக் கேட்டுக்கேட்டு எனக்கு வெறுத்துப்போறது. நீயா இழுத்து விட்டுண்ட பாரங்களுக்கு என்னை என்ன பண்ணச் சொல்றே?" என்று சித்ராவை முறைத்தான். புரியாமல் அம்மாவைப் பார்த்தாள் சித்ரா.

"போதும் வாயை மூடுடா... எந்த பாரத்தையும் நீ தாங்க வேண்டாம். புள்ளையா லட்சணமா இரு. அது போதும்..."

ஸ்ரீதரன் வளர்ந்த பண்பாட்டில் அதற்குள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு விட்டான். அவனுக்குத் தலையை வலித்தது. அவனுடைய திறமையைக் கல்லூரியே புகழ்



ஆப்பிளைக் கூழாக்கி மைதா மாவுடன் வெண்ணெயும் போட்டுப் பிசைந்து லேசாக உப்புப் போட்டுக் கலந்து சப்பாத்தி செய்து சாப்பிடுகின்றனர். அது ஒரு தனிச் சுவையாக இருக்கிறது. மாதிரிக்காக கொஞ்சமாகச் செய்து சாப்பிட்டுப் பாருங்கள். பழுத்த சிம்லா ஆப்பிள்கள் வேண்டாம். பச்சை பெங்களூர் ஆப்பிள் அதற்குச் சுவையாக இருக்கும்!

— சீதா.

கிறது. நண்பர்களுடன் மெதுவாக ஆரம்பித்து இருக்கும் சிறிய வியாபாரத்தில் அவனுடைய யோசனைகளைக் கண்டு பலத்த வரவேற்பு. அவன் போகும் வீடுகளில் எல்லாம் நாகரிகம் கொழித்தது.

வீட்டுக்கு வந்தால் முதுகு இல்லாத ஸ்டூலும், நைந்து போன ஜமுக்காளமும்... இரு வேறு துருவங்களில் எரிச்சலூட்டும் அம்மாவின் பேச்சும்..... அதே சமயம் அவளின் தியாகங்கள் நெருப்பாய்ச் சுட்டது....

தலையை அழுத்திப் பிடித்துக் கொண்டான். திடீரென்று வேறு உலகத்தில் நுழைந்ததால் ஏற்பட்ட குழப்பம்.

அப்படியே திரும்பிப் படுத்துப் போர்வையை இழுத்து மூடிக் கொண்டான்.

சித்ரா அம்மாவைப் படுக்க வைத்தாள். அவளுடன் தானும் படுத்துக் கொண்டாள். மனசு உறுத்தியது. அண்ணா என்னை ஏன் அப்படி முறைத்தான்?

'நீயா இழுத்து விட்டுண்ட பாரங்கள்'னு சொல்லி என்னை முறைத்தானே...? அதற்கு என்ன அர்த்தம்?'

''ஏய் சித்ரா... எத்தனை தடவை கத்தறது...?'' அம்மா அவளைத் தட்டினாள்.

'சட்'டென்று பேப்பரைப் போட்டுவிட்டு நிகழ் காலத்துக்கு வந்தாள். ''என்னம்மா...?''

''இன்னிக்கு எனக்கு மாமா விட்டுக்குப் போற வேலையில்லை. நீ சாப்பிட்டுட்டுக் கே. கே. நகருக்குப் போயிட்டு வந்துடு. வா...''

சாப்பிட்டுக் கொண்டு இருக்கும் போது தாயைத் தயக்கத்துடன் பார்த்தாள். கேட்கலாமா? வியர்வையில் கோடு போலக் குங்குமம் கரைந்து ஓடியது. தலை நரைத்து முகம் ஒட்டி... ஒரு காலத்தில் இவள் அழகியாக இருந்திருக்க வேண்டும்...

''அம்மா...''

''என்ன...?'' சாந்தா அவளை நிமிர்ந்து பார்த்தாள். அவள் எதற்குப் பயந்தாளோ அதையே சித்ரா கேட்டாள்.

''ராத்திரி அண்ணா என்னம்மா சொன்னான்?''

''என்ன சொன்னான்...?''

''நீயா பாரத்தை இழுத்து விட்டுண்டேன்னானே...?''

''ம்... என்னமோ போ... அவன் பேசறது என்ன புரிஞ்சுது...? உங்க படிப்புல ரொம்பச் செலவாறது இல்லையா...? அதைச் சொல்லியிருப்பான். அதைப் பெரிசா எடுத்துக்காதே...! அவனுக்கு இப்போ வயசு அப்படி... இன்னும் ரெண்டு வருஷம் போச்சுன்னா எல்லாம் சரியாப் போயிடும் போ...'' என்று சமாளித்தாள்.

''அது என்னம்மா ரெண்டு வருஷம்...?''

''வயசுப் பையன் மனசுல குழப்பம் இருக்கும். அதுவும் ஆம்பளை இல்லாத வீடு... அவனோட சிநேகிதாள்ளாம் எப்படி எப்படியோ இருப்பா... அப்படித்தான் கோபம் கோபமா வரும்... அவனே படிச்சு உத்தியோகத்துல உட்கார்ந்துண்டுட்டான்னு வச்சுக்கோ.... எல்லாம் சரியாப் போயிடும்...''

''உனக்கு எப்படித் தெரியும்மா இதெல்லாம்?'' என்று சித்ரா கேட்க, சாந்தா சிரித்தாள்.

''எத்தனை பேரைப் பார்க்கிறேன். எத்தனை வீட்டுக்குள்ளே புகுந்து புறப்படறேன். அத்தனை வீட்டுக் கதையும் காதிலே விழுத்தானே செய்யறது...?''

''போம்மா... வாயை மூடிண்டு இருந்துண்டு எத்தனை வம்பு பேசறே நீ...'' என்று சித்ராவும் சிரித்தாள்.

எழுந்து கையைக் கழுவிக் கொண்டு எளிமையாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டவள் புறப்பட்டு விட்டாள்.

சாந்தா தானும் சாப்பிட்டேன் என்று பேர் பண்ணிவிட்டு, புடைவைத் தலைப்பை விரித்து, சமையல் ரூம் வாசற்படி கட்டையில் தலையை வைத்துக் கொண்டு படுத்தாள்.

ஸ்ரீதரன் சாப்பாடு அப்படியே இருக்கிறது. காலையில் அவன் புறப்படும் போது கேட்டதற்கு, குற்ற உணர்வில் தலையே நிமிரவில்லை.

''மத்தியானம் வந்துடுவேன். அப்ப சாப்பிடறேன்...'' என்று முணுமுணுத்துவிட்டுப் போய்விட்டான். அவளும் வற்புறுத்தவில்லை. நேற்று போல ஒன்றுக்கு ஒன்று பேசப் போகிறானே என்று விட்டு விட்டாள்.

தூக்கம் கண்களைச் சுழற்றியது. ராத்திரி வெகு நேரம் தூங்காமல் புரண்டு கொண்டிருந்தாள். எங்கேயோ நடுநிசியில் மணி ஒன்று, இரண்டு என அடித்துக் கொண்டிருந்ததையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தவள் தன்னையும் அறியாமல் தூங்கியிருக்கிறாள். அந்த அரைகுறைத் தூக்கம் இப்போது கண்களைக் கனமாக்கியது.

எப்போது தூங்கினாளோ, கதவு தட்டும் சப்தத்தில் விழித்துக் கொண்டாள். ''யாரு...?'' பகல் வெளிச்சம் கண்களைக் கூசியது. ஸ்ரீதரன்தான் சாப்பிட வந்து விட்டானோ?

''சாந்தா மாமி வீடு இதுதானே...?''

''ஆமா... நான்தான்... எங்கேயிருந்து வர்றீங்க...?'' எழுந்து கதவருகே சென்றாள்.

வாசலில் ஒரு நாற்பது வயது மதிக்கத்

# பெரியவளா இருப்பதில் பெரிய குஷி, சுதாவில் இருக்கு அற்புத ருசி!



சுதா ஸாஃப்ட் ட்ரிங்க் கான்ஸன்ட்ரேட் இருந்தா எத்தனை பெரிய குஷி தெரியுமா. அதன் ஃப்ளேவர்ஸாம் பெரிய ஜோர்-13 விதம் இருக்கு! ஒரு பேக்கிலே 32 கிளாஸ் நிறைய பானம் கிடைக்கும். சுதா இருந்தால் எத்தனை பெரிய குஷி பார்த்தீங்களா.






'பெரிய' சின்னவர்களின் பெரிய விருப்பம்.

# சுதா



விற்பனையாளர்கள் :

ஸாஃப்ட் ட்ரிங்க் கான்ஸன்ட்ரேட்

everest/90/SFF/63 tm

---

தாய்மார்களுக்கு ஓர் நற்செய்தி!

**37 ஆண்டுகளாக வாடிக்கைக்காரர்களின் சேவையில் நன் மதிப்பைப் பெற்ற ஸ்தாபனம்!**

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்

**இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ் எஸ்பிளனேட் - சென்னை — 600 108**

**எங்கள் தயாரிப்புகள்**




**உயர்தர மைதா, ரவை, ஆட்டா**

**சுத்தமான கோதுமையில் நவீன முறையில் தயாரிக்கப்பட்டவை**

உங்கள் குடும்பத்தினருக்கு சுவை மிக்க, ஊட்டச் சத்து நிறைந்த சிக்கன மான செலவில் எளிதில் தயாரிக்கக்கூடிய பலவகை இனிப்பு பலகாரங்கள், பரோட்டா, பூரி, ரொட்டி, கேக், உப்புமா, சப்பாத்தி மற்றும் அவரவர்கள் சுவைக்கு ஏற்ற பண்டங்கள் என்றென்றும் தயாரித்திட சூரியன் மார்க் மைதா, ரவை, ஆட்டா உபயோகியுங்கள்.

ஒரு கிலோ பாக்கெட்டுகளில் எல்லா கடைகளிலும் கிடைக்கும்

தொலைபேசி எண்:

தலைமை அலுவலகம்: 562043, 562044 மில்ஸ்: 661701, 662579

GRAMS: Century TELEX: 41-8118 CFM IN



# A DIFFERENT SCHOOL OF THOUGHT

## A.V.Rm.V. MATRICULATION HIGHER SECONDARY SCHOOL WAS BORN TO BREAK YOUR ROUTINE CONCRETE THOUGHT ABOUT SCHOOLS.



Take a look at the features:–

- The School is situated in a sprawling 40 acre land free from the crowds and pollution.
- The educational policy of the management that ensures sound general education backed up by a broader and healthier outlook.



- Beautiful playgrounds for games.
- 100% success in matriculation examinations since inception.
- COMPUTER Education & typewriting free for all above Std. VII.



- Training in Fine Arts like Music, Violin, Mirdangam free for all students.



- Comfortable and tidy hostel facilities, separate for boys and girls.

For registration, prospectus and admission form — please send Rs. 50/- by D.D./M.O. to :

**A.V.Rm.V. MATRICULATION HIGHER SECONDARY SCHOOL**

(Recognised by the Government of Tamil Nadu)
Ambasamudram – 627 401, Tirunelveli District

**PREFERENCE TO HOSTELITES FOR ADMISSION**



WANTED TEACHERS IN MATHS, COMPUTER SCIENCE, HISTORY, GEOGRAPHY & OTHER SUBJECTS. APPLY TO THE CORRESPONDENT, WITHIN TEN DAYS.

தக்க பெண்மணி நின்று கொண்டிருந்தாள்.

"வாங்க... உள்ளே வாங்க..."

உள்ளே வந்தவள், சாந்தா கொண்டு வந்து போட்ட ஸ்டூலில் அமர்ந்து கொண்டாள்.

"தண்ணி சாப்பிடறீங்களா...?"

"ஆமா... ரொம்ப வெயில் இல்லை..."

உள்ளே போய்த் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள்.

"நாங்க மெட்ராஸுக்குப் புதுசு. கல்கத்தாவில் இருந்து மாத்திண்டு வந்து ரெண்டு மாசந்தான் ஆச்சு. மாட்டுப் பொண்ணுக்கு வர்ற வெள்ளிக்கிழமை சீமந்தம். சமையலுக்கு யாரைச் சொல்றதுன்னு இருந்தப்ப எங்க வீட்டுப் பக்கத்துல அவுட்ஹவுஸ்ல காந்தனாமே, சாஸ்திரிகளின் பையன் இருக்கான். அவன்தான் உங்க அட்ரஸ் சொன்னான்..."

"என்னிக்குச் சொன்னீங்க...?"

"வர்ற வெள்ளிக்கிழமை... இருபத்தேழாந் தேதி..."

"சரி, வர்றேன்... அட்ரஸ் எழுதிக் கொடுத்திடுங்க..."

சமையலுக்கு வேண்டிய மெனுவையும், அட்ரஸையும் சாந்தாவிடம் எழுதிக் கொடுத்தவள், "காலையிலே அஞ்சு மணிக்கெல்லாம் வந்துட்டாத் தேவலை..." என்றாள்.

எழுதிக் கொடுத்த காகிதத்தைப் பார்த்தாள் சாந்தா. "சங்கர சுப்ரமணியன், ரங்கராஜபுரம், முதல் தெரு..." என்று இருந்தது.

எழுந்த அந்தப் பெண், "என் பேரு மங்களா..." என்று புன்னகைத்துக் கொண்டே, பையைத் திறந்து இருபது ரூபாய் நோட்டை நீட்டினாள்.

"திரும்பவும் வியாழக்கிழமை யாராவது பையனை அனுப்பட்டுமா...?" என்றாள்.

"அதெல்லாம் வேண்டாம். அவசியம் வெள்ளிக்கிழமை காலைல வந்துடறேன். ஸ்வீட் மைசூர் பாகுதானே போட்டிருக்கீங்க? நிமிஷமாப் பண்ணிடலாம். பன்னிரண்டரைக்கு இலை போட்டால் போதும் இல்லையா...?"

"தாராளமா... அப்ப நான் கிளம்பறேன்..."

"வாங்க..."

வாசலில் கார் கிளம்பும் சப்தம் கேட்டது.

உள்ளே நுழைந்த சித்ரா, "யாரும்மா, அந்த வைரத்தோடு?" என்றாள்.

"யாரோ மாமி. சீமந்தமாம்."

"அம்மா, இந்த வாரமே க்ளாஸ் ஆரம்பிக்கிறது. நாளைலேர்ந்தே போகலாமாம். நான் போறேன்மா. வீட்டிலே உட்கார்ந்துண்டு போரடிக்கிறது."

"ஃபீஸ்...?"

"அதான் ஃப்ரீன்னு சொன்னேனே! அட்மிஷன் ஃபீஸ் பத்து ரூபாய், அவ்வளவுதான்..."

"அப்ப என்ன, போயேன்..."

சித்ரா குதூகலத்தோடு ஓடினாள். சாந்தா பெருமூச்செறிந்தாள்.

அடுத்த வாரம் ரங்கராஜபுரத்திற்கு முதல் பஸ் பிடித்து அவர்கள் வீட்டிற்குப் போனபோது, வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவள் கையில் இருந்த பையைப் பார்த்தவுடன் புரிந்து கொண்டார்கள்.

"அம்மா, சமையல் மாமி வந்தாச்சு..."

உள்ளிருந்து மங்களா ஓடி வந்தாள். "வாங்கோ... கரெக்டா சொன்னபடி வந்துட்டேளே...?"

நாகரிகமாக அலங்கரிக்கப்பட்ட வரவேற்பறையைத் தாண்டிச் சமையலறையை அடைந்தார்கள். இன்னொரு வயதான மாமி காப்பி கலந்து கொண்டிருந்தாள். வீடு முழுக்க தூங்கியும், எழுந்தும் இருந்த ரெண்டுங்கெட்டான் நிலை.

"இவர் மாட்டுப் பொண்ணோட அம்மா..." என அந்தப் பெண்மணியை அறிமுகம் செய்து வைத்தாள் மங்களா.

"நீங்க இருங்க மாமி. காப்பியை நான் கலக்கறேன்" என்று பையை ஒருபுறமாக வைத்த சாந்தா களத்தில் இறங்கினாள். அவள் வந்த பிறகு பரபரவென்று வீடே விழித்துக் கொண்டது. சமையல் ஆக ஆக, அதைச் சுற்றி எல்லா வேலைகளும் ஆரம்பித்து விட்டன.

வீட்டு ஆண்களுக்கெல்லாம் டிபன், காப்பி சென்றது. உள்ளேயே இருந்து கொண்டு பம்பரமாகச் சுழன்று, மற்றவர்களையும் சுழல விட்டாள் சாந்தா.

மங்களாவின் மருமகளைப் பார்க்கப் பார்க்க என்னவோ செய்தது சாந்தாவிற்கு. இவளை எங்கேயோ பார்த்தது போல இருந்தது.

யார் வீட்டு விசேஷத்திற்காவது வந்திருப்பாளோ? எங்கே பார்த்திருக்கிறோம்? ரொம்ப நேரமாக யோசித்தாள்.

சாப்பாடெல்லாம் முடிந்து, ஓரளவு வேலைகள் முடிந்தவுடன் சாந்தா கிளம்பத் தயாரானாள். அவளிடம் வந்த மங்களா, "ரொம்பச் சந்தோஷம் மாமி. மெட்ராஸுக்குப் புதுசாச்சேன்னு பயந்தேன். ரொம்ப நல்லாப் பண்ணிட்டீங்க..." என்றாள்.

சாந்தா சிரித்தாள். "நீங்க மெட்ராஸுக்குப் புதுசுங்கறீங்க. எனக்கு உங்க மருமகளைப் பார்த்தால் ரொம்பத் தெரிஞ்ச முகமா

**வீட்டிலுள்ள கொட்டாங்கச்சியில் மணலையும், சாம்பலையும் கலந்து நிரப்பி, காய வைத்த கொத்துமல்லி விதைகளை இரண்டாக உடைத்துத் தூவி, நீர் தெளித்துச் சமையலறை ஜன்னல் ஓரங்களில் நிறுத்தி வையுங்கள். பச்சைப் பசேலென்று கொத்துமல்லி துளிர் விட்டு வரும். இதில் மணலை மாற்றுவது எளிது. இடத்தை அடைக்காது.**

**— உமா.**

இருக்கு...'' என்றாள்.

''லாவண்யாவையா? இருக்காதே... அவா அப்பா அம்மாவும் பாம்பேயிலே செட்டிலானவாளாச்சே...?'' என்றாள் மங்களா.

''அப்படியா...?'' என்ற சாந்தா மங்களா இருநூறு ரூபாய் வைத்துக் கொடுத்த தாம்பூலத்தைப் பெற்றுக் கொண்டு கிளம்பினாள். அதே சமயம் பெண்ணின் அம்மா உள்ளே நுழைந்தாள்.

''நான் சொல்லிண்டே இருந்தேன் பாருங்கோ... லாவண்யாவோட அப்பா வந்தாச்சு... போன இடத்திலே ஏதோ ஸ்டிரைக்காம்... பஸ்கள் ஒண்ணும் கிடையாதாம். என்னடா ரிசர்வேஷன் பண்ண டிரெயின்லேயும் வரலையேன்னு... இத்தனை நாழி காமிச்சுக்கலை...'' சொல்லும் போதே கண்கள் கலங்கிவிட்டது. மங்களா அந்தப் பெண்ணைத் தட்டிக் கொடுத்தாள்.

''நல்லபடியா மாமா வந்தாரேன்னு சந்தோஷப்படுங்கோ... மொதல்லே சாப்பிடட்டும்...'' என்றவள், சாந்தாவைப் பார்த்து, ''நீங்க கிளம்புங்க மாமி... நாங்க பார்த்துக்கறோம்'' என்றாள்.

இரண்டு பேருமாகச் சமையலறையை விட்டு வெளியே வந்தார்கள். அதே சமயம் ஒரு துண்டைத் தோளில் போட்டவாறே உடை மாற்றிக் கொண்டு வெளியே வந்தவரைப் பார்த்து,

''வாங்க மாமா... என்ன இப்படிப் பண்ணிட்டீங்க...? மாமிக்கு இருப்புக் கொள்ளலை... ஏதாவது சொன்னால் அழுதுடுவா போல இருந்தது...'' என்றாள்.

''அவ எப்பவும் அப்படித்தான். ரொம்பப் பயந்த மாதிரி...'' என்று சிரித்தார்.

அவரைப் பார்க்கப் பார்க்க அதிர்ந்து போய் நின்றாள் சாந்தா. எங்கேயோ ஆஸ்பத்திரியில் தன் மகனைப் பார்த்து அணைத்து, உச்சி மோந்து, தன்னிடம் ஒப்படைத்து விட்டுப் போனவர்... இருபத்து மூன்று வருடங்களுக்குப் பிறகு இன்றைக்குத்தான் பார்க்கிறாள்...

தலை நரைத்தாலும், கண்ணாடி தடிமன் மாறியிருந்தாலும், குழந்தையைப் போலத் தன்னைப் பயந்து பயந்து அணைத்து, அன்பு பேசிப் பழகிய அதே சங்கரன்...

அப்படியே உறைந்து நின்று விட்டாள்.

மங்களாவிடம் பேசிவிட்டு அவளைத் தாண்டிச் செல்லும் போது தற்செயலாகச் சம்பந்திக்குப் பக்கத்தில் இருக்கும் பெண்ணைப் பார்த்துச் சங்கரனும் அதிர்ந்து போய் விட்டார்.

எத்தனை ஆண்டுகள் ஆனால் என்ன? ஒருவருக்கொருவர் அறியாமல் போய்விடும் உறவா இது...?

மங்களா, ''மாமி... மாமி...'' என்று அழைக்க அழைக்க, சேர்ந்திருந்த ப்ளட் பிரஷர் சாந்தாவைத் தாக்க, அப்படியே சரிந்து மயங்கி விழுந்து விட்டாள்.

(தொடரும்)



அடிக்கடி டிபன் செய்பவர்கள் வீட்டில், தயிர் வீணாவதற்கு வழியிருக்கிறது. அவர்கள் மிளகாய்ப் பொடியுடன் தயிரைக் குழைத்து, இட்லி அல்லது தோசைக்குத் தொட்டுச் சாப்பிட்டால், சுவையும் அபாரமாக இருக்கும். எண்ணெய் செலவும் மிச்சம்!

— சி. ராஜலட்சுமி.

ஊறுகாய் தீர்ந்துவிட்டதே என்று கவலை வேண்டாம். 10, 15 பச்சை மிளகாயை எடுத்து அரிசி, பருப்பு இவைகளைக் குக்கரில் வைக்கும் போது, இதையும் ஒரு தட்டில் வைத்துக் குக்கரில் வைக்கவும். குக்கரைத் திறந்ததும் வெந்த பச்சை மிளகாய்களை சாம்பார் வைக்கும் போது அத்துடன் மீண்டும் சாம்பாருடன் கொதிக்க விடவும். சாம்பார் கொதி வந்தவுடன் இந்தப் பச்சை மிளகாய்களைத் தனியாக எடுத்து விடவும். சாம்பாரின் புளிப்பு, காரத்துடன் சேர்ந்த இந்தப் பச்சை மிளகாய் சாப்பிட ருசியாக இருக்கும். காரம் அதிகம் இருக்காது. காய் கறிகளை வேக வைக்கும் போதும் இப்படிப் பச்சை மிளகாய்களைப் போட்டு — எடுத்துச் சாப்பிட ருசியாக இருக்கும்.

— கே. அம்புஜவல்லி.



# துணிவே துணையாக -தொழிலே குடும்பமாக

பெண்ணுக்குத் திருமணம் முடித்து விட்டால் போதும் — தன் பொறுப்பு கழிந்துவிடும் என நினைக்கும் பெற்றோர் பலர். 'ஆண் துணையில்லாவிட்டால் பெண்ணால் தனித்து வாழவே முடியாது; கொடி போன்றவள் பெண் — அவள் சார்ந்திருக்க ஒரு கொழுகொம்பு தேவை' — என்ற எண்ணம் பொதுவாக எல்லோருக்குமே உண்டு. ஆனால் ஆண் துணையே இல்லாமல் தனக்கென ஒரு துறையைத் தேடி, அதில் புகழ் பெற்றுச் சாதனை பல புரிந்து வாழும் மங்கையர் பலர். அவர்களில் திருமணமே புரிந்து கொள்ளாத ஒரு பெண் (டாக்டர் பிரதிகா சாரி), மணவிலக்கு பெற்ற ஒரு பெண்மணி (சௌகார் ஜானகி), திருமணமான உடனேயே கணவரை இழந்து மண வாழ்வே தெரியாத ஒரு பெண்மணி (டாக்டர் ஈ. வி. கல்யாணி) ஆகிய மூன்று பேரும் தங்கள் அனுபவங்களைக் கூறுகிறார்கள்:



பிரதிகா சாரி

நரம்பியல் மருத்துவத்துடன், நரம்பியல் அறுவை சிகிச்சையும் முடித்துள்ள முதல் பெண்மணி (ஆசியாவிலேயே) டாக்டர் செல்வி பிரதிகா சாரி:

''சிறு வயது முதலே என்னுடைய ஒரே லட்சியம் மருத்துவராக வேண்டும் என்பது தான். பள்ளி இறுதி வகுப்பு வரை ஹோலி ஏன்ஜல்ஸ் கான்வென்டில் படித்தேன். பின்பு மருத்துவம் படித்துத் தேறினேன். இங்கு என் ஆசிரியர் டாக்டர் திரு. டேண்டி மதுரநாயகம் அவர்களைப் பற்றி நான் குறிப்பிட்டே ஆக வேண்டும். அவர் கொடுத்த ஊக்கத்தினால்தான் எம்.டி., டி.எம் (நியூராலஜி) பி.எச்டி எனத் தொடர்ந்து படித்தேன். முதலில் குழந்தை மருத்துவத்தில் தான் ஆர்வம் இருந்தது. நியூராலஜி என்றாலே கடினமானது என்ற பயம், படிக்க முடியுமா என்ற சந்தேகம் — ஆனால் நான் இந்தத் துறைக்கு வந்ததே ஒரு விபத்து என்று தான் சொல்ல வேண்டும். நான் எம்.டி. முடித்த போது வீட்டிலே கல்யாணத்திற்காகப் பார்த்தார்கள். அந்த நேரம் எதுவும் படியவில்லை. பிறகு நரம்பியல் மருத்துவம் படித்து; சில ஆண்டுகள் இத்துறையில் பணி புரிந்தபின் நரம்பியல் அறுவை சிகிச்சையில் சேர்ந்து படித்தேன். முப்பத்தியெட்டு வயதில் இதில் சேர்ந்து கடினமான இந்த கோர்ஸை ஐந்து வருடங்கள் படித்து சென்ற டிசம்பரில் முடித்தேன். இதில் எனக்கு வருத்தமளித்த ஒரு விஷயம் நான் இந்தக் கோர்ஸை முடிக்குமுன்பே என் தந்தை காலமானது தான்.

திருமணம், குடும்பம், குழந்தைகள் என எனக்கு ஏற்பட்டிருந்தால் நிச்சயம் இது போன்ற ஒரு கடினமான துறையில் இந்த அளவு வந்திருக்க முடியுமா என்பது சந்தேகம்! நல்ல மனைவியாகவும், பொறுப்புள்ள தாயாகவும் ஆகியிருந்தால் எனக்குப் படிக்க எங்கே நேரம் கிடைத்திருக்கும்?

என்னைப் பொறுத்தவரை பெண்களை ஆண்கள்தான் இழிவு படுத்த வேண்டும் என்பதல்ல—பெண்கள் தங்களைத்தாங்களே இழிவு படுத்திக் கொள்வதுதான் அதிகம். நாம் நடந்து கொள்ளும் விதத்தினால் நம்மை

நாமே எங்கும் எப்போதும் காப்பாற்றிக் கொள்ள முடியும். பெண்மையின் மென்மையை மறக்காதவரை எல்லோரும் நம்மை மதிப்பார்கள். சாதிக்க வேண்டும் என்ற எண்ணத்தை மட்டும் வளர்த்துக் கொண்டால் — முயற்சியுடன் முயன்றால் நிச்சயம் முடியாதது எதுவுமில்லை. இதற்கு ஆண் பெண் என்ற வேறுபாடோ, வயதோ ஒரு பொருட்டல்ல.''

**திருமதி சௌகார் ஜானகி:**

''பெண்கள் தனியாக வாழமுடியாது என்று நினைத்த ஆசாரமான குடும்பம் எங்களுடையது. என் தந்தை அந்தக் காலத்திலேயே ஐரோப்பாவில் படித்ததனால் அவருக்குப் பெண்களுக்குச் சம உரிமை கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட — அந்த உரிமை மெதுவாக வீட்டின் பெரியபெண்ணான எனக்கு முதலில் கிடைத்தது. படிக்கவைத்தார்கள். ஆனால் பெற்றோர்களின் பாரம் கழிய வேண்டும் என்பதற்காக எனக்குப் பதினைந்து வயதிலேயே கல்யாணம் செய்து விட்டார்கள். ஆனால் எனக்குப் பதினெட்டு வயதாகும் போது கிடைத்த துணை சரியில்லை என்று தெரிந்து கொண்டு விட்டேன்.

அப்போது எனக்கு யக்னா (வைஷ்ணவியின் தாய்) பிறந்து விட்டாள். கையில் குழந்தையுடன் தனித்து நின்ற நேரம் — பிறந்த வீடு போகவும் விருப்பமில்லை (திருமணமான பின்பு அது தவறு என்பது என் எண்ணம்). சொந்தக்காலில் நிற்க வேண்டும் — என்ற ஒரே குறிக்கோளுடன் தனியாகப் போராடத்துவங்கினேன். 'எனக்கு ஏன் இந்தத் தண்டனை? நான் என்ன பாவம் செய்தேன்?' என ஆண்டவனிடம் முறையிடுவேன். மற்றவர்களிடம் முறையிட்டு என்ன பயன்? நம் துன்பங்களைக் கண்டு உள்ளூர மகிழ்பவர்கள் தான் அதிகம்.

பதினெட்டு வயதிலேயே நானே முடிவெடுக்க வேண்டிய நிலை; சம்பாதிக்க வேண்டிய கட்டாயம். வாழ்க்கையில் முன்னேற, விடா முயற்சி ஒன்றையே துணையாகக் கொண்டேன். வீட்டையும், சமையலையும் மட்டுமல்லாமல் குழந்தைகளையும் (அவர்கள் படிப்பதையும்தான்) கவனித்துக் கொண்டு என் நடிப்புத் தொழிலிலும் கவனம் செலுத்த ஆரம்பித்தேன். தினமும் அலுவலகம் செல்லும் பெண்கள் போலத்தான் நானும் சென்றேன் (சமையல் உட்பட எந்த வேலைக்குமே எனக்கு யாருடைய உதவியும் கிடையாது). சினிமாவில் எனக்குக் கிடைத்த வாய்ப்புகள் திரை உலகைச் சேர்ந்தவர்கள் கொடுத்த ஊக்கம், என் திறமையும் தான் நான் இந்த அளவு முன்னேறக் காரணம். இல்லற வாழ்க்கையில் அருள்தர மறந்த ஆண்டவன் என் லட்சிய வாழ்க்கையில் கைவிடவில்லை.

உடன் பிறந்தவர்களோ, மற்றவர்களோ, கட்டிய கணவரே ஆனாலும் பெண்களுக்கு அவர்கள் உபகாரம் செய்ய வேண்டாம். உபத்திரவம் செய்யாமல் இருந்தால் போதும் — பந்த பாசம் என்று சொல்வதெல்லாம் பொய்தான். அவசரமான இந்த உலகத்தில் — பெண்களின் வாழ்க்கையில் யாரும் அவர்களின் வழியை மறிக்காமல் தொந்தரவு தராமல் இருந்தால் அதுவே போதும் இயற்கையிலேயே பொறுமை அதிகம் அமையப் பெற்றவள் பெண் அவள் எதையுமே சாதிப்பாள். சம்பாதிக்கும் பெண்கள் உணர்ச்சிகளுக்கும் சென்டிமென்டுகளுக்கும் மயங்கி விடாமல் — தன் கடைசி காலம் வரை திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும்.

எப்போதும், எதற்கும், யார் கையையும் எதிர்பார்க்கவே கூடாது. இது வாழ்க்கையில் நான் கற்ற பாடம் — மற்றவர்களுக்கு நான் தரும் அறிவுரை.

பெற்றவர்கள் திருமணம் செய்து கொடுப்பதனால் தங்களின் பாரத்தை இறக்கி வைத்து விட்டதாக நினைக்கலாம். ஆனால் பெண்ணின் பாரம் எப்போதுமே குறைவதில்லை — ஏறிக் கொண்டேதான் போகும். பெண்ணுக்குக் கல்யாணம் மட்டுமேகுறிக்கோளாகக் கூடாது. கல்யாணம் ஒன்றினால் மட்டுமே அவளுடைய பிரச்னைகள் தீர்ந்து விடுமா?

• சௌகார் ஜானகி



**மகப்பேறு மருத்துவ நிபுணர் டாக்டர் ஈ. வி. கல்யாணி:**

''திருமணமானது, கணவரை இழந்தது

# "மாமியார் உடைத்தால்.....? மருமகள் உடைத்தால்.....!"

காலம் காலமாகப் பலரும் சொல்லிச் சொல்லி அலுத்துப்போன பழமொழி. அதுவே பலருடைய அனுபவ மொழியும் கூட.

"எங்கள் வீட்டைப் பொறுத்தவரை, அது பழமொழியோ-அனுபவ மொழியோ, அந்தப் பேச்சுக்கே இடம் இல்லை. ஆமாம், அதற்குக் கொஞ்சம் கூட அவசியமே இல்லை" என்கிறார் திருமதி சந்தியா ராஜ கோபால்.

அதற்கு அவர் சொல்லும் இரண்டு காரணங்கள் :

"ஒன்று-ஒரு தாய்க்கும் மகளுக்கும் இடையே உள்ள ஒட்டுறவுதான் என் மாமியாருக்கும் எனக்கும் இடையே நிலவுகிறது. இரண்டாவது-எங்கள் சமையலறையை அலங்கரிப்பவை உடையாத பாட்டில்களும் ஜார்களும்தான். கைதவறி விழ சான்ஸ் இல்லை. அப்படியே விழுந்தாலும் உடைவதற்கு வழியே இல்லை."

ஆமாம், திருமதி சந்தியா ராஜகோபால் பயன்படுத்துகிறவை ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜார்களும்தான். அவர் கூறுகிறார்.

"எதுவுமே எனக்கு நேர்த்தியாக இருக்க வேண்டும். சுகாதார சுத்தமாக இருக்க வேண்டும். தவிர, போட்டு வைக்கும் அந்தந்த மளிகைப் பொருளின் தேவைக்கும் அளவுக்கும் தகுந்தாற் போல வெவ்வேறு சைஸ்களில் இருக்க வேண்டும். அந்தத் தேவையை ஸ்ரீபெட் நிறை வாகவே பூர்த்தி செய்கிறது."

அவர் கூறும் மற்றுமொரு கருத்து :

"உள்ளே வைத்திருப்பது தெளி வாகத் தெரியும்போது, எதையும் தேட வேண்டிய அவசியமில்லை. அதனால் சமையல் வேலையில் நேரம் வீணாவதில்லை. அப்படித் தேடுவதனால் ஏற்படும் எரிச்சலுக்கோ அலுப்புக்கோ இடமே இல்லை. அதனால்தான் ஸ்ரீபெட் பாட்டில்களையும் ஜார்களையுமே விரும்புகிறேன்."



திருமதி சந்தியா ராஜகோபால்.



திருமதி நிர்மலா சுரேஷ்.

"ஹைஜின் என்பது ரொம்ப ரொம்ப முக்கியமான விஷயம். சுகாதாரத்தைப் பொருத்த வரையில் நான் எப்போதுமே அதை மிகவும் சீரியஸ் ஆக எடுத்துக் கொள்கிறவள்" என்கிறார் திருமதி நிர்மலா சுரேஷ்.

அதுவும், சமையலறையில் மளிகைப் பொருள்களைப் போட்டு வைக்கும் கண்டெய்னர்கள் விஷயத்தில் தாம் மிகுந்த முன்னெச்சரிக்கையோடு இருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

"அதனால்தான் என்னுடைய சாய்ஸ் ஸ்ரீபெட்."

பொதுவாக, பிளாஸ்டிக்கினால் தயாரிக்கப்படுபவை பாக்டீரியா வளருவதை அனுமதிக்கக் கூடிய தன்மை கொண்டவை.

"ஆனால் ஸ்ரீபெட் பாட்டில்கள் அப்படியல்ல. அவை அந்தகைய நுண்ணுயிர் வளர்ச்சியை அனுமதிப்பதில்லை. அதுவே ஒரு மிகப் பெரிய ப்ளஸ் பாயின்ட்" என்கிறார் அவர்.

இவருடைய கருத்தையேதான் பிரதிபலிக்கிறார் திருமதி ஆண்டாள் பிரியதரிசினியும்.

"வளரும் பருவத்துக் குழந்தைகளின் ஆரோக்கியத்தில் எவ்வளவு கவனம் செலுத்த வேண்டும் என்பது பற்றி நான் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. ஆரோக்கியத்துக்கு அடித்தளமாக இருப்பவை சுத்தமும் சுகாதாரமும்தான். அந்த விஷயத்தில் எனக்கும் என் குழந்தைக்கும் உதவுபவை ஸ்ரீபெட் பாட்டில்கள். என் அனுபவத்தில் கண்ட உண்மை இது" என்கிறார்.

கூடவே இன்னொரு வசதியும் உண்டு. அதுவும் அவருடைய அனுபவத்தில் தெரிந்து கொண்டது.

"ராத்திரி நேரத்தில், ஒரு அவசரத் தேவையென்றால் சட்டென்று என் கணவர் எனக்கு உதவி செய்வதற்கு ஸ்ரீபெட் பாட்டில்கள் வசதியாக இருக்கின்றன. குழந்தை பசியால் விழித்துக் கொண்டு அழத் தொடங்கும் போது, அதை நான் சமாதானப்படுத்த முயலுவதற்குள் அவரால் பாலைக் கரைத்து, சர்க்கரை எங்கே இருக்கிறது என்று தேடி நேரத்தை வீணாக்காமல் சட்டென்று அதை எடுத்துக் கலந்து கொண்டு வந்து தந்து விட முடிகிறது. காரணம், உள்ளே நிறைத்து வைத்திருப்பதைத் தெளிவாகக் காட்டுகிறது ஸ்ரீபெட்."

அது மட்டுமல்ல. ஸ்ரீபெட் பாட்டில்களை ஷெல்ஃப்களில் அடுக்கி வைக்கும் போது சமையலறைக்கு ஒரு கவர்ச்சியும் நவீனத் தோற்றமும் கிடைத்து விடுகிறது. உருவ அமைப்பிலும் அளவு வகைகளிலும் அத்தனை ரகங்கள்.

திருமதி ஆண்டாள் பிரியதர்சினி



இதுவும் அவர் கருத்து.

உண்மைதான். ஸ்ரீபெட் ஜாரு ரொம்ப ரொம்ப ஜோரு.



ஏ. வி. கல்யாணி

எல்லாமே எனக்குக் கனவு போலத்தான் நினைவிருக்கிறது. அந்தக் காலத்தில் விதவையான ஒரு பெண்ணைப் படிக்க வைப்பது என்பதே ஒரு கடினமான நிலை. என்னுடைய தந்தை ஒரு பிரபலமான கண் வைத்திய நிபுணர். மிகவும் ஆசாரமான குடும்பம். மறுமணம் பற்றிய எண்ணம் கூடக் கிடையாது. (பெரியவளாகுமுன்பே கணவரை இழந்தவள் நான்). என் தந்தை என்னைத் தொடர்ந்து படிக்கச் சொன்னார். நல்லது கெட்டது புரியாத பருவத்திலிருந்த நான் என் பெற்றோரின் அறிவுரைப்படி படித்தேன் — நடந்தேன். பிறகுதான் புரிந்து கொண்டேன். அவர்கள் செய்தது அத்தனையுமே என் நன்மைக்குத்தான் என.

அந்தக் காலத்தில் நான் படித்த பள்ளி, கல்லூரி அனைத்திலுமே எனக்கு வந்த ஆசிரியைகளில் பலரும் மணமாகாதவர்களே. இந்தக் காலம் போல மிகச் சிறிய வயதில் திருமணம் செய்ததும் இல்லை. மருத்துவத் துறையில் ஈடுபட்ட பின்பு எனக்கு மண வாழ்க்கை பற்றிய எண்ணமே எழவில்லை.

சிறிய வயதிலே மிகவும் கூச்ச சுபாவமுள்ளவளான எனக்கு நம்பிக்கையும், துணிவையும் கொடுத்தது மருத்துவத்துறையே. 1940 இல் மருத்துவமனையைத் துவக்கினேன். அப்போது அதிக அளவு மருத்துவமனைகள் இல்லை. நான் பிரசவம் பார்த்துக் கையில் அள்ளிய மலர்கள் அனைத்துமே என் தோட்டத்தில் மலர்ந்தவைதானே?— அந்த மகிழ்ச்சியே எனக்குப் போதும். மருத்துவத் துறையையே என்னுடைய துணையாகவும், மருத்துவமனையையே என்னுடைய குழந்தையாகவும் ஏற்றுக் கொண்டு எந்த வித ஏமாற்றமும் இல்லை, எதையும் இழந்ததாகவும் நினைக்கவில்லை. என்னைப் பொறுத்தவரை ஒரு ஆண்துணையில்லாமல் பெண்ணால் வாழ முடியும்; ஆனால் ஒரு பெண் துணையின்றி ஆணால் நிச்சயம் முடியாது.

சந்திப்பு: **வைதேகி தேசிகன்.**

---



புரதச் சத்து மிக்க உணவு கண்டல் என்று பலமுறை கூறியும் கண்டலை ஏறிட்டும் பார்க்கவில்லை என் குழந்தைகள். ஒருநாள் சிறிது வெங்காயம், ஒரு பல் பூண்டு, சிறிது கரம் மசாலாத் தூள், ஒரு டீஸ்பூன் ஜீரகம் இவற்றுடன் ஒரு சிறு துண்டு இஞ்சி வைத்து அரைத்து அத்துடன் வேக வைத்த பருப்புகளைப் போட்டு வழக்கம் போல் கண்டல் செய்து கொடுத்தால் எனக்கு மிச்சம் மீதி கண்டல் இல்லை.

இத்துடன் சுவைக்கென ஒரு வேக வைத்த உருளைக்கிழங்கு, தக்காளிச் சாறு இவற்றையும் சேர்க்கலாம். பொடியாக அரிந்த கீரை சேர்த்தால் இன்னும் ருசியோ ருசி. இதையே தவிர, கூட்டு மாதிரி செய்தால் சப்பாத்திக்கு சுவையான சைட் டிஷ். நீங்களும்தான் செய்து பாருங்களேன்.

— இராதிகா.



# உப்பும்



# ஊறுகாயும்



ஊறுகாய் சீசன் தொடங்கிவிடுமே இப்போது. ஊறுகாய்களுக்கு உப்பு எந்த விகிதத்தில் போடுவது? ஆலோசனை கேட்க அடுத்த வீடு போக வேண்டாம். சில ஊறுகாய்களும், அதன் உப்பின் விகிதமும் இங்கு கொடுக்கப் பட்டுள்ளது.

**அளவு என்பது அளக்கும் பாத்திரம் என்று கொள்க:**

இருக்கும் பொருளுக்குத் தக்கபடி (ஊறுகாய் இடும் பொருள், உ.ம். மாவடு, நறுக்கிய மாங்காய், எலுமிச்சங்காய் இவைகள்) சிறியது முதல் பெரியது வரை எந்தப் பாத்திரம் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம். ஊறுகாய்க்குத் தேவையான எல்லாம் ஒரே அளவு பாத்திரமாய் இருக்க வேண்டும்.

**1. மாவடு:**

மாவடு — 8 அளவு
உப்பு — 1 அளவு

**2. கடுகு மாங்காய்:**

பொதுவாக இதைக் கேரளா பக்கம்தான் போடுவார்கள்.
மாவடு சிறிய சைஸ் — 6 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
உப்பு — 1 அளவு
கடுகுப்பொடி — ½ அளவு

மிளகாய்ப்பொடி அதிகம் சேர்ப்பதால், இதன் குழம்பும் தொட்டுக் கொள்ள உதவும்.

மாவடுவைக் கழுவி, ஈரம் போக துடைத்து, பிறகே ஊறுகாய்ப் பொடி, உப்பு, கடுகுப் பொடி சேர்க்க வேண்டும். 2, 3 நாள் குலுக்கிவிடவும். ஊறுகாய் ஜாடிமேல், நல்லெண்ணெய்யில் தோய்த்த, மெல்லிய, சுத்தமான வெள்ளைத் துணியால் மூடி, பிறகு ஜாடிமூடியால்மூடவும். அப்போது ஊறுகாய் கெடாது.

**3. ஆவக்காய்:**

துண்டமாக நறுக்கிய மாங்காய் — 6 அளவு (ஓட்டுடன்)
உப்பு — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
ந. எண்ணெய் (பச்சை) — 1 அளவு
கடுகுப்பொடி — ½ அளவு

நறுக்கிய மாங்காயில் மேற்கண்ட பொருள்களை பச்சையாக அப்படியே சேர்க்கவும். இரண்டு நாளில் மேலே எண்ணெய் தேங்கி, பார்க்கவே அழகாய் இருக்கும். சுவையோடு கூடிய இந்த ஊறுகாய் வருஷம் மூன்று ஆனாலும் கெடாது.

**4. வெந்தய மாங்காய்:**

ஓடு இல்லாமல் நறுக்கிய புளிப்புள்ள

மாங்காய்த் துண்டங்கள் — 6 அளவு
உப்பு — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
சிவக்க வறுத்துத் தூளாக்கிய
வெந்தயப் பொடி — 1 ஸ்பூன்
எண்ணெய் — தேவைபோல்.

இதற்கு அதிகம் எண்ணெய் வேண்டாம். இந்த ஊறுகாய் ஒரு வாரம்தான் (அதற்குள்) வரும். கொஞ்சம் எண்ணெய் காய்ச்சி, பெருங்காயப்பொடிப் போட்டு, ஊறுகாயில் விடவும்.

### 5. மாங்காய்த் தொக்கு:

செதில் ஆக்கிய (தோல்நீக்கி) அ
துருவிய புளிப்பு மாங்காய் — 5 பாத்திரம் அளவு
உப்பு — 1 பாத்திரம் அளவு
மிளகாய்த்தூள் — 1 பாத்திரம் அளவு
ந.எண்ணெய் — ¾ அளவு

எண்ணெயை வாணலியில் விட்டு கடுகு தாளித்து, மிளகாய்த்தூள், பெருங்காயத் தூள், சேர்த்து மாங்காயைப் போட்டு வேக வைத்து (எண்ணெயில்) உப்பு, மிளகாய்த் தூள் சேர்த்து நன்றாகக் கிளறி, அல்வா போல் எண்ணெயை கக்கும் வரை கிளறவும். வறுத்துப்பொடித்த வெந்தயத்தூள் ஒரு ஸ்பூன் சேர்த்து கிளறி இறக்கவும்.

### 6. இனிப்பு மாங்காய்:

துண்டங்களாக நறுக்கிய
மாங்காய் — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
உப்பு — 1 அளவு
செல்லம் பொடித்தது — 1 அளவு

இதற்கும் எண்ணெய் தேவையில்லை. எண்ணெய் தோய்த்த, மெலிதான வெள்ளைத் துணியால் ஜாடியை மூடவும்.

### 7. தளர் மாங்காய்:

செதிலாக தோலோடு நறுக்கிய
மாங்காய் — 5 அளவு
உப்பு — 1 அளவு

இரண்டையும் கலந்து இரண்டு நாள் ஊற வைத்து, பின் நன்றாகக் காயவைத்து (மொற, மொறவென்று) டப்பாவில் அள்ளவும்.

தேவையான போது சிறிதளவு எடுத்து வெந்நீரில் (சுடுதண்ணீர்) கழுவி, வெந்நீரில் பத்து நிமிடம் ஊறவைத்து, மிளகாய்த்தூள் சேர்த்து, நல்லெண்ணெய் காய்ச்சி, பெருங்காயத்தூள் போட்டு, ஊறுகாயில் விடவும். வறுத்துப் பொடித்த வெந்தயப்பொடி சிறிது சேர்க்கவும். மிக அதிக ருசியுள்ள மாங்காய் ஊறுகாய் இந்தத் தளிர் (அ) எண்ணெய் மாங்காய்.

### 8. எலுமிச்சங்காய் & கடாரங்காய்:

துண்டமாக நறுக்கிய எலுமிச்சை
(அ) கடாரங்காய் — 5 அளவு
உப்பு — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
ந. எண்ணெய் — ¾ (அ) ½ அளவு

சிறிது வறுத்துப் பொடித்த வெந்தயத் தூள் சேர்த்தால் வாசனையாக இருக்கும்.

### 9. நெல்லிக்காய் ஊறுகாய்:

புளிப்புள்ள பெரியசைஸ்
நெல்லிக்காய் — 8 அளவு
உப்பு — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
எண்ணெய் — ½ (அ) ¾ அளவு

### 10. விஜிடபின் ஊறுகாய்.

மெலிதாக நறுக்கிய காய்கறித்
துண்டங்கள் — 8 அளவு
உப்பு — 1 அளவு
மிளகாய்த்தூள் — 1 அளவு
எண்ணெய் — 1 அளவு
வினிகர் — 1 அளவு

மேற்கண்ட விதத்தில், விகிதத்தில் ஊறுகாய் போட்டால் நல்ல ருசியோடு இருப்பதுடன், பல நாள் கெடாமலும் இருக்கும். உப்பும், மிளகாய்ப் பொடியும் அவரவர் ருசிக்கேற்ப சிறிதளவு கூட்டி குறைத்து இடலாம்.

— கமலா ஜானகிராமன்.



**திருமணப் பரிசாக, பிளாஸ்டிக் கப், சாஸர், லைம் செட் என்று கொடுப்பதற்குப் பதிலாக, பிளாஸ்டிக் அஞ்சறைப் பெட்டி, பிளாஸ்டிக் கன்டெய்னர்கள், கொடுத்தால், குடித்தனம் செய்ய உதவியாக இருக்கும். தோல் சீவும் 'பீலர்' கொப்பரை ஸ்க்ராப்பர், பஞ்ஜிக் கட்டையும் கொடுக்கலாம்.**

**— பார்வதி.**

''அறம் செய்ய விரும்பு,'' ''ஆறுவது சினம்'' போன்ற ஆத்திச்சூடி பொன்மொழிகளை அரையும் குறையுமாக அவ்வப்போது பின்பற்றும் நாம் இந்த 'சனி நீராடு' என்ற உபதேசத்தைக் கிட்டத்தட்ட மறந்து விட்டோம். (தண்ணீர்த் தட்டுப்பாட்டினால் வாரம் ஒரு முறை மட்டுமே குளிக்கும் சில நகரவாசிகளை நாம் குறிப்பிடவில்லை. ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டு, காதிலும், கண்ணிலும் எண்ணெய் வடிய, வடிய, கொஞ்ச நேரம் எண்ணெய்த் தலையுடன் ஊறி(!), பின்னர் சீயக்காய்ப் பொடியினால் தலையில் உள்ள எண்ணெயைப் போக்கிக் கொள்ளும் பழக்கம் இன்று அரிதாகிக் கொண்டு வருவதைச் சொல்கிறோம்). இந்த எண்ணெய் மற்றும் சீயக்காய்ப் பழக்கத்தை மாற்றியது ஷாம்பூ என்ற விஞ்ஞானக் கண்டுபிடிப்பு.

* விதவிதமாகக் கடைகளில் விற்கும் ஷாம்பூக்களில் எந்த வகை ஷாம்பூவை வாங்கலாம்?

* 'கண்டிஷனரோடு கூடிய ஷாம்பூ' என்றால் என்ன?

* ஷாம்பூ பொடுகைப் போக்குகிறதா?

போன்ற பல கேள்விகள் ஷாம்பூ உபயோகிப்பவர்களின் மனத்தில் எழுவதுண்டு.

முதலில் கடைசிக் கேள்வியை எடுத்துக் கொள்வோம். ஷாம்பூ பொடுகைப் போக்குகிறதா? என்ற கேள்விக்குப் பதிலை அறிந்து கொள்வதற்கு முன் பொடுகு என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்வோம்.

பொடுகில் இரண்டு வகை உண்டு. தலையைத் தட்டி விட்டுக் கொண்டால் மிகச் சிறிய வெண்மையான துகள்கள் விழுகின்றனவே, அது சாதாரண வகைப் பொடுகு. மண்டையோட்டின் வெளிப்புறத்தில் காயந்து போன பகுதியே இந்தத் துகள்கள். இந்த வகைப் பொடுகு ஏற்பட என்ன காரணம் என்பது இன்றுவரை சரியாகக் கண்டுபிடிக்கப்படவில்லை.

மிக நுண்ணிய, பாட்டில் வடிவம் கொண்ட 'பிடைரோஸ்போரம் ஓவலே' என்ற கிருமிகள்தான் பொடுகுக்குக் காரணம் என்று நம்பப்பட்டு வந்தது. ஆனால் பொடுகு இல்லாத தலைகளிலும் இந்தக் கிருமிகள் இருப்பதைச் சமீபத்தில் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

வேறு ஒரு தீவிர வகைப் பொடுகு உண்டு. மயிர்க்காலில் உள்ள சில சுரப்பிகள் (இவற்றை செபாஷியஸ் சுரப்பிகள் என்பார்கள்) சிதிலமடைந்து அதனால் வெளிப்படும் அழுக்குகள் மொத்தமாக மண்டையோட்டின் மீது தங்கி, வலியையும், அரிப்பையும் ஏற்படுத்தி, நாளடைவில் வழுக்கையையும் ஏற்படுத்தி விடலாம். இவ்வகை நோய்க்கு 'செபாரியா டெல்மடிடிஸ்' என்று பெயர்.

மேலே குறிப்பிட்ட பொடுகு வகைகளை



* ராஜ்குமார்

## மாதம் ஒரு பொருளைத் தெரிந்து கொள்ளலாமே!

# ஷாம்பூ

ஷாம்பூவை உபயோகிப்பதன் மூலம் நீக்க முடியுமா? சில ஷாம்பூ மற்றும் கூந்தல் தைலத் தயாரிப்பாளர்கள், தங்கள் தயாரிப்பு 'மயிர்க்காலை ஊடுருவிச் சென்று அங்கு தங்கியிருக்கும் கிருமிகளைக் கொல்லும்' என்கிறார்களே, அது உண்மையா? ஊஹூம். அறிவியலின்படி இது சாத்திய மல்ல. ஆனால் ஷாம்பூக்கள் பொடுகுகளின் படிமங்களைக் கரைக்க உதவுகிறது என்பது உண்மைதான்.

''எந்த வகை ஷாம்பூவினாலும் நரையோ, வழுக்கையோ ஏற்பட சாத்தியக் கூறு இல்லை. அவை வயது மற்றும் பரம் பரை ஆகியவை நிர்மானிக்கும் விஷ யங்கள்'' என்று அழுத்தமாகக் கூறுகிறார் டாக்டர் ராஜகுமார். இவர் எம். பி. பி. எஸ். டாக்டர் மட்டுமில்லை, பிரபல வெல்வெட் ஷாம்பூவைத் தயாரிக்கும் ஃபார்மா கேர் நிறுவனத்தின் தலைவரும் கூட.

''ஷாம்பூவின் முக்கியப் பொருட்கள் என்று ஏ. ஓ. எஸ். என்ற ரசாயனத்தையும், கண்டிஷனரையும் கூறலாம். 'நறுமணத்திற் காகச் சேர்க்கும் வாசனைப் பொருளும் இப்போது இன்றியமையாததாகி விட்டது. ஏ. ஓ. எஸ். தான் தலைமயிரைச் சுத்தம் செய்வதில் பெரும்பங்கு வகிக்கிறது'' என் றார்.

பிறகு கண்டிஷனர் என்றால் என்ன என் பதையும் விளக்கினார். ''ஸ்டாடிக் மின் சக்தி என்பது நம் மயிர்க்கால்களில் இருக் கும். இதை நீக்கித் தலையை 'செட்' செய்ய — அதாவது படிய வைக்க உதவுவதுதான் கண்டிஷனர்.

தலையைச் சுத்தம் செய்வது மட்டுமே கண்டிஷனர் இல்லாத ஷாம்பூவின் பயன் என்றால், சாதாரண டாய்லெட் சோப்பைக் கொண்டே தலையைச் சுத்தம் செய்து கொள்ளலாமே. ஷாம்பூ எதற்கு? என்று கேட்கத் தோன்றுகிறதா? ''ஷாம்பூ போல சோப்பினாலும் தலையைச் சுத்தம் செய்து கொள்ள முடியும் என்பது உண்மைதான். ஆனால் சோப்புகளில் மெக்னீஷியம், கால் சியம் ஆகிய உப்புக்கள் அடங்கி யுள்ளன. இவை தலைமுடியில் தங்கிவிட லாம். அதனால் முடி பளிச்சென்று இல்லா மல் அழுது வடியும் தோற்றத்தை ஏற்படுத் தக் கூடும்.

''ப்ளாக் ஷாம்பூ என்று விற்கப்படு கிறதே. இவற்றில் 'டை' கலந்திருக்கிறதோ என்ற சந்தேகம் சிலருக்கு உண்டு. இது எந்த அளவுக்கு உண்மை?'' என்று கேட்டோம். ''இத்தகைய ஷாம்பூக்கள் தலைமுடியின் கருமைநிறத்தைக்கொஞ்சம்அதிகப்படுத்திக் காண்பிக்கும். ஆனால் இவற்றில் கறுப்பு சாயம் (டை) எதுவும் கலக்கப்படுவதில்லை. இவற்றில் கொஞ்சம் அதிகமான அளவில்

கண்டிஷனர் சேர்க்கப்படும். கறுப்பு ஷாம்பூக்கள் தூரக் கிழக்கு நாடுகளில் மிகப் பிரபலம். பழுப்பு நிறக் கூந்தல் கொண்டவர்கள், அது கறுநிறமாகத் தோற்றமளிக்கப் ப்ளாக் ஷாம்பூவை உபயோகப்படுத்துவார்கள்'' என்றார்.

ஷாம்பூக்களிடையே ஏன் இத்தனை விலை வேறுபாடு? தரத்திற்கேற்ற விலையோ? ''அப்படிச் சொல்ல முடியாது. அரசு ஷாம்பூவை ஆடம்பரப் பொருளாகக் கருதி 110% வரி விதிக்கிறது. பெரிய நிறுவனங்கள் இந்த வரியை ஷாம்பூவின் விலையில் ஏற்றி அதை மக்களிடமிருந்து வசூலித்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் உள்ளன. எங்களைப் போன்ற சிறுதொழில் நிறுவனங்களுக்கு இந்த வரியிலிருந்து அரசு விலக்கு அளிக்கிறது. அதனால் எங்களால் குறைந்த விலைக்கு ஷாம்பூவை விற்க முடிகிறது. அவ்வளவுதான்'' என்கிறார் ராஜ்குமார்.

முட்டை வாசனை சிலருக்கு அலர்ஜி. அது ஒருபுறம் இருக்கட்டும்; மற்றபடி 'முட்டை ஷாம்பூ'வைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக நேரடியாக முட்டையையே தலையில் தேய்த்துக் கொண்டால் அதிகப் பலன் இருக்குமோ? அதிகப் பலன் இருக்குமா என்பதைவிட, ஒவ்வொரு தடவையும் ஒரு முட்டையைப் பயன்படுத்துவது வேஸ்ட் எனலாம். முட்டை ஷாம்பூக்கள் எளிமையானவை; முட்டை வாசனை அற்றவை; மற்றும் மயிர்க்கால்களுக்கு ஓரளவு சத்து அளிக்கக் கூடியவை.

எவ்வளவு நாளைக்கு ஒரு முறை ஷாம்பூ தேய்த்துக் குளிப்பது என்பது அவரவர் தலையில் அழுக்கு சேரும் வேகத்தைப் பொறுத்தது எனலாம். சிலருக்கு அவர்கள் பணிபுரியும் இடத்தில் உள்ள சுற்றுப்புறச் சூழலால் அதிகம் அழுக்கு சேரலாம். இவர்கள் அடிக்கடி தலைக்கு ஷாம்பூ போட்டுக் கொண்டு குளிக்கலாம். மற்றபடி வாரத்திற்கு ஒரு முறை ஷாம்பூவை உபயோகித்தால் போதுமானது.

ஆனால் ஒன்று. ஆரோக்கியமான அழகான தலைமுடிக்கு ஷாம்பூவை விட முக்கியமானது நமது உணவுப் பழக்க வழக்கங்கள். இரும்புச் சத்துக் குறைவு, அமினோ ஆசிட் சத்துக் குறைவு, ஊட்டச்சத்துக் குறைவான உணவு ஆகியவை தலைமுடி இழப்புக்கு வழி ஏற்படுத்துவதோடு, அதற்குப் பொலிவிழந்த ஒரு தோற்றத்தையும் தரும். ப்ரோட்டீன் ஷாம்பூ, ஹெர்பல் ஷாம்பூ போன்றவை இந்தக் குறையை ஓரளவு ஈடு செய்யும்.

''சீயக்காயைத் தலைக்குப் பயன்படுத்துவதைவிட, ஷாம்பூ பயன்படுத்துவது ஓரளவு பாதுகாப்பானதும் கூட. ஷாம்பூ கண்ணில் பட்டால் அதிகபட்சம் லேசான கண்ணெரிச்சல் இருக்கலாம்; கொஞ்சம் தண்ணீரை விட்டுக் கொண்டால் சரியாகி விடும். ஆனால் சிகைக்காய் கண்ணில் விழுந்தால், கண்கள் சீரியஸாகப் பாதிக்கப்பட வாய்ப்பு உண்டு'' என்கிறார் ராஜ்குமார்.

வியாபாரத் துறையில் ஈடுபடுவதற்கு முன்னால் இவர் கண் மருத்துவராகப் பணிபுரியும் தகுதி பெற்றவராக இருந்தார்.

ஷாம்பூ தயாரிப்புத் தொழிலைப் பற்றி நாம் கேட்ட சில கேள்விகளுக்கு அவர் தந்த விளக்கம் இதோ.

''சிறிய, அழகான பாக்கெட்டுகளில் ஷாம்பூ விற்கலாம் என்பதை நடைமுறைக்கு முதன் முதலில் கொண்டு வந்து பெரும் வெற்றி பெற்றது நாங்கள்தான். பிறகு பாண்ட்ஸ், லக்மே, ஹேலோ, இந்துஸ்தான் போன்ற பல நிறுவனங்களும் இதுபோல் ஏழைகளும் வாங்கக் கூடிய பாக்கெட் ஷாம்பூக்களைத் தயாரிக்க முன்வந்தனர். புதுமைக்கு நம் நாட்டில் நிச்சயம் வரவேற்பு உண்டு. ஆனால் அந்தப் புதுமை பெரும்பான்மையான மக்களைச் சென்று அடையக் கூடியதாக இருக்க வேண்டும். இப்போது கிராமங்களிலும் ஷாம்பூவைப் பரவலாகப் பயன்படுத்த ஆரம்பித்துள்ளனர். நகரங்களில் ஷாம்பூ விற்பனை ஆண்டுக்கு 20% அதிகரித்து வருகிறதென்றால், கிராமங்களில் இது 60% ஆக உள்ளது. எனவே ஷாம்பூ தயாரிப்பாளர்கள் நிச்சயம் கவலைப்படத் தேவையில்லை.''

**— ஜி. எஸ். எஸ்.**

'பிளம்' பழங்களின் ரசமும் எலுமிச்சம்பழ ரசமும் சேர்ந்தால் அதன் ருசி ஒரு மாதிரியிருக்கும். பிளம் பழச் சாறுடன் எலுமிச்சம்பழச் சாற்றைக் கலந்து தண்ணீரில் ஊற்றிச் சர்க்கரை போட்டு சர்பத் செய்து சாப்பிட்டால் அதன் ருசியே வேறுதான். ஆஸ்திரேலியப் பத்திரிகை ஒன்றில் படித்துப் பார்த்த பிறகு அதைச் செய்து சாப்பிட்டேன். எனக்குப் பிடித்திருந்தது. உங்களுக்குப் பிடிக்குமா?

— கீதா.



# கைவண்ணம்

ஒலி வடிவமாக நம் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் காலம் வந்துவிடினும் கூடவே கைகளையும் அசைத்துப் பேசினால்தான் நம் எண்ணங்களை முழுமையாகச் சொல்லி முடித்த நிறைவு மனதில் ஏற்படுகின்றது. நடனக் கலையில் கூட காலினால் தாளம் தட்டி கைகளின் முத்திரைகளினால் பார்ப்பவர்களுக்குத் தம் கருத்தை உணர்த்துகின்றனர். உழைக்க கரங்களும் ஓடியாடி வேலை செய்ய கால்களும் இருப்பின் நம்மை வெல்ல யார் உள்ளனர்?

இந்தக் கைகளால்தான் எத்தனை சாதனைகள் நல்ல உணவு சமைப்பவராக, நவீன உடை தயாரிப்பவராக, எழில்மிகு ஓவியம் தீட்டுபவராக, எண்ணங்களை எழுத்தாக்கும் எழுத்தாளராக... என கூறிக் கொண்டே போகலாம். ஆக இந்தக் கைகளையும் கால்களையும் பராமரிப்பதைப் பற்றி ஆய்வோமா?

## மருத்துவராக...

பெண்களின் பெரும்பாலான பொதுவான முறையீடுகளில் ஒன்று, 'கை, கால் குடைச்சல்' என்பது. மற்றும் மூட்டுவலி, கீழ் முதுகுவலி, தோள் பட்டை வலி, கணுக்கால் வலி வீக்கம் போன்றவையும் நாம் அன்றாடம் பார்ப்பவைகள். சிலருக்கு உடலைத் தொட்டாலே தாங்க முடியாத வலி இருக்கும். பொதுவில் நடுத்தர வயதுப் பெண்களின் இத்தகைய நோவுகள் இரத்த சோகை, இரும்புச் சத்து, வைட்டமின் சத்து குறைவு, பிரசவ காலங்களில் கவனிப்பின்மை ஆகிய காரணங்களால் இருக்கும். முதுமையில் ஊட்டச்சத்து குறைவின் காரணமாகவும், எலும்புகளின் தேய்மானம் காரணமாகவும் கோளாறுகள் ஏற்படுவதுண்டு.

வைரஸ், டி. பி. நோய், பால்வினை நோய்கள் சில கோளாறுகளுக்குக் காரணமாகின்றன. அடிக்கடி ஒருவருக்கு எலும்பு முறிவு ஏற்படின் அதனை மருத்துவ ரீதியாக நன்கு ஆராய வேண்டும். விளையாட்டு, நடனம் ஆகியவற்றில் ஈடுபட்டவர்கள் போதிய மருத்துவ அறிவுரை பெறுதல் நல்லது. ஜாக்கிங் செய்கின்றவர்களுக்குக் குதிகால் வலி, எலும்பு முறிவு போன்றவை அதிக அழுத்தமும் வேகமும் காலுக்கு ஏற்படுவதால் உண்டாகின்றன.

போலியோ சொட்டு மருந்தின் அவசியத்தைத் தாய்மார்கள் நன்கு உணரத் தொடங்கி விட்டதால் இளம்பிள்ளைவாத நோய் பாதிப்பு நன்கு குறையத் தொடங்கி விட்டது எனலாம். பிறவிக் குறைபாடுகளை நீக்க விரும்பும் தாய்மார்கள் கர்ப்ப காலத்தில் மருத்துவரின் ஆலோசனையின்றி எந்த மருந்தையும் உட்கொள்ளக் கூடாது.

இதே போன்று உடலில், முகத்தில் ஏதேனும் 'திட்டு' போன்று படர்ந்து தோன்றின் அதை மறைக்க முற்படாமல் சோதனை செய்து கொள்வது மிகவும் நல்லது. பிறவிக்



குறைபாடோ, விபத்தினால் ஏற்படும் அங்கஹீனமோ இவற்றைச் சரிசெய்து கொள்ள சிறந்த அறுவை சிகிச்சைகள் உள்ளன. பெரியோருக்கு வாதநோயால் ஏற்படும் இயலாமையைச் சரிசெய்ய தளராத மனமும், இடைவிடா பயிற்சியும் மருத்துவ சிகிச்சையுடன் தேவை. இவற்றால் 90 சதவீதம் வரை முன்னேற்றம் அடைந்தவர்களும் நிறைய உண்டு.

மார்பு கூடு நீண்டு, மணிக்கட்டுகள் பெருத்து, கால்கள் வளைந்து போன்றவை குழந்தைகளுக்கு இருப்பின் காலம் தாழ்த்தாத மருத்துவ சிகிச்சை நல்ல பலன் அளிக்கும்.

பெண்களுக்கு மாதவிலக்கு நிற்கும் காலங்களிலும் உடலில் அதிக எடை கூடும்

பொழுதும் கால்களில் வலி அதிகரிக்கும். கைகளினால் அதிக வேலை செய்பவருக்கு உதாரணமாக கூடை முடைதல், டைப்பிங், தையல் போன்ற வேலைகளில் சிலருக்குக் கட்டி போல் உருண்டையாகத் தோன்றும். வலியின்றி இருப்பினும் மருத்துவரிடம் காட்டுதல் நல்லது.

அதிக உயர ஹீல்ஸ் செருப்பு அணிபவருக்கு எப்போதும் கால்; முதுகுப் பகுதிகளில் வலி ஏற்படும். கணுக்காலில் வீக்கம், கால் கட்டை விரலில் அதிக வலி, இடது கை வலி போன்றவற்றிற்கு இருதய, இரத்தப் பரிசோதனைகள் மிக அவசியம் மஞ்சள் காமாலை, டி. பி. போன்ற நோய்களை கை நகங்களின் அறிகுறி கொண்டு சொல்லலாம்.

கை, கால்களில் அடிபடும் பொழுது அசட்டையாய் இருந்தால் புண் ஊடுருவுகின்றது. அதிலும் காலணி அதிகம் அணியாத பழக்கம் உள்ளவர்கள் இத்தகைய தாக்குதலுக்கு அதிகம் உள்ளாகின்றனர். வலிப்பு நோயின் பொழுது கை, கால்கள் அதிகம் உதறுகின்றன. வலிப்பை நோய் என்பதை விட நோயின் அறிகுறி எனலாம். அதிக ஜுரம், மூளையில் கட்டி போன்றவற்றால் இது ஏற்படுகின்றது. முறையற்ற வகையில் விரல்களில் அசைவு, மாறுபட்ட நடை போன்ற வயது கூடியவர்க்கு ஏற்படும் நோய்க்கும் மருத்துவ ரீதியில் நல்ல சிகிச்சை கொடுக்கப்படுகின்றது.

மூட்டுவலி, ஜுரம் சிறு வயதினரை அதிகம் பாதிக்கின்றது. இக்குழந்தைகளுக்கு நல்ல முறையில் பரிசோதனையும், சிகிச்சையும், பின், தொடர்ந்து மறு சோதனைகள் செய்து கொள்ளுதலும் மிகவும் அவசியம். இத்தகைய நோய்க்கு சில வருடங்கள் தொடர்ந்து சிகச்சைப் பெறல் வேண்டும் என்பதை நன்கு பெற்றோர் உணர வேண்டும். மனச் சோர்வு கூடாது. சர்க்கரை நோயாளிகளுக்குப் புண் எளிதில் ஆறாது. ஆகவே இவர்கள் சமையலறையில் சற்று நிதானமாக வேலை செய்யவும். எலும்பு முறிவு ஏற்பட்டவர் எலும்பு முறையோடு பொருந்தியுள்ளதா என மறு பரிசோதனை செய்தல் தேவையானது. உடல் உறுப்பு இழந்தவருக்கும் மாற்று உறுப்புக்கள் (கை, கால்) பொருத்தப்படுவதால் தளராத மனம் ஒன்று போதுமே.

## சத்துணவு வல்லுனராக...

நன்கு படித்த குடும்பங்களில் கூட விகிதாச்சார உணவு எனக் கூறும் பொழுது எங்கு குறைபாடு என அறிய முடிவதில்லை. ஆகவேதான் உணவில் பால், பழம் போன்றவற்றைக் கண்டிப்பாக சேர்க்கப்படும் பொழுது இத்தகைய குறைபாடுகள் நீங்குகின்றன. கால்ஷியம் எனப்படும் சுண்ணாம்புச் சத்து எலும்புகளுக்கு வலுவூட்டுவதால் தான் வெற்றிலைப்பாக்கில் சுண்ணாம்பு கலந்து உண்ணும் வழக்கம் ஏற்பட்டது.

வைட்டமின் டி சத்தும் உடலுக்கு உறுதியளிக்கின்றது. முட்டை, மீன், மீன் எண்ணெய், பாலாடை, பேரீச்சம்பழம், பயறு வகைகள், எள் எண்ணெய், உளுந்து, முருங்கைக் கீரை போன்றவை சிறந்த பலனளிக்கும். இத்தகைய உணவு கர்ப்ப காலத்தில் ஏற்படும் கால் வலியினை நன்கு தவிர்க்கும்.

நம் நீண்ட எலும்புகளின் உள்ளிருந்து தான் இரத்த விருத்திக்கான பொருட்கள் உண்டாகின்றன என்பதையும் நாம் உணர வேண்டும். மாலை வெய்யில் உடலில் சற்று நேரம் படுவது உடலுக்கு மிகவும் நல்லது.

## அழகுக் கலை நிபுணராக...

முகத்தை எத்தனை திறம்பட ஒப்பனை செய்தாலும், உடை எத்தனை எடுப்பாக இருந்தாலும் கைகளும், கால்களும் நேர்த்தியாக இல்லாவிடில் அவ்வழகு சிறக்காது. கை விரலின் மென்மையைக் கொண்டே வெண்டைக்காயை லேடிஸ் பிங்கர் என்றனர். வாழைத் தண்டு கால்கள் என்கிறோம்.

பலவித வீட்டு வேலைகளுக்கிடையேயும் கையை அழகுற பராமரிப்பதே சிறப்பு. வெளிநாடுகளில் கையுறை அணிந்து வேலை செய்கின்றனர். நம் நாட்டில் இப்பழக்கம் இன்னமும் தோன்றவில்லை. கை, கால்களில் அதிக முடி இருப்பின் வாக்ஸிங் முறையில் அதை நீக்கி விடுவது நல்லது. அதிகக் காரச் சத்துள்ள சோப்புகளைத் தவிர்ப்பது கைகளைப் பாதுகாக்கும். எலுமிச்சம் பழச்சாறு + தேங்காய் எண்ணெய் இரண்டு டீஸ்பூன் கலந்து கை கால்களில் தடவி மெதுவே மஸாஜ் செய்ய இளமைத் தோற்றம் ஏற்படும்.



**உங்கள் சிறுவர்களோ அல்லது கணவரோ வெளியே சென்று வந்தவுடன் பூட்ஸ்களைக் கழற்றி வைக்கும் போது அதில் ஒரு ரச கற்பூர உருண்டையைப் போட்டு வைத்தால் பூச்சி புகாது. நாற்றமும் இருக்காது. ஷூவை மீண்டும் அவர்கள் அணியும் போது அந்த உருண்டையை எடுத்துப் பத்திரமாக ஒரு டப்பாவில் போட்டு வைக்கவும்.**

**— வஸந்தி.**

வாரமொருமுறை கைகளை வெதுவெதுப்பான நீரில் பத்து நிமிடங்கள் நனைத்து சுத்தமான பஞ்சு கொண்டு நக இடுக்குகளை சுத்தம் செய்யுங்கள். நகம் மூன்று மாதங்களில் ஒன்றரை இஞ்ச் விதம் வளரும். கைகளால் வேலை அதிகம் செய்பவர் நகம் வளர்க்காமல் இருப்பதே அழகு, சுகாதாரம். கிளிஸரினும் ரோஸ் வாட்டரும் கலந்த கலவை கை கால்களை மிருதுவாக்கும். அடிக்கடி நகப்பூச்சு உபயோகிப்பது நகத்தின் நிறத்தை மங்கச் செய்யும். நகச் சொத்தையும், நகம் கடிக்கும் பழக்கமும் விரல்களை அழகிழக்கச் செய்யும். சிறு துண்டு வேகவைத்த உருளைக் கிழங்கை கை கால்களில் தடவ பளிச்சிடும்.

கால்களையும் வாரமொருமுறை சூடு பொறுக்கும் சுடுநீரில் உப்பு ஒரு டீஸ்பூன் கலந்து கால்களை அமிழ்த்தி சுத்தம் செய்ய வேண்டும். கால் நகங்களுக்கு டார்க் நிற நகப்பூச்சு அழகாக இருக்கும். கால் முடியை அகற்ற ரேஸர் பயன்படுத்துவது தவறு. இதனால் அடுத்து வளரும் முடி அடர்ந்து வளர்வதுடன் சருமமும் பாதிக்கப்படுகின்றது. முடி நீக்கும் மருந்தினைப் பயன்படுத்த விரும்புபவர் அதனை 'அலர்ஜி' பரிசோதனை செய்து கொண்ட பிறகு உபயோகித்தால் நல்லது. வீட்டு வேலைகளுக்குப் பிறகு கால்களை ஈரம் போக துடைப்பது சேற்றுப் புண் போன்றவற்றிலிருந்து காப்பாற்றும்.

கைகள் பெருத்து விடுவதைத் தவிர்க்க தினமும் கைகளை முன்பும் பின்புமாக இருபது முறை சுழற்றுவது நல்லது. கைகளைப் பக்கவாட்டில் நீட்டி வட்ட வடிவில் சுழற்றுவதும் காற்றில் 8 என எழுதுவதும் நன்மை பயக்கும்.

கால் பருமனைக் குறைக்க மல்லாந்து படுத்து கைகளைப் பக்கவாட்டில் நீட்டிக் கொள்ளவும். பின் காலை மாறி மாறி முட்டி மடங்காமல் உயர்த்தி இறக்கவும். இது போன்று இருபது முறைகள் செய்யலாம். பின் இதே நிலையில் இரு கால்களாலும் காற்றில் சைக்கிள் விடுவது போன்று நீட்டிச் சுழற்றவும். தொடைப் பகுதி குறைய இது நன்கு உதவும்.

சட்டை அணிவதில் கைகளில் பூ, ஜரிகை வேலைப்பாட்டுடன் அணிவது இப்போதைய நாகரிகம். குறுக்குக் கோடுகள் போட்ட சோளி கைகளைத் தடிப்பாகக் காட்டும். பப்வ் ஸ்லீவ்ஸ் எனப்படும் சோளி மெல்லிய கைகளை உடையவருக்கு அழகாக இருக்கும். விலை உயர்ந்த வளையல்களைப் பாதுகாப்பு கருதி தவிர்த்து உடைக்கேற்ற வண்ண வளையல்கள் அணிவது எடுப்பாக இருக்கும். அதிக ஓசை எழுப்பாத வளையல்களே சிறந்தது. வேலைக்குச் செல்பவருக்கு ஓரிரண்டு வளையல்களே எளிமையாகக் காட்டும். விழாக் காலங்களில் வங்கி அணிவது இன்றும் பழக்கமாக இருக்கின்றது. விரல் முழுவதும் மோதிரமணியாமல் ஒன்றோ, இரண்டோ மெல்லியதாக அணிவது கவர்ச்சி.

சுரிதார், மிடி அணிபவருக்கு மெல்லிய கொலுசும், வேலைக்குச் செல்பவருக்கு சத்தம் ஏற்படுத்தாத கொலுசும் அழகு. கோவில், விழாக்களுக்கு வேலைப்பாடுள்ள கனத்த பட்டைகளை ஜரிகை புடைவைக்கு ஏற்றாற் போல் அணியலாம். கட்டை விரல், சுண்டு விரல் நீங்கலாக ஏனைய மூன்று விரல்களில் மெட்டி அணிவது இப்போதைய ஃபாஷன்.

இத்தனை நேர்த்தியான கைகால்களால் நல்ல செயல்களைச் செய்வோமே. தினம் ஒருவருக்கேனும் சிறிது அன்னதானம் அளிக்கலாம். கால்களால் நல்ல இடங்களைக் காணவும், நல்ல சொற்களைக் கேட்கவும் பயணம் செய்வோம். விளையாட்டோ, வேலையோ, கை, கால் இன்றி என்ன செய்ய முடியும்? ஒருவரைப் பழிக்கும் பொழுது கூட 'கையால் ஆகாதவன்' என்றுதானே சொல்லப்படுகின்றது. தீயிலிருந்து தப்பி, புகழ்பெற ஆண்ட மாமன்னன் கரிகாலனின் பெயர் அவன் காலை ஒட்டியே வழங்கிற்று. ஆகவே விழிப்போடு இருந்து நம் கை கால்களை சிறப்பாக காப்போம்.

— டாக்டர் கமலி.

---

நான் வாசனை சோப்புகளை மாதத்திற்கு 2 அல்லது மூன்று வாங்குவேன். அதில் உபயோகத்திற்கு எடுத்துக் கொண்டது போக மீதி சோப்புகளை, கவரைச் சிறிதே பிரித்துப் பீரோவில் உள்ள துணிகள் நடுவே வைத்துவிடுவேன். துணிகள் சென்ட் போட்டது போல் வாசனையாக இருக்கும்.

— வஸந்தி.



சிக்னல் விழுவதற்காகத் தன் ஸ்கூட்டரில் காத்திருந்த குரு என்கிற குரு ராஜ கிருபாகரனுக்கு ஆச்சரியம். எதிர் சாலையிலிருந்து ஒரு இளைஞன் அவனைப் பார்த்துக் கையசைப்பது தெரிந்தது. அவன் யாரென்று தனக்கு நினைவு வரவில்லையே! தன் வண்டியின் பின்புறம் காட்டும் கண்ணாடியில் பார்த்த போது அவன் ஆச்சரியம் கோபமாக மாறியது. ஸ்கூட்டரில் அவன் பின்னால் உட்கார்ந்திருந்த சுகந்தி பதிலுக்குத் தன் கையை அந்த இளைஞனை நோக்கி அசைத்துக் கொண்டிருந்தாள்.

ஆரஞ்சு நிறத்தை சிக்னல் கம்பம் காட்டியவுடனே குரு தன் வண்டியைக் கிளப்பினான். அவன் தொடர்ந்து வண்டியை ஓட்டிய வேகத்தைக் கண்டு சுகந்திக்குப் பதற்றம் ஏற்பட்டது. ''ஏன் இவ்வளவு வேகமாகப் போறீங்க? ட்ராஃபிக்கான தெரு இது. ரெண்டு பள்ளிக்கூடம் வேறே இந்தத் தெருவிலே இருக்குது. கொஞ்சம் மெதுவாகப் போங்களேன்.'' அவள் வார்த்தைகளுக்கு எந்தப் பலனும் இருந்ததாகத் தெரியவில்லை.

ஒரு வழியாக வீடு வந்து சேர்ந்தவுடன்தான் அவளுக்கு முழுமையான மூச்சே வந்தது. வண்டியை நிறுத்திவிட்டு வீட்டுக்குள் நுழைந்த அடுத்த நொடியே அவன் கேட்டான். ''யார் அவன்?''

''யாரைச் சொல்றீங்க?''

''அதுதான் சிக்னல்லே உன்னைப் பார்த்துக் கையசைச்சானே! நீ கூடப் பதிலுக்கு வெட்கம் கெட்டுப் போய்ச் சிரிச்சுக்கிட்டே கையசைச்சே சிக்னல் செய்தியே?''

''வார்த்தையை அனாவசியமாகக் கொட்டாதீங்க. அவர் என் ஆபீசிலே முந்தி வேலை செய்துக்கிட்டு இருந்தார். பிறகு வேறே நிறுவனத்திலே சேர்ந்திட்டார். அவர் என்னைப் பார்த்துக் கையசைக்கும் போது நான் அவரைப் பார்க்காத மாதிரி வேறே திசையில் திரும்பிக்க முடியுமா?''

''நடுத் தெருவிலே பெண்களைப் பார்த்துக் கையசைக்கக் கூடாதுன்ற டீஸன்ஸி தெரியாத காட்டுமிராண்டியைப் பார்த்து உனக்கென்ன சிரிப்பு?''

''இதென்ன அர்த்தமில்லாத கேள்வி? கிட்டக்க இருந்தால் 'எப்படி இருக்கீங்க'ன்னு ரெண்டொரு வார்த்தை பேசிக்கலாம். நான் உங்க வண்டி பின்னாலும், அவர் எங்கேயோவும் இருக்கும் போது ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதற்கு அடையாளமாகக் கையசைச்சுக்கிறதிலே என்ன தப்பு?''

''ஓகோ, அவன் கிட்டே போய்க் குசலம் விசாரிக்கலியேன்னு ஏக்கமாக இருக்குதா?''

''உங்க கூட நான் பேசத் தயாரா யில்லே,'' அவள் சமையலறையை நோக்கிச் செல்லும் போது குரு அவளை முரட்டுத்தனமாகத் தடுத்து நிறுத்தினான். ''நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லி விட்டுப் போ.''

ஆயிற்று. வழக்கமான நாராசக் கேள்விகளைத்தான் எதிர்கொள்ள வேண்டியிருக்கும். இந்த வேதனையிலிருந்து தப்பவும் அவளுக்கு வழி தெரியவில்லை.

''இன்னிக்கு உன் ஆபீசில் உனக்கு முன் சீட்டில் யார் உட்கார்ந்தாங்க?''

''எனக்கு முன் சீட்டில் கோமளாதானே எப்பவும் உட்கார்ந்துப்பா. அதுதான் உங்களுக்குத் தெரியுமே?''

''அவதான் இன்னிக்கு லீவாச்சே?''

அப்படியானால் இவன் இந்த விஷயத்தைத் தன் அலுவலகத்திற்கு போன் செய்து தெரிந்து கொண்டிருக்கிறான். நினைக்கவே கூசியது அவளுக்கு.

''உம், சொல்லு.''

''ராமநாதன் உட்கார்ந்திருந்தார்.''

''அப்பப்போ அவன் திரும்பி உன்னைப் பார்த்துக்கிட்டிருந்தானா?''

சிவந்து போன முகத்துடன் மௌனமாக இருந்தாள் சுகந்தி. கல்யாணமான புதிதில் தன் கணவன் தன்னை இதுபோன்ற சில கேள்விகளைக் கேட்ட போது இவர் ரொம்ப பொஸஸிவ் என்று நினைத்துக்கொள்வாள். சில சமயம் தன் மீது இவருக்கு எத்தனை ஆசை, அக்கறை என்று மகிழ்ந்து கொண்டதும் உண்டு. கொஞ்ச மாதங்களில் இந்த அதீத ஆசை மாறும்; தன்னைப் புரிந்து கொண்டு இந்தச் சந்தேகக் குணத்தை மாற்றிக் கொள்வார் என்று அவள் நினைத்தது நடக்கவில்லை.

''கேட்டதற்கு ஏன் இன்னும் பதில் வரவில்லை?'' கர்ஜித்துக் கொண்டிருந்தான் குரு.

சுகந்தி வெறுத்துப் போனாள். ''என்னைத் தினமும் இந்த மாதிரி கேள்விகளெல்லாம் கேட்க வேண்டாம். நான் வேலைக்குப் போக வேண்டாமென்றால் நின்று விடுகிறேன்.''

# குருராஜகிருபாகரன்



குரு எதையோ தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தது தெரிந்தது.

மறுநாள் காலை எழுந்தவுடன் "இன்னையிலேயிருந்து நீ வேலைக்குப் போக வேண்டாம்" என்றான்.

"இன்னைக்கே வேலைக்குப் போகாமல் இருக்க முடியாது. மேஜை சாவி என்கிட்டே இருக்கு. தவிர, நான் ஒரு மாத நோட்டீஸ் கொடுக்கணும்."

"ஏன், உன் ஆபீஸ் காதலர்கள் கிட்டே பிரிவு நாடகம் நடத்தலாம்னு பார்க்கிறாயா? அதுதான் நடக்காது. உன் கூடவே நானும் வருவேன். சாவியை உன் ஆபீசிலே கொடுத்துவிட்டு, ராஜினாமா செய்து விட்டு வந்தாகணும்."

**வே**லையை ராஜினாமா செய்து மூன்று நாட்களாகி விட்டது.

சாப்பிட்டு விட்டுத் தன் கம்பெனிக்குக் கிளம்பிக் கொண்டிருந்த குரு, "உனக்கு ஏதாவது வேண்டுமா?" என்றான். எதற்குக் கேட்கிறான் என்பதை அப்போது உணராத சுகந்தி, "ஒண்ணும் வேண்டாம்" என்று சொல்ல, அவளை உள்ளே விட்டு வாசல் கதவைத் தாளிட்டான். பிறகு பூட்டு போட்டுக் கொண்டு, அவள் கத்தலை லட்சியம் செய்யாமல் வெளியே நடந்தான்.

இது தினமும் தொடர்ந்தது. ஒரு நாள் சுகந்தியின் பெற்றோர் ஊரிலிருந்து வந்த போது பூட்டிய கதவையும், ஜன்னல் வழியாக உள்ளே தெரிந்த மகளையும் பார்த்த போது கொதித்துப் போயினர்.

குருவின் இந்தக் குரூரமான நடத்தைக்குக் காரணம் அவனுக்கு ஏற்பட்டுள்ள மனச் சிதைவு நோயே என்பது புரிய அவர்களுக்குக் கொஞ்ச காலமாயிற்று.

சிகரெட் புகைக்கும் வழக்கம் கொண்டிருந்த அவனுக்கு, கடைக்காரன் சிகரெட்டில் விஷம் கலந்து தன்னைக் கொல்ல முயற்சி செய்கிறான் என்ற பயம் ஏற்பட்டது. இதில் வேடிக்கை என்னவென்றால் அந்தப் பயத்திலும், அவன் சிகரெட் புகைக்கும் பழக்கத்தை விடவோ, அந்தக் கடைக்காரரிடம் சிகரெட் வாங்குவதை நிறுத்தவோ இல்லை. கடைக்காரரிடம் அவன் ஒரு நாள் செய்த கலாட்டாவில் தெருவே கூடிப் போனது.

வீட்டிலும் சச்சரவுகள் அதிகமாயின. ஒரு நாள் தகராறு முற்றிப் போய்ச் சுகந்தியை அப்படியே சுவரில் மோதினான் குரு. தலையில் பலத்த அடிபட்ட அவளுக்கு இதனால் வலிப்பு நோய் வந்தது.

அலுவலகத்திலும் எதையும் கவனத்தோடு செய்யாமல், கெட்ட பேர் எடுத்துக் கொள்ள ஆரம்பித்ததும் ஒரு வழியாக மனவியல் மருத்துவரைப் பார்க்க அரை குறை மனத்தோடு ஒப்புக் கொண்டான் குரு. சிகிச்சை தொடர்கிறது.

இப்போது சுகந்தியின் உடல்நலம், குரு

வின் மனநலம் இரண்டுமே ரணமாகிக் கொண்டு வருகின்றன.

குருவைப் பற்றி ஸ்கார்ஃப் நிலைய இணை இயக்குனரும், மன இயல் மருத்துவருமான டாக்டர் தாராவிடம் சில கேள்விகள் கேட்டோம்.

* சம்பந்தமில்லாதவர்களெல்லாம் தனக்குத் தீங்கு செய்வதாக மனச்சிதைவு நோயால் பாதிக்கப்பட்டவர்களில் கணிசமானோர் (குருவின் கேஸில் சிகரெட் கடைக்காரர்) கருதுகின்றனரே, அவர்களுக்கு விஷயத்தை எடுத்துச் சொல்லி விளங்க வைத்தல் முடியாத காரியமா?

கிட்டத்தட்ட முடியாத காரியமென்றே கூறலாம். இதுபோன்ற சில விஷயங்களைத் தவிர மற்றவற்றில் இவர்களின் புத்திசாலித்தனம் வியக்கத் தக்கதாக இருக்கும். குரு என்ன நினைத்தான் தெரியுமா? ''இந்திய மருத்துவ ஆராய்ச்சி நிறுவனம் தன்னைக் கொண்டு சில மருத்துவ ஆராய்ச்சிகள் நடத்த நினைக்கிறது. அதற்காகச் சோதனைகள் செய்யச் சிகரெட்டில் ஒரு வித நஞ்சைக் கலந்து அதை என்னைப் பிடிக்க வைத்து விளைவைப் பரிசோதிக்க நினைக்கிறது'' என்று சொன்னான். பொதுவாக நாம் என்ன செய்வோம்? ''எவ்வளவோ பேர் இருக்க உன்னை ஏன் ஆராய்ச்சிக்காக அந்த நிறுவனம் தேர்ந்தெடுக்க வேண்டும்?'' என்போம். அப்படிக் கேட்ட போது அவன் கூறிய பதில் என்ன தெரியுமா? ''என் பெயர் ரொம்ப அற்புதமானது. குருராஜ கிருபாகரன். இதுபோல் பெயர் கொண்டவர்கள் வேறு யார் உண்டு? அதனால்தான் என்னைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்(!)'' என்பான். இது தன்னைப் பெரிதாக நினைத்துக் கொள்ளும் தவறான நிலை. இதை செகண்டரி டிலூஷன் ஆஃப் கிராண்டியோசிடி என்போம்.

* குரு தன் மனைவியைச் சந்தேகப்பட ஏதாவது அடிப்படைக் காரணம் உண்டா?

பொதுவாக இல்வாழ்க்கை என்பது பரஸ்பர நம்பிக்கையின் அடிப்படையிலேதான் அமைகிறது; அமைய வேண்டும். குருவுக்கு இந்த அடிப்படை நம்பிக்கை இல்லை. இந்தச் சிக்கல் மனச்சிதைவாக வடிவெடுத்தது. இப்படிப்பட்டவர்களை விளக்கம் கூறித் திருப்திப்படுத்துவது கடினம். உதாரணமாக பீச்சுக்கு மனைவியோடு போகும் இத்தகைய கணவன் திடீரென்று எதிரே வருபவனைப் பார்த்துச் சந்தேகம் கொள்ளலாம். மனைவியைப் பார்த்து, ''நீயும் நீல வண்ணப் புடைவை கட்டிக் கொண்டிருக்கிறாய். அந்த வாலிபனும் நீல நிறச் சட்டை அணிந்து கொண்டிருக்கிறான். உங்களுக்குள் ஏற்கெனவே தொடர்பு உண்டு. ஒரே வண்ண ஆடையை அணிந்து கொள்வதன் மூலம் ஏதோ சிக்னலை எனக்குத் தெரியாமல் செய்து கொள்கிறீர்கள்'' எனலாம்.

* குரு சுலபத்தில் மனநல சிகிச்சைக்கு உடன்படவில்லை என்று அறிகிறோம். இப்படிப்பட்டவர்களை என்ன சொல்லி மனவியல் மருத்துவர்களிடம் அழைத்துச் செல்ல முடியும்?

இது கொஞ்சம் சாமர்த்தியமாகச் செயல்பட வேண்டிய விஷயம். குருவுக்குத் தன் மனைவி, மாமனார், மாமியார் எல்லோர் மீதும் சந்தேகம். சில நோயாளிகள் மருத்துவர் மீதே சந்தேகம் கொள்வதுண்டு. அப்போது சிகிச்சை அளிப்பது மேலும் கடினமாகி விடும். ஒரு பெண்மணி என்னிடமே, ''நீங்கள் என்னைக் கொல்லப் பார்க்கிறீர்கள்'' என்று தீவிர அவநம்பிக்கை கொண்டு விட்டாள்.

எனக்குத் தெரிந்து ஒரு நோயாளி (பொது மருத்துவமனையில் மனநல சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தவர்) அப்போதைய முதல்வரான எம். ஜி. ஆருக்கு எக்கச்சக்கமான கடிதங்கள் போடுவார் (நகலை எங்களுக்கே அனுப்புவார்!) அதில் மருத்துவமனை மருத்துவர்களெல்லாம் அவரிடம் விரோதம் பாராட்டுவதாகவும், அவரைக் கொல்லக் கூட்டு முயற்சி செய்வதாகவும், அரசு தலையிட்டு அவர் உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்றும் எழுதியிருப்பார்.

நோயாளியின் நம்பிக்கைக்கு உரிய ஒருவர் தனக்கு ஏதோ 'டிப்ரெஷன்' என்றும், அதனால் தான் மனவியல் மருத்துவரைப் பார்க்கப் போவதாகவும், நோயாளியைக் கூடத் துணைக்கு வரச் சொல்லுமாறும் அழைக்கலாம். பிறகு மருத்துவர் பார்த்துக் கொள்வார்.

— அருண் சரண்யா.

என்னதான் பார்த்துப் பார்த்துத் திரித்தாலும் சாம்பார்ப் பொடி வாசனையாக இல்லையே? என்று குறைப்பட வேண்டாம். தனியாவை வறுத்து மிக்ஸியில் பொடி செய்து, வைத்துக் கொண்டு சாம்பாரை அடுப்பிலிருந்து இறக்கும் முன்பு, இந்தத் தனியாப் பொடியில் இரண்டு ஸ்பூன் போட்டு இறக்குங்கள். ஹோட்டல் சாம்பார் போல் கும்மென்று மணக்கும்!

— உமா.






ஃபிலிம் ஸ்டார்கள் இல்லை ■ குளிர்ந்த அருவிகள் இல்லை
மணக்கும் மலர்கள் இல்லை ■ நீராடும் அழகிகள் இல்லை

ஆனால், உங்கள் கூந்தலுக்கு நிச்சயம் உண்டு. அற்புதமான
ஷாம்பூ விஸ்டா. அதிக ஷாம்பூ கொண்ட

**விஸ்டா**

பாக்கெட்டை இரண்டு முறை உபயோகிக்கலாம்.

TAKE WING • B-36 • 81



# கேட்டைத் தாழ்ப்பாள் போடவும்

"கேட்டைத் தாழ்ப்பாள் போடவும்" என்று எழுதி கேட்டில் மாட்டினேன். ஆனால் அதன் அர்த்தமே எனக்கு மறந்து விடும் போல் தோன்றுகிறது.

நாங்கள் இருப்பது சொந்த வீடு. சொந்த வீட்டுக்காரி என்ற பேரில் கதவைத் தாழ்ப்பாள் போடுங்கள் என்று நயமாகச் சொல்லியும் அதட்டிச் சொல்லியும் கரடியாகக் கத்தியும் பயனில்லாமல் போய்க் கொண்டிருக்கிறது. சொந்த வீட்டுக்காரி என்ற பெருமையையும் தகர்த்து எறியக் கூடிய சக்தி இந்த கேட்டுக்கு உண்டு. வீட்டுக்கார மாமிக்கு என்ன வேலை? எப்போதும் வாள் வாள் என்று கத்திக் கொண்டிருப்பாள் என்ற பெயரும் உண்டு.

எங்கள் வீட்டின் முன் விளையாட்டு மைதானம் உண்டு. அருகில் கோவில் கச்சேரி, கதை நடக்கும் மண்டபம் எல்லாம் உண்டு. நல்ல கச்சேரிகள் கதைகள் எல்லாம் கேட்கலாம் என்று சொல்லித்தான் என் கணவர் ஆசை காட்டி இந்த வீட்டை வாங்கினார். ஆனால் இன்னார் கச்சேரி, இன்னார் கதை நடக்கிறது என்ற விஷயமே அது முடிந்த பிறகு யாராவது சொல்லித் தான் தெரியவரும். (வீட்டில் நடக்கும் வம்பு அல்லது சண்டைக் கச்சேரியின் மும்முரத்தில் அதைக் கவனிப்பதற்கோ ஞாபகம் வைப்பதற்கோ நேரமே கிடைப்பதில்லை என்பது வேறு விஷயம்)

கேட்டைத் தாழ்ப்பாள் போடுவதில் உள்ள கஷ்டத்திற்கு வருகிறேன். கேட்டைத் திறப்பதில் ஆடு, மாடு, நாய், பள்ளிப் பையன்கள், காய்கறிகாரி, பால்காரி, குடி வைத்திருக்கும் வீட்டிற்கு வரும் விருந்தினர்கள் எல்லோரும் என் வீட்டைப் பொறுத்த வரையில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

மாட்டைப் பொறுத்தவரையில் கேட்டைக் கொம்பால் தள்ளிப் பார்த்துத் திறந்திருந்தால் உள்ளே வந்து நன்றாகப் பச்சைப் பசேல் என்று வளர்ந்திருந்ததை மொட்டை அடிக்கும். விரட்டினால் சில மாடுகள் என்னை முறைத்துப் பார்த்து விட்டு அலட்சியமாக 'நீ என்ன சொல்வது நான் என்ன கேட்பது' என்று தங்கள் வேலையைத் தொடரும்.

ஆட்டிற்குக் 'கேட்'டே லட்சியமில்லை. கேட் தாழ்ப்பாள் போட்டிருந்தாலும் சுவர் வழியாக ஏறி குதித்து ஐந்தாறு ஆடுகளாக வந்து எல்லாச் செடிகளையும் பதம் பார்த்து விட்டு நாம் கேட்டைத் திறந்து வைத்து விரட்டும் போது எந்தப் பக்கம் வாசலுக்கு வழி என்று தெரியாமல் இக்குக்கு ஒன்றாக ஓடி ஒருவழியாக வாசலுக்குப் போய்ச் சேரும்.

எங்கள் வீட்டில் ஏதோ தெருவில் போகும் நாய் வீட்டோடு இருக்கிறது. யார்



எங்கே கொண்டு விட்டாலும் அவர்கள் திரும்பி வருவதற்கு முன்னால் அது வந்து நிற்கும். காலால் தள்ளி கேட்டைத் திறக்கும். தாழ்ப்பாள் போட முடியாது. என் கஷ்டத்தைப் பற்றி அதுவும் கவலைப்படுவதில்லை.

பள்ளிப் பையன்களுக்கு எங்கள் வீட்டு முன்புள்ள ரோடுதான் விளையாட்டு மைதானம். மாலை முழுவதும் விளையாட்டு என்று பாரதி பாடியதற்கேற்ப (லீவு நாட்களில் காலை ஆறு முதல் மாலை ஏழு வரை) அப்படியோர் கிரிக்கெட் விளையாட்டு. எங்கள் காம்பவுண்டு சுவரைத் தாண்டி உள்ளே விழுந்தால் அது சிக்ஸர். விழுந்த பந்தைத் தேடும் போது நாங்கள் ஆசையாக வைத்திருக்கும் செடி கொடிகள் எல்லாம் மிதிபடும். தேடும் போது பந்து போட்ட/அடித்த டீமின் மொத்த பையன்களும் ஆஜர். எங்கள் வீட்டினுள் அவர்கள் ஆளுக்கு ஒருத்தராக தேட நான் செடிகளுக்காக கவலைப்பட்டு கரடியாகக் கத்துவது தான் மிஞ்சும். ஒரு நாளைக்கு அருகில் இருக்கும் ஸ்கூலின் ஆறாவதிலிருந்து பன்னிரெண்டாவது வரை எத்தனை செக்ஷன் உண்டோ அவ்வளவு பையன்களும், "மாமி நாங்கள் இங்கு விளையாட வருவது இது தான் முதல் தடவை" என்று சத்தியம் செய்வார்கள். ஆயிரம் பையன்களில் யாரை நான் ஞாபகம் வைப்பது?

எங்கள் வீட்டில் அவுட் ஹவுஸில் குடி வைத்திருக்கிறோம். நாலு பேர்தான் என்று கண்டிஷன். ஆனால் ஒரு நாளைக்கு வரும் உறவினர்களின் எண்ணிக்கை குறைந்தது இருபத்தைந்து. அதிலும் நாள் கிழமை என்றால் கேட்கவே வேண்டாம். இரண்டு பக்கமும் போட்ட தாழ்ப்பாளைத் திறந்து பிறகு வெறுமனே உணர்ச்சியே இல்லாமல் சார்த்தி விட்டோ அல்லது அப்படியே திறந்து போட்டு விட்டு வருவதோ அவர்களுக்கு ரொம்பப் பிடிக்கும். நானும் அவர்களிடம் எல்லோரிடமும் சொல்லி வையுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். ஆனால்



ஜவ்வரிசி வடாம் செய்கையில் தளர செய்து ஸ்பூனால் அல்லது கையால் சிறு சிறு வட்டமாக வைப்பது வழக்கம். கெட்டியாகவே கூழ் கிளறி ஸ்பூனால் எடுத்து வைத்து பின் தோசை சுடுவது போல மாவை நன்றாக மெல்லிய வட்டமாக பிளாஸ்டிக் ஷீட்டில் இட்டால் கடையில் கொடுப்பது போல் மெல்லிய வடாம் அழகான ஷேப்புடன் கிடைக்கும். நீங்களும் தான் முயன்று பாருங்களேன்.

— இராதிகா.



அவர்களுக்கு யாரிடம் சொன்னோம், இன்னும் யார் பாக்கியிருக்கிறார்கள் என்பதில் குழப்பம். அவர்களுக்கே கட்டுப்படியாகவில்லை. ஆக மொத்தத்தில் கேட்டைத் தாழ்ப்பாள் போடுவது என்பது மிகவும் சிரமமான காரியம்.

பொதுவாக சொந்த வீடாக இருந்தாலும் சரி குடித்தனம் இருக்கும் வீடாக இருந்தாலும் சரி. என்ன அவசர வேலையாக இருந்தாலும் சரி. பொறுப்புணர்ச்சி என்பது எல்லோருக்கும் இருக்க வேண்டும். கேட்டில் எழுதியிருந்தாலும் சரி, எழுதி வைக்கா விட்டாலும் சரி. பிறரின் கஷ்ட நஷ்டங்களை மனதிற் கொண்டு அல்லது இதைப் படித்த பிறகாவது "கேட்டைத் தாழ்ப்பாள் போடுங்கள்."

— வி. தாரா.

அத்தனை பேர்கள் அமர்ந்திருந்தும், அந்த அறை முழுவதும் ஒரு நிசப்தம். மனம் துளியும் ஏற்காத, வயிற்றில் சங்கடப்பட வைக்கும் ஒரு அமைதி. அரை மணிக்கும் மேலாய் நீடித்தது. அண்ணாதான் முதலில் அமைதியைக் கலைத்தவர்.

''நேத்து ராத்திரியே போயிட்டானாம். இன்னிக்கு அவ வீட்டுக்கு தூக்கிண்டு போயிருந்தாலும் போயிருப்பா.''

''ஒழியட்டும். ஒரு முழுக்கு போட கூட அருகதை அற்றவன். ரவி... இனிமேதான் நாம உஷாரா இருக்கணும். அவ ஏதாவது தில்லுமுல்லு பண்றதுக்குள்ள நாம மொதல்ல போய் அவனோட பி. எப், கிராச்சுவிட்டி மத்த சேவிங்க்ஸ் எல்லாத்தையும் நர்மதாவுக்குக் கிடைக்கும்படி செய்துடணும்...'' — அப்பா அவசரமாய் சொன்னார்.

அதை கழட்டி எறிஞ்சிருக்கணும் நர்மதா. ஆனா... அப்படி செய்யாததும் நன்மைக்குதான். இப்போ அந்தத் தாலிதான் அவனோட மொத்த சொத்துக்கும் இவளை உரிமையாக்க போறது.''

''நீங்க சொல்றது கொஞ்சமும் நல்லா இல்லை. என்னதான் அவன் அப்படி நடந்துண்டுட்டாலும், நர்மதா இன்னும் அவனோட பெண்டாட்டிதான். புருஷன் செத்துப் போயிட்டான்னா, இவ போய் பார்க்காம இருந்தா... வீட்டுக்கே ஆகாது. தெய்வம் சிரிக்கும்னுவா.''

''ஆங்... தெய்வம் எப்ப சிரிக்கலை. நாள் பார்த்து நட்சத்திரம் பார்த்து பெண் பார்க்க வந்தானே, ரொம்ப நல்லவனாட்டம். அப்போ சிரிக்கலையா? கல்யாணம் பண்ணிண்டு ஒரு வருஷம் குடித்தனம் பண்ணிட்டு எவளோ பின்னால போனானே, அப்போ என்ன பண்ணித்து அந்தத்

# நான், அவள், அவன்!

''பின்ன... அவனோட பணம் மொத்தம் நர்மதாவுக்குதான் வரணும். அதை யாரும் அசைக்க முடியாதே. அவ என்ன தாலி கட்டிண்டவளா? அவளுக்காக நாம ஏன் பயப்படணும்?..''

''அவன் ஏடாகூடமா ஏதாவது எழுதி கிழிதி வெச்சிருந்தான்னா?''

''கோர்ட்டுக்குப் போனா... நம்ம பக்கம்தான் ஜெயிக்கும். நர்மதாவை இன்னும் விவாகரத்து பண்ணலை அவன்.''

''அதென்னமோ வாஸ்தவம்தான்.'' மெதுவாய் தலை நிமிர்ந்தாள் அம்மா.

''கொஞ்சம் இருங்கோ. சொத்தை பத்தியெல்லாம் அப்புறம் பேசிக்கலாம். நர்மதா போய் ஒரு வாட்டி அவன் முகத்தைப் பார்க்க வேண்டாமா? என்ன இருந்தாலும்..''

ஆத்திரத்தில் முகம் சிவக்க அண்ணா இரைந்தான்.

''அந்த வீட்டு வாசபடியை நம்ம நர்மதா மிதிக்கணுமா?... என்னம்மா நீ பேசறே..''

அப்பாவுக்குள்ளும் ஆவேசம் புகுந்தது.

''மூடும் வாயை... அவன் மூஞ்சியை பார்க்கணுமாம். எதுக்கு? தாலி கட்டினானே அந்த தோஷத்துக்காகவா? என்னிக்கோ

தெய்வம். எம் பொண்ணு அத்தனை துக்கத்தையும் நெஞ்சு சுமந்துண்டு, துடிச்சு, துவண்ட போது எங்க போயிருந்தது நீ சொல்ற அந்தத் தெய்வம். தண்டிக்கறதுக்கு மட்டும்தான் தெய்வம்னா... போசு... அந்த மாதிரி தெய்வமே வேண்டாம்...''

அப்பாவின் குரல், சுய பச்சாதாபத்தில் உடைந்து கம்மியது.

எல்லோருடைய பேச்சையும் கேட்டபடி, அமைதியாயிருந்த நர்மதாவை பார்த்து அண்ணா —

''இருங்கப்பா... நர்மி என்ன நினைக்கறான்னு கேளுங்க. அவ போய் பார்க்கணும்னு ஆசைபட்டா நாம ஒண்ணும்

---

ரஜனி சந்தானம்



சொல்ல முடியாது. ஒரு வருஷம் அவன் கூட வாழ்ந்து இருக்காளே. அவ என்ன சொல்றான்னு கேக்கலாம்...'' நிதானமாய் நிமிர்ந்து பார்த்தாள் நர்மதா.

முகம் தெளிவாய், அமைதியாய் இருந்தது.

''நான் வாழ்ந்தது ஒரு வாழ்க்கையா அண்ணா. முதல் இரவின்போதே தனக்கும் அவளுக்கும் இருக்கிற தொடர்பை சொல்லி, தன்னுடைய அம்மா... அப்பாவுக்காக என்னை பண்ணிண்டதாக சொல்லி... அன்னிக்கே என்னை கொன்னுட்டார். உங்க மனசு வேதனைபடக் கூடாதேன்னு நினைத்து. அப்பாக்கு வேற அப்பத்தானே ஒரு ஹார்ட் அட்டாக் வந்து ரெக்கவர் ஆகி இருந்தார். இந்தச் செய்தியே அவருக்கு எமனாயிட போறதேன்னு நானே எனக்கு ஒரு கவசத்தை மாட்டிண்டு ஒரு வருஷம் அவர் கூட பேரளவுக்கு பெண்டாட்டின்னு சொல்லிண்டு... ரொம்ப கொடுமை அண்ணா அது. அப்ப கொஞ்சம் நெஞ்சில் பலமிருந்ததால் வாழ்ந்தேன். இப்போ முடியாது. ஒரு தப்பும் செய்யாத எனக்கு இப்படி ஒரு தண்டனை கொடுத்தவரோட முகத்தை... என் வாழ்க்கையைத் தன்னோட சுயநலத்துக்காக கருக்கினவரோட முகத்தை... இந்த ஜென்மத்துல மட்டுமில்லை, ஈரேழு ஜென்மத்துலயும் பார்க்க விரும்பலைப்பா.''

''அப்ப... அந்தத் தாலியை மட்டும் ஏன்டீ போட்டுண்டு இருக்கே....'' உரக்க சிரித்தாள் நர்மதா.

''ஐயோ அம்மா... இதை தாலி அது இதுனு பெரிசா நின்னச்சுண்டு ரொம்ப மதிப்பு கொடுத்துண்டு இருக்கே. நான் இதை சாதாரண செயின் போல அலங்காரத்துக்குப் போட்டுண்டு இருக்கேன். ஏன்னா, இதுதான் என் மனசுல எனக்கிழைக்கப்பட்ட துரோகத்தைச் சுட்டிக் காட்டி ஆண்கள் பக்கமே மனசை திருப்ப விடாம செய்யுது. அதுமில்லாம இதைச் செய்ய, அப்பாவும் நீயும் வெயில் மழைனு பார்க்காம, கடை கடையா ஏறி டிசைன் பார்த்து... உங்க உழைப்புக்கு மதிப்பு குடுக்க இதைப் போட்டுண்டு இருக்கேன். என் வரை இதுக்குனு தனி அர்த்தம் ஒண்ணுமில்லை. அதே போல, அந்த மனுஷன் போயிட்டார்ன்றதுக்காக இதை கழட்டவும் போறதில்லை. கணவனாய் வாழாதவனுக்கு மனைவியாய் இருக்க நான் விரும்பலை.

அண்ணாவும் அப்பாவும் சாரங்கனின் ஆபீஸிற்குப் போய் விசாரித்த போது அதிசயமாய் சாரங்கனே தன் பணம் முழுவதற்கும் நர்மதாவையே வாரிசாக்கி விட்டுப் போயிருப்பது தெரிந்தது. சாரங்கனின் அகால மரணத்தைக்காட்டி நர்மதாவிற்கு அவன் ஆபீஸிலேயே வேலை கிடைத்தது.

வாழ்க்கை சக்கரம் ஒரே கதியில் சுழன்றது.

ஆறுமாதங்களாய் ஆபீஸ் போய் வருகிறாள் நர்மதா.

மனத்தில் சதா ஒரு உறுத்தல்.

யார் அவள்...? இதே ஆபீஸில்தானே வேலையாய் இருப்பதாய் சொன்னார்கள். இதுவரை ஒரே ஒரு முறை கூட அவளைப் பார்க்கவில்லையே. சாரங்கனின் மறைவுக்குப் பின் வேலையை விட்டு விட்டாளோ? எப்படி இருப்பாள்? என்னைவிட அழகா?

அவர்களுக்குக் குழந்தைகள் இருக்குமோ?

ஏனோ தெரியவில்லை, மனதுக்குள் கேள்விகள் துளைக்க, ஆர்வம் அதிமாகியது. அன்றைய பகல் உணவிற்குப் பிறகு, டெஸ்பாட்ச் செக்ஷனுக்கு சென்றாள். ஏதோ சாக்கில் கண்களைச் சுழலவிட்டு அறை முழுவதும் தேடினாள். யார் அவள்? கேட்க வேண்டும், யாரிடம் கேட்பது. கொஞ்சம் சாதுவாய், சாரங்கனின் விஷயம் முழுவதும் அறிந்த சந்தியாவைக் கண்டு பிடித்து... கேட்டே விட்டாள்.

"நீலாவை பத்தியா கேக்கறீங்க.. லாங்க் லீவில் இருக்காங்க. வந்தாக்க காட்டறேன் உங்களுக்கு."

"ஓ... துக்கம் காக்கறாளோ.." மனசு பொறாமையில் கேலி பேசியது. அதற்குப் பின் மூன்று மாதங்கள் வரை... அவளுக்கு நீலாவைப் பார்க்க சந்தர்ப்பமே வரவில்லை.

அன்று வீட்டிற்குக் கிளம்பும் முன், தன் முன் நிழலாட தலை நிமிர்ந்தாள். யார் இவள்? என்ன வேண்டும் இவளுக்கு...

அவசரமாய் அருகில் வந்து, சந்தியா, விழிகளால் அவளை நர்மதாவிற்கு விளக்கினாள். புரிந்து கொண்டாள் நர்மதா.

தூய வெள்ளை உடையில், மெல்லிய உடல் வாகில் அவளைக் கண்ட போது நெஞ்சின் ஒரு மூலையில் மெல்லிய சந்தோஷம்.

'உலகம் ஏற்காத உறவுக்கு ஆசைபட்டாய் இல்லையா? படு அவஸ்தை. முதலிலிருந்தே நீ இவ்வளவு ஒடிசலா, இல்லை என்றால் சாரங்கனின் மரணம் உன்னை உருக்கிவிட்டதா. எதுவானாலும் சரி. வருந்துகிறாய். நன்றாக வருந்து. வாழ்நாள் முழுவதும் கதறு. நீ ஒன்றும் என்னைவிட அழகி இல்லை. எதைக் கண்டு உன்னிடம் மயங்கினான் சர்ரங்கன்....' தறிகெட்டு ஓடியது மனசு. குரலை இறக்கித் தலையைத் தாழ்த்தி, வந்தவள் பேசினாள்.

"வணக்கம். உங்க கூட கொஞ்சம் பேசணும். பக்கத்துலதான் வீடு. உங்களுக்கு ஆட்சபணை இல்லைன்னா. ஒரு நிமிடம் வீடு வரை வரமுடியுமா?" புரியவில்லை நர்மதாவிற்கு. என்னுடன் பேச வேண்டுமா? என்ன பேசப் போகிறாள். மன்னிப்பு கேட்கப் போகிறாளா? பணம் கேட்க போகிறாளா? நான் இவளுடன் போகலாமா? வேண்டாமா? முகத்திற்கு எதிரில் மனதின் வெறுப்புகளை எல்லாம் கூட்டி 'போ வெளியே' என்று கத்தலாமா? அநாகரீகமாய் இருக்குமோ? அவளை விடவா அநாகரீகமாய் நடக்க முடியும்?

மனத்தில் கேள்விகள் பிறந்தாலும் செயலாற்றும் வலிமை இல்லை.



அவளைப்பற்றிய முழு விவரங்களும் அறிய வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. இப்பொழுது வீட்டுக்குப் போய் என்ன செய்ய போகிறேன். என் அறைக்குள் என் தனிமையில்..... நினைப்பே மனதை சலிப் படைய செய்தது.

ஏதுவோ ஒரு சக்தி உ ந் தி த் த ன் ள அவளுடன் புறப்பட்டாள் நர்மதா.

ஒண்டுக் குடித்தனங்கள் நிறைந்திருந்த பகுதியில், சற்று தள்ளினாற் போல் ஒதுங்கி இருந்த வீடு அவளுடையதாய் இருந்தது. அவர்கள் இருவருமாய் உள்ளே நுழைவதை ஜன்னல்கள் வழியாய் பலர் பார்த்தார்கள். அவர்கள் கண்களில் கேலியா, பரிதாபமா?.. புரியவில்லை.

வீட்டில் வசதிகள் அதிக மில்லாவிட் டாலும், வறுமை இருப்பதாய் தெரிய வில்லை. முதல் அறையிலேயே மேஜைமேல் போஸ்ட் கார்ட் அளவில் சாரங்களின் படம் வைக்கப்பட்டிருந்தது. முன்னால் சின்னதாய் ஒரு விளக்கு.

- இப்பொழுதுதான் கவனித்தாள் நர்மதா. அறையின் ஒரு மூலையில் தூளியில் ஒரு குழந்தை அசங்கியது. அழுகைக்கு மெலி தாய் கருதி கூட்டியது.

உள்ளே நுழைந்ததும் கதவை மூடிய பின், அவள் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு அழத் துவங்கினாள்.

நர்மதாவுக்குத் தேற்றத் தெரியவும் இல்லை. விருப்பமும் இல்லை.

நின்று கொண்டிருந்தவள் மௌனமாய் தரையில் அமர்ந்து கொண்டாள்.

அவள் அழுது ஓய்ந்த பின்பும் மௌன மாய் யோசனையிலிருந்தது நர்மதாவை அவஸ்தைப்பட வைத்தது.

ஏதோ பேச வேண்டுமே என்று,

''குழந்தையை உள்ளே வைத்து பூட்டி விட்டா வந்தீங்க...''

''ஆமாம்...'' ஒரே வார்த்தையில் பதி லைச் சொல்லி விட்டு மீண்டும் குலுங்கி அழத் துவங்கினாள்.

பால் பாயிண்ட் ரீபில் சரியாக எழுத வில்லை என்றால் சூடான குக்கரின் மேல் சில நொடிகள் வைத்துப் பின்னர் எடுத்து எழுதினால் நன்றாக எழுத வரும்.

— லலிதா சந்திரசேகரன்.



''இதே வீட்டில்தான் இத்தனை நாளும் வாழ்ந்தேன். அப்பொழுதெல்லாம் மனசு எதற்கும் கலங்கவில்லை. ஆனா... இப்போ ஒரே கலக்கமா இருக்கு. பயமா இருக்கு. எல்லோரும் என்னை ஏளனமாப் பார்க்கறா போல... தாங்க முடியலைங்க... தப்புன்னு தெரிஞ்சும் சேர்ந்து இருந்துட்டோம். நானும் சாரங்கனும் காலேஜில் படிக்கும்போதே ரொம்பவும் பழகிட்டோம். அவர் அருகில் இருந்துட்டா எனக்கு உலகமே மறந்து விடும். உணர்வுகளே மறந்து விடும். உலகில் அத்தனை நிம்மதிகளையும் மனசு உணர்ந்து விடும். அதனால்தான் எங்க ரெண்டு பேர் வீட்டிலேயும் எதிர்க்கச்செயும், அவர்களை எப்படியும் சம்மதிக்க வைத்து அவர்களின் ஆசீர்வாதத்துடன் வாழ்வைத் துவக்க முடிவு செய்தோம். அவங்க மனசு இரங்கலை. தனியா வாழத் துவங்கினோம். எங்களுக்கு நாங்க செய்வது தவறாகவே படவில்லை. மனசு இணைந்த இரண்டு பேர் ஒன்றாய் வாழ்வது தவறா? ஒருவருக்காகவே மத்தவர் பிறந்திருக்கறதா நினைத்தோம். நாளை, எதிர்காலம், குழந்தைகள் என்ற எண்ண மெல்லாம் தோன்றியதே இல்லை. ஒவ்வொரு நாளையும் திருநாளா மதித்து சந்தோஷப்பட்டுக்கிட்டு இருந்தோம். எனக்கு அவர் மேல் பரிபூரண நம்பிக்கை இருந்ததால் கல்யாணம் பண்ணிக்கங் கோன்னு கேட்டது கூட இல்லை...''

மனசுக்குள் சின்னதாய் பொறாமை தலை தூக்கியது நர்மதாவுக்கு. வார்த்தைகளால் அவளை துன்புறுத்துவதில் ஒரு சந்தோஷம் பிறந்தது அவளுக்கு.

''கல்யாணம்றதுக்கு எல்லாம் அர்த்தம் இருக்கா என்ன? எனக்குக் கூடத்தான் கல்யாணம் ஆச்சு? என்னத்தை அனுபவிச் சேன் நான்...

அடிபட்ட வேதனை நீலாவின் கண்களில் நன்றாகவே தெரிந்தது.

''மரணப் படுக்கையில் இருக்கும் தன் தந்தையின் வற்புறுத்தலுக்காக உங்களை மணக்க வேண்டிய அவசியத்தை எங்கிட்ட சொன்னார்...''

''ரொம்ப உத்தமர். உங்க விஷயத்தை முதலிலேயே எங்கிட்ட சொல்லி இருந்தா பக்குவமா அவங்க அப்பாகிட்டே சொல்லி இருப்போமே. எனக்கும் நல்ல வாழ்க்கை அமைந்திருக்குமே...''

''நிஜங்க. நீங்க சொல்றது நிஜம். எல்லா கோணத்திலேயும் யோசித்துப் பார்த்தோம். அவரோட சின்ன மறுப்பு கூட பெரிய அதிர்ச்சியாகிடும் அவரோட தந்தைக்கு. அதற்கு அப்புறம் அம்மா, அண்ணா, தம்பிகள் எல்லோரும் அவரைக் குற்றவா ளியா பார்ப்பார்கள்... மன்னிக்கவே மாட்டார்கள்.''

''இப்பொழுது மட்டும் எல்லோரும் மன்னித்து விட்டார்களா? யார் மன்னித்தா லும் நான் மன்னித்து விடுவேன்னு எப்படி நம்பினீங்க...''

''உங்களால் மட்டுமில்லை. எந்தப்

# TAMIL NEW YEAR DAY GIFT

Pearls price range from Rs. 40-60

For every purchase of 10 gms of pearls Silver string & making charges free.



SPECIAL

MADE TO ORDER

DESIGNS

Semi Precious stone malas from Rs. 25 to Rs. 250. All birth stones & American diamond, Silver jewellery & Silver Fancy articles, 2 Face to 21 Faces Rudraksha beeds & spadiga malas & Tulasi malas.





## SHRI LAKSHMI PEARLS & JEWELLERS

Shop No. 11, Apex Complex,
20, Thyagaraya Road,
Pondy Bazar, (next to
Nagesh Theatre) Madras - 17.

Br. Shop No. 16A,
PICNIC PLAZA
Luz Corner,
Mylapore - Madras - 4.

*Bring this advt. cutting & avail 25% special discount on cash purchases.*

# அடிக்கடி
# வரும்
# தொல்லை
# என்றும்
# இனி இல்லை




புதிய பீகாக் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்டவ்

தொல்லை தராமல் நீண்ட காலம் உழைக்க,
விஞ்ஞான முறையில் வடிவமைந்தது.
சாதாரண திரி ஸ்டவ்வுடன் ஒப்பிட்டுப்
பாருங்கள். இதன் அருமை புரியும்.

★ உயர்தர சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் வடிவமைக்கப்பட்டது. துருப்பிடிக்காது
★ சீரான நீல நிற ஜ்வாலை. சூடு வேகமாகப் பரவும். சமையலும் விரைவாக ஆகும்.
★ பெரிய பாத்திரங்கள் வைக்கத் தனி அமைப்பு.
★ சுத்தம் செய்வது எளிது.
★ பளபளப்பு குறையாது.
★ பாகங்கள் மாற்றத் தேவை இல்லை.

எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கும்.



## பீகாக்

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் திரி ஸ்டவ்

- தரமான



**பட்டர்ஃபிளை**

தயாரிப்பு.

Insight-1237

பெண்ணாலயும் மன்னிக்க முடியாது. நான்
தான் அவரிடம் கெஞ்சி கேட்டுக்கிட்டேன்.
இந்தக் கல்யாணத்துக்கு ஒத்துக்கோங்க.
உங்க வீட்டு விரோதம் இல்லாம இருக்கும்.
எனக்கு உங்க மனைவின்ற அந்தஸ்து
வேண்டாம். சொத்து வேண்டாம். சுகம்
வேண்டாம். ஆனால் தினமும் ஒரே ஒரு
முறை வாசல் வரை வந்து உங்க முகத்தை
எனக்குக் காண்பித்து விட்டுப் போங்க. நீங்க
வருவீங்க, வந்தீங்கன்ற நிஜமே எனக்கு
யானை பலத்தைக் கொடுக்கும். இந்த உலகத்
தையே நிமிர்ந்து பார்க்கற தைரியம் வரும்.

என் அன்புக்குப் பாத்திரமானவருக்காக
நான் எதையும் செய்யத் தயார். அவருக்கா
கச் செய்யும் செயல்களில் காணும் சுகம்.
நிம்மதி.... போதுமே எனக்கு அந்த சுகம்னு
சொன்னேன். ஒரு வருஷம், அவர் தந்தை
மறையும் வரை உங்க கூட இருந்தாலும்,
உங்களை மனைவியா நடத்தலை, நடத்த
முடியலைன்னு சொல்லி அழுவார்.

அவர் எத்தனை மென்மையான உள்ளம்
கொண்டவர்ன்னு நினைச்சுப் பார்த்தேன்.
இப்போ... திடீர்னு அவர் இல்லாமலாயிட்
டது தாள முடியலைங்க. நிஜமா...? இப்படிக்
கூட ஒரு பிரிவு வரும்னு ஏன் நாங்க
நினைச்சுக் கூடப் பார்க்கலை. ஒருவேளை
நினைச்சுப் பார்த்திருந்தா சாதாரண
மனிதர்களைப் போல் நடந்துக்கிட்டு இருந்
திருப்போமோ... உங்களுக்கு நாங்க தாளாத
மனவருத்தத்தைக் கொடுத்துட்டோம்.
எப்படி நிவர்த்திக்கறதுன்னு கூட தெரியலை.
ஒரு ஸ்டேஜில் குழந்தையைக் கூட்டிக்கிட்டு
நான் வேற ஊருக்குப் போயிடலாமான்னு
கூட நினைத்தேன். ஆனால் அவரோட
அன்பின் ஆழம் பற்றி எனக்குத் தெரியும்.
அவர் பைத்தியமாகிடுவார். உங்களுக்கு
மில்லாம எனக்குமில்லாம போயிடு
வார்ன்னு புரிந்தது.

உங்களை விவாகரத்து செய்து விட்டால்,
நீங்கள் மறுமணம் செய்து கொள்வீர்களோ,
சுகமாய் இருப்பீர்களோ என்று எண்ணி
னார். ஆனாலும் ஏனோ மேலும் உங்கள்
மனதை அது புண்படுத்தி விடுமோ என்று
பேசாமலே இருந்தார். தன் தவறுக்குப்
பிராயச்சித்தமாய் தன் மாதச் சம்பளம்
முழுவதையும் உங்கள் பெயருக்கே போட்டு
வைத்தார். என் ஒருத்தியின் சம்பளத்தில்
தான் வீட்டை நடத்தினோம். தெய்வத்துக்
குக் காணிக்கை செலுத்துவது போல்
மிகவும் அக்கறையாய் உங்கள் பெயரில்
பணத்தைப் போட்டு வந்தார். அதில்
அவருக்கு ஒரு சின்ன நிம்மதி.

"உடல் அளவில் அவனுக்குப் பாதுகாவ
லனாய் இருக்க முடியாவிட்டாலும்,
பொருளளவில் அவனுக்கு ஒரு பாது
காப்பை கொடுப்பேன் என்றார். ஒரு சிறிய
வீடும் உங்கள் பெயரில் வாங்கி இருக்கிறார்.
வாழ்வின் அந்திம அத்யாயத்தில் மனதில்
நட்பும் அன்பும் மட்டுமே பொங்கும் அந்தக்
கட்டத்தில் உங்களிடம் ஒப்படைத்தால்
நீங்கள் அவரை மன்னித்து அவற்றை ஏற்பீர்



**வெண்ணெய் சுற்றி வரும் பிளாஸ்டிக் பேப்பரில் உள்ள வெண்ணெயை முழுமையாக எடுப்பதற்கு, சப்பாத்தி மாவு பிசைந்து அந்த மாவை, பிளாஸ்டிக் பேப்பரில் உருட்டி எடுத்தால் வெண்ணெய் முழுவதும் உபயோகப்படுவதுடன், சப்பாத்தியும் மிருதுவாகவும், ருசியாகவும் இருக்கும்.**

**— பவானி.**

கள் என்று சொன்னார். ஒரு சகோதரன்,
ஒரு தந்தையைப் போன்ற பாதுகாப்பை
உங்களுக்குக் கொடுத்து விட்டதை போன்ற
நிம்மதியை அடைந்தார்...."

மேலும் பேச இயலாமல் நெஞ்சடைக்க
மௌனமானாள் நீலா. மீண்டும் தொடர்ந்
தாள்.

"இப்போ உங்களை நான் எதுக்கு வரச்
சொன்னேன்னா..."

கண்களில் ஒரு வெறுப்பு பனிச்சிட,

"தெரியும். அது கூட புரியாத ஜடமில்லை
நான். இந்தக் குழந்தையை காப்பாற்ற முடிய
வில்லை. அவர் பணத்தில் கொஞ்சம் பங்கு
கொடுன்னு கேக்கப் போறே. இல்லாட்டி
இன்னும் உங்கழுத்தில் என் காதலன் கட்டிய
தாலி தொங்கறதே அவர் பிள்ளையை உன்
பிள்ளையா நினைச்சு வளர்க்கும்
பொறுப்பை ஏத்துக்கோன்னு என் தலைல
கட்டப் பார்ப்பே. அம்மா... நீலா. நான்
சாதாரண பெண். அந்தக் கால கண்ணகி,
நளாயினி போன்றவளில்லை..."

விஷமாய் வார்த்தைகளைக் கொட்டிய
திருப்தியில் எழுந்து கொண்டாள் நர்மதா.

சட்டென்று அவளுடைய முழங்கால்
களை கட்டியபடி விக்கி விக்கி அழுதாள்
நீலா. நர்மதா இதை எதிர்பார்க்கவில்லை.
மனம் லேசாய் இளகினாலும், 'நடிக்கிறாள்
பாதகி' என்று மீண்டும் மனதுக்குள்
நீலாவை வெறுத்தாள்.

"ரொம்ப சாதாரணமா நினைச்சுட்டீங்
களே எங்க உறவை. மூன்று பேரும் வசதி
யாய் வாழ்ந்தோம். இப்போ ரெண்டு பேர்
வாழ முடியாதா. இந்தக் குழந்தையையா
உங்களிடம் தருவேன். நன்றாகப் பாருங்க
இவன் முகத்தை. அவரே சின்ன உருவமாகி
எங்கிட்ட இருப்பதாய் நினைச்சுக்கிட்டு
இருக்கேனே. இந்தப் பொக்கிஷத்தையா
உங்ககிட்டே கொடுப்பேன். செத்தாலும்
கொடுக்க மாட்டேன். அப்புறம் என்ன
சொன்னீங்க... பணமா? எனக்கெதுக்
கும்மா பணம்? உங்கள் பெயரில் பணம்

போடும்போதே ஊக்குவித்தவள் இப்பொழுதா பணம் பற்றி யோசிக்க போகிறேன். என்னையும் என் குழந்தையையும் பாது காத்துக் கொள்ளும் அளவு இருக்கும்மா பணம். நானும் அதே ஆபீஸில் வேலை பார்ப்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ? ஆனாலும் உங்க உதவி வேணும்.''

நர்மதா வேறு ஏதாவது கற்பனை செய்து கொண்டு வீட்டை விட்டு புறப்பட்டு போய் விடக் கூடாதே என்ற பயத்தில் அவள் கைகளை பற்றிய வண்ணம் அவசரமாய் பேசினாள் நீலா.

''நீங்கள் பாதிக்கப்பட்டிருந்தாலும் சமூகத்தின் கண்களுக்கு முன் அவர் உங்களின் சொத்து. அவருடையது என்னும் எல்லாமே எனக்கு இப்போது தேவை. அவைகளைப் பார்க்கும் போது நான் அவரையே பார்க்கறாப் போல உணர்வேன். அது மீண்டும் எனக்குள் கொஞ்சம் பலத்தைக் கொடுக்கும். அதனாலதான் உங்களை கெஞ்சிக் கேட்கிறேன். நீங்க இங்கு அடிக்கடி வர வேண்டும். நீங்கள் என்னுடன் சகஜமாய் பழக வேண்டும். அதைப் பார்த்த பின்பாவது இந்தச் சமூகம் எனக்கும் ஒரு மன்னிப்பை கொடுக்கும். இப்போ அவரில்லாமல் பலகீனப்பட்டுப் போன என் மனம் சமூகத்தின் பேச்சுக்களில் துவண்டு போய் விடுகிறது. இந்தக் குழந்தைக்காகவாவது நான் நடமாட வேண்டும். அதற்காகத்தான் கேட்கிறேன். தயவு செய்து மறுத்துடாதீங்க. வரேன்னு சொல்லிடுங்க.''

உடல் சிலிர்த்துப் போனது நர்மதாவுக்கு.

இப்படியும் ஒரு பெண்ணா? இப்படி ஒரு கண்மூடித்தனமான, தன்னலமில்லாத அன்பா? அவளுக்கு முன் தான் ரொம்பவும்

உளுத்தம் பருப்பு, வற்றல் மிளகாய், பெருங்காயம், வெந்தயம் இவைகளை எண்ணெயில் வறுத்துப் பொடித்து, மாங்காயைத் தோல் சீவி, தேங்காயுடன் அரைத்து, இந்தப் பொடியையும் சேர்த்து, சிறிது மோரில் உப்புப் போட்டுக் குழப்பி, கடுகு தாளித்தால் அருமையான சுவையான பச்சடி.

— பார்வதி.



சிறுத்துப் போய் விட்டதாய் எண்ணினாள் நர்மதா.

''நர்மதா...! நான் கேள்விப்பட்டது நிஜமா...? இதென்ன பைத்தியக்காரத்தனம் நீ என்னமோ தினமும் அவ வீட்டுக்குப் போறயாமே. காதுல விழுந்தது. எனக்குக் கொஞ்சம் கூட பிடிக்கலை நீ செய்யறது...''

''எனக்குப் பிடிச்சிருக்கு அண்ணா. அது மட்டுமில்லை. அவரோட பணத்தில பெரும் பகுதியை அரவிந்த்... அதான் அவர் குழந்தைக்குக் கொடுக்க முடிவு செஞ்சிருக் கேன்.''

''யாரை கேட்டுண்டு செய்தே. என்ன திமிர் உனக்கு...''

''முப்பது வயது மனுஷி... எதிர்காலம்னு ஒண்ணு இருக்கறதா தெரியாத மனுஷி. தன் பணத்தை செலவழிக்க யார்கிட்டே கேட் கணும்? இன்னும் கேட்டா என்னை விட அந்தப் பணத்தை அடையும் தகுதி அவளுக் குத்தான் இருக்கு. அவர் எனக்குத் தாலி மட்டும்தான் கட்டினார். நான் அவருக்கு எந்தச் சுகத்தையும் கொடுக்கவில்லை. அப்படி இருக்கும் போது அவர் பணத்தை ஆளும் உரிமையைப் பெறத் தகுதி கிடை யாது. ஆனா நீலா அவருக்கு நல்ல மன நிறைவை கொடுத்திருக்கா. அதுக்குப் பிரதி பலனா ஏச்சும் பேச்சும் மட்டும்தான் கேட் டுக்கிட்டு இருக்கா. இதென்ன நியாயம். முதன் முதலில் நானும் உங்களைப் போல நீலாவை வெறுத்தேன். ஆனா அவளுடன் பழகிய பின் அவள் எப்படிப்பட்டவனு தெரிந்த பின் என்னால அவளை வெறுக்க முடியலை.''

''அழகா இருக்கு சக்களத்திக்குப் பரிஞ்சு பேசறவ இந்த உலகத்திலேயே நீ ஒருத்தியா தான் இருக்க முடியும்...''

''அம்மா... அவளும் ஒரு பெண். உறவு களுக்கு அப்பாற்பட்ட தூய அன்பை மட்டுமே பிறருக்குக் கொடுக்கத் தெரிஞ்ச பெண். இப்போ என்னைப் போலவே தனியா ஆயிட்டா. எனக்கும் வாழ்க்கையில் ஒரு பிடிப்பு வேண்டாமா? அரவிந்த் என்னி டம் ரொம்பப் பாசமா இருக்கான். தவறு பண்ணாதவங்க தண்டிக்கப்படறது எத்தனை கொடுமைன்றது எனக்குத்தான் தெரியும். எந்தத் தவறும் செய்யாத அந்தச் சின்னக் குழந்தை சமூகத்தில் ஒதுக்கப்பட வேண்டுமா? வேண்டாம்பா. எனக்கும் வாழ்க்கையில் ஒரு நல்ல மனுஷியா வாழ ஒரு சந்தர்ப்பம் கிடைச்சு இருக்கு. அதைத் தடுக்காதீங்க. என் மனம் நீண்ட நாளுக்கு பின் கொஞ்சம் நிம்மதியை அனுபவிக்கிறது அதைத் தடுக்காதீங்க. சொல்ல மறந்து விட்டேனே. என் பெயருக்கு அவர் ஒரு சிறிய வீடு வாங்கி இருக்கிறார். கூடிய சீக்கிரம் அங்கு நாங்க போயிடலாம்னு இருக்கோம்...''

''நாங்கன்னா... யார்ரீ...''

''நான், நீலா, அரவிந்த்...''

திகைத்துப் போய் நின்றார்கள் அனைவரும்.

## அட்மிஷன் நோட்டீஸ்




# ஸ்ரீ சங்கரா வித்யாஸ்ரம், உத்திரமேரூர்

(காஞ்சி ஹைரோடு, செங்கை - அண்ணா மாவட்டம்)

&

# ஸ்ரீ சங்கரா வித்யாஸ்ரம், விழுப்புரம்

(நடராஜ் ஐ.டி.ஐ. வளாகம், சாலாமேடு)

★ இயற்கை கிராம சூழ்நிலையில் அமைந்துள்ள எளிய குருகுலப் பள்ளிகள். மொத்தத்தில் 600 பேர்கள் தங்கிப் படிக்கத் திட்டமிட்டு, நடைமுறை ஆண்டில் 300 பேர்களை மட்டும் (ஆண் / பெண்) சேர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

★ இப்பள்ளிகள் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை பிரஸிடெண்ட் டிரஸ்டியாகப் பெற்று, அவரது நேரடி மேற்பார்வையில் நடைபெறுகின்றன.

★ பாடத் திட்டங்களுடன், கம்ப்யூட்டர் சயின்ஸ், பரத நாட்டியம், யோகா, கராத்தே, குத்துச்சண்டை, இசைக் கருவிகள் இசைத்தல், சங்கீதம், புகைப்படக்கலை முதலியவைகளையும் கட்டாயப் பாடமாக போதிக்கப் படுகின்றன.

★ பாடமொழி ஆங்கிலத்தைத் தவிர பிரெஞ்சு, ஹிந்தி, சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற மொழிகளையும் போதிக்கின்றன.

★ கே.ஜி. முதல் 10-ஆம் வகுப்பு வரையில் எல்லோருக்கும் ஆண்டுக் கட்டணம் ரூ. 7,000/-க்கு மேல் வசூலிக்கப்படுவதில்லை.

★ பள்ளிகள் சிறுவர், சிறுமிகளின் உள்ளம், உடல், கலாச்சாரம், பண்புகள் வளர்ச்சிகளை நோக்கங்களாகக் கொண்டு, அவர்களை எதிர்காலத்தில் சிறந்த மாணவர்களாக உருவாக்குகிறோம்.

விவரங்கள் அடங்கிய பிராஸ்பெக்ட்ஸ் வேண்டுவோர் ரூ. 25/- மணியார்டர் மூலமோ, பாங்கு டிராப்ட் மூலமோ, மேற்கண்ட வித்யாஸ்ரமங்களின் முதல்வர்களுக்கோ, அல்லது செகரெட்டரி, ஜெய ஜெய சங்கரா எஜுகேஷனல் டிரஸ்டு, உஷா மெட்ரிகுலேஷன் பள்ளி அலுவலகம், 39 மேலண்டை இராஜ வீதி, காஞ்சீபுரம் - என்ற விலாசத்திற்கு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

டி.எம். நடராசன்,
நிர்வாக டிரஸ்டி.

காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்,
பிரஸிடெண்டு டிரஸ்டி.

- ADSTART.

# போராடும் பெண்மணிகள்

**பாலகுமாரன்**

**வா**ன் நகும் மண் எல்லாம் நகும்
மணி வயிரத் தோளன்
தான் நகும் பகைவரெல்லாம் நகுவர்
என்பதற்கு நாணான்
வேல் நகு நெடுங்கண் செவ்விதழ்
மெல்லியள் மிதிலை ஜானகி
நகுவளென்றே...

கே. முத்து கம்பராமாயணம் மனனம் செய்து கொண்டிருந்தான். நேற்று பண்டிட் இந்தப் பாடம் நடத்திய போது ஹா என்கிற வியப்பு உடம்பில் மனசில் படர்ந்து விட்டது. இத்தனை அழகா என் தமிழ் இத்தனை சிறப்பா இங்கே இவ்வளவு அழகிய காவியமா.

''ஏதாவது சந்தேகம் இருந்தால் கேளுங்கம்மா'' தமிழ் பண்டிட் புடவைத் தலைப்பால் முகம் துடைத்தபடி வகுப்பை நோக்கிக் கேட்டார். யாரும் கேட்கவில்லை. இந்த வகுப்பில் எப்போதுமே யாருமே எந்த சந்தேகமுமே டீச்சரைக் கேட்பதில்லை. பள்ளியிறுதி படிக்கிற அந்தப் பெண்களுக்குக் கேள்விகள் இருந்தன. லவ் பண்றது தப்பா? சரியா? முறையா கட்டிக்கிட்டா 'குழந்தை மக்கா புறக்கும்னு' இங்கிலீஷ் டீச்சர் சொன்னாங்களே... அது உண்மையா?

புது சிவாஜி படத்துல ஒரு பாட்டு வருதே அதுல உன் மீனிங் என்னா?

கே. முத்து இந்தப் பட்டிமன்றங்களில் கலந்து கொள்வதில்லை. இது தேவையில்லை என்பது அவள் தீர்மானம். நல்லா படிச்சு நல்ல உத்யோகம் போய் அப்பனை ஆத்தாளை காப்பாத்தி கரை சேர்க்கணும்.

''யாருக்கும் சந்தேகம் இல்லையா?''

கே. முத்து எழுந்தாள்.

''முத்து, என்ன சந்தேகம்?''

''கம்பராமாயணம் மொத்தமும் படிக்கணும் டீச்சர். எங்கன கிடைக்கும்? என்னா விலை? அப்படி வாங்கினா நானா படிச்சு புரிஞ்சுக்க முடியுமா?''

தமிழ் பண்டிட் நாற்பத்தைந்து வயது பெண்மணி. மூன்று பெற்ற குடும்பத் தலைவி. வியப்பில் அயர்ந்து போனாள். 'மறுபடி கேள்... சைலன்ஸ்' வகுப்பின் சிறிய சிரிப்பலை அமைதியாயிற்று. கே. முத்து மறுபடி அதே கேள்விகளைக் கேட்டாள்.

''இங்கே வா முத்து.''

''போ போய் லொட்டுன்னு தலைல வாங்கிக்க. அடுத்த பெஞ்ச் வாய் பொத்தி சிரித்துப் பேசியது.

கே. முத்து பயத்துடன் தமிழ் பண்டிட்டை அணுகினாள். தமிழ் பண்டிட் அவள் தலையை இரண்டு கைகளாலும் பிடித்தார். கே. முத்து பயந்தாள். வகுப்பு நிமிர்ந்தது.

''அற்புதமான கேள்வி. இங்கே வா. கிட்ட வா.''

கே. முத்துவின் கருப்பு நெற்றியில் தமிழ் பண்டிட் முத்தமிட்டார். நல்லா இரு.

அந்த முத்தம் ஆசி உடம்பு முழுவதும் படர்ந்தது. பொடிக்க வைத்தது.

''மூணு வருஷமா இதே சிலபஸ். மூணு செக்ஷன் மொத்தம் ஒன்பது செக்ஷன். பாடம் நடத்தியிருக்கேன். முத்து உனக்கு மட்டும்தான் இப்படி கேட்கத் தெரிஞ்சுது. நல்லா இரு.

வகுப்பு வியந்தது. லேசாய் பொறாமை பட்டது. கம்பராமாயணம் நீயா படிக்கறது கடினம். ஒரு தடவை யார்கிட்டயாவது பாடம் கேட்டா நல்லது. உனக்கு; படிக்கணுமா. பள்ளிக் கூட லைப்ரரில இருக்கு. எடுத்துத் தரேன் படி. தினம் பத்து பாட்டு என்கிட்ட வந்து சந்தேகம் கேள் சொல்றேன்.

இன்னிக்கு இந்த பாடம் பத்தி உங்க அபிப்ராயம் என்ன? ஒரு கட்டுரையா ரெண்டு மூணு பக்கத்துக்கு எழுதிக்கிட்டு வாங்க அடுத்த வாரம்.''

''ஹோம் வொர்க்கா டீச்சர்.''

''ஹோம்வொர்க்இல்லை உனக்கு தமிழறிவு இருக்கான்னு நீயே தெரிஞ்சுக்க.''

இல்லை. நூற்றுக்கு தொண்ணூறு பேரிடம் இல்லை. கே. முத்துவிடம் அறிவு இருந்தது. ஆர்வம் இருந்தது.

புரிந்து கொள்ளும் அறிவு. புரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம். இதைத் தவிர நிர்ப்பந்தம் ஒன்றுமிருந்தது.

இன்றைய வறுமையிலிருந்து கீழ் மட்ட வாழ்விலிருந்து விடுபட்டே ஆக வேண்டும் என்கிற நிர்ப்பந்தம், நிர்ப்பந்தம் பிறரால்தான் ஏற்பட வேண்டும் என்பதில்லை. விவேகம் உள்ளோர் தமக்குத் தாமே நிர்ப்பந்தங்கள் விதித்துக் கொள்வார்கள். வெற்றி எல்லைகளை வகுத்துக் கொள்வார்கள்.

கே. முத்துவின் அப்பா விறகு வெட்டி. அம்மா அதே கடையில் சுமைக்கூலி. அவள் வீடு விறகு தொட்டி. பத்து வயதில் இது விஷயமாய் தெரியவில்லை. பள்ளிக்கு போய் பெரிய வகுப்பு வந்த போது மற்றவர் வசிக்கும் வீடு பார்க்கிற போது, பள்ளிப் பிள்ளைகள் விறகு வாங்க தொட்டிக்கு வருகிறது. முத்து இங்கனையா இருக்கே என்று கேட்கிற போது வகுப்பில் விறகு தொட்டி என்ற அவள் கேலி செய்கிற போது வெட்கமும் வேதனையும் எழுந்தன.

ஆனால் அவள் நன்றாக படிக்கிற மாணவி என்பதில் இந்த கேலிகள் குறைவாய் இருக்கும்.

."நா விறகு தொட்டிதான். உனக்கு கணக்கு மார்க் என்ன முப்பத்தியெட்டா? எனக்கு தொண்ணூத்தி ரெண்டு. முத்துவுக்கு கேட்கத் தெரியும். கேட்டிருக்கிறாள். கேட்டதும் தவறாய் போயிருக்கிறது.

ஆங்கில வகுப்பில் முப்பத்தியெட்டு எகிறி அடிக்கும்.

ஐ வாண்டர்ட் லோன்லி ஆஸ் அ க்ளெவுட். யார் இதை எழுதினது... முத்து...?"

"வோர்ட்ஸ்வொர்த்து."

வகுப்பு சிரித்தது.

"வர்ட்ஸ் வொர்த். சரி முத்து தமிழ் மாதிரி இங்கிலீஷ் பேசாதே."

வகுப்பு வாய் விட்டு சிரித்தது.





பிரியமான ரஸ்னா
மகிழ்ச்சியான
தினங்களிலே



பிரியமான ரஸ்னா
அம்மாவின்
"கிட்டி" பார்ட்டியிலே.






பிரியமான ரஸ்னா
என் அக்காவின்
கல்யாணத்துலே

# ரஸ்னாவைப் பருகுவதற்கு எவ்வளவோ சந்தர்ப்பங்கள் உள்ளன. ஆனால் எல்லாவற்றையும் எழுதுவதற்கு இந்த பக்கம் போதாது.



பிரியமான ரஸ்னா
என் பொறந்த
நாளிலே



ஐ லவ் யூ ரஸ்னா

Mudra:A.EA/R.5487 Tam

டபிள்யூ ஓ என்றால் ஓதானே வா எப்படி சொல்வது? சொல்ல வேண்டுமாம். அது தான் பிரச்னை. புரிகிறது. எழுத முடிகிறது. பேச முடியவில்லை. சரியாய் உச்சரிக்கத் தெரியவில்லை.

மனனம் செய்து பதில் எழுதி விட முடியும். ஐம்பது அறுபது மார்க் வரும். பேசினால் சிரிப்பாகி விடுகிறது. ஆங்கிலம் தமிழ் மாதிரி இருக்கிறது.

பேசிப் பேசிப் பழக வேண்டுமாம். யாரோடு பேச அப்பாவோட, அம்மாவோடா கடை முதலாளி நாடாரோடா. அவளுக்குப் பிடித்த ஆள் பண்டிட்டோடா. யாரும் ஆங்கில டீச்சர் மாதிரி ஆங்கிலம் பேசவில்லை. ஆங்கில டீச்சர் பேசுகிறாள். சொல்லித் தருவாளா பயமாய் இருக்கிறது.

அப்போதெல்லாம் இங்கிலீஷ் கோச்சிங் பள்ளி இல்லை. தமிழுக்கும் அவ்வளவு மதிப்பில்லை. சில பிள்ளைகள் ஆங்கிலம் சரளமாய்ப் பேசுகின்றன. ஐயர் பிள்ளைகள், ஆங்கிலோ இந்தியப் பிள்ளைகள், பிள்ளைமார் வீட்டுப் பிள்ளைகள் பேசுகின்றன.

''இங்கனயே இப்படி முழிக்கிறியே காலேஜ் போய் என்ன பண்ணப் போறே?''

''ஏன் டீச்சர்?''

''அங்கன எல்லாம் இங்கிலீஷ்தான். தமிழ் விருப்பப் பாடம்.''

தமிழ் மட்டும் படிச்சுட்டு மத்தது சாய்ஸ்ல வுட்டுறுவா டீச்சர்?

வகுப்பு தொண்டை கிழிய சிரித்தது.

பள்ளியிறுதி வகுப்பு தேர்வு எழுதி விட்டு தமிழ் பண்டிட்டிடம் போய் தன் நிலைமை சொல்லி அழுதாள். டீச்சர் ட்ரெயினிங் போய்ட்டமா? உங்க மாதிரி வித்வான் கோர்ஸ் படிக்கட்டுமா?

அடிப் போடி. இப்ப நிலைமை தெரியாத பேசற. உனக்கு கவர்மெண்ட்ல நிறைய சலுகை. நீ டாக்டருக்கு படி.

என்ன...

ஏன் ஏன் முடியாது. அரசு மாறப் போறது. வேற அரசு வேற கொள்கை வரப் போறது. உனக்கு அது உதவி. பி.யு.ஸி.ல பர்ஸ்ட் க்ளாஸ் வாங்கு. நான் உன்னை டாக்டருக்கு சேர்க்கறேன்.

''துட்டு வேணாமா?''

''கவர்ன்மெண்ட்ல தரும். ஸ்டைபெண்ட் தரும்.''

''பி.யூ.ஸி.யே கஷ்டம் பண்டிட்.''

''அடி போடி. நீ ஊதித் தள்ளிடுவே.. உன் கெட்டிக்காரத்தனம் உனக்குப் புரியலை. இரு வெள்ளிக் கிழமையா வந்துருக்கே... சிற்றாடையும் எவர்சில்வர் குங்குமச் சிமிழும் வைத்துக் கொடுத்தாள்.

அழுகை வந்தது.

'பண்டிட் நீங்க பிராமின். நான் விறகு வெட்டி ஹரிஜன் இருந்தாலும்

அடி போடி... ஜாதி ரெண்டொழிய வேறில்லை. எந்தக் காரணம் கொண்டும் படிப்பை நிறுத்தாதே.

நாடாரும் அதையே சொன்னார். அவருக்கு நான்கு மகன்கள். பெண்ணில்லை. அவர் கண்ணெதிரே வளர்ந்த குழந்தை முத்து.

''டாக்டருக்கு படி முத்து. காது குழா கோட்டு அது இதுவெல்லாம் நா வாங்கித் தாரேன். நாளைக்கு நமக்குன்னு எதுனா வந்துச்சுன்னா நம்ம முத்து வைத்தியம் செய்யுமில்லா.''

முத்து வைத்தியக் கனவுகளுடன் பியூசி படித்தாள். முதல் வகுப்பில் தேறினாள்.

மறுபடி பண்டிட் முதல் நாடார் வரை வற்புறுத்த மருத்துவக் கல்லூரிக்கு விண்ணப்பித்தாள். தமிழ்நாடு ஹிந்தி எதிர்ப்பை வெறியாய் காட்டி வடவரை நடுங்க வைத்தது. தமிழருக்கே தமிழ் மீது காதல் கிளர்ந்தது. கவிதைகள் மரியாதையாக நடத்தப்பட்டன. உயர்வு என்று கூறப்பட்டன.

எண்பத்தியெட்டு சதவிகிதம் வாங்கியிருந்த கே. முத்துவை கூப்பிட்டார்கள். பள்ளியிறுதி தமிழில் தொண்ணூறு மார்க்கா என்று வியந்தார்கள். குறள் கேட்டார்கள். பிடித்த கவிதை கேட்டார்கள். ஏன் மருத்துவக் கல்லூரி என்று கேட்டார்கள்.

''ஏழைகளுக்கு உதவி செய்ய.''

''அதுதான் ஏன்?''

''நான் ஏழை அதனால்.''

''உன் தகப்பனாருக்கு என்ன வேலை?''

ஒருகணம் தயங்கினாள்.

''விறகு வெட்டி.'' என்றாள்.

தேர்வுக் குழு வகுப்பு மாதிரி குசுகுசு வென்று பேசியது.

'நெக்ஸ்ட்'. அவளை திருப்பியனுப்பியது. மூன்றாம் நாள் முதல் லிஸ்ட்டில் அவள் பெயரும் இருந்தது. கே. முத்து. டாட்டர் ஆப் கருப்பசாமி.

எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு.

கே. முத்து சந்தோஷப்பட்டாள். மயங்கினாள். கனவா நனவா என்று வியந்தாள். கொஞ்சம் பயந்தாள்.

தமிழ் பண்டிட் விஷயம் கேட்டு கட்டிக் கொண்டாள். நாடார் எழுந்து முருகா என்று தலைக்கு மேல் கை கூப்பினார்.

**அரிசி, பருப்பில் வண்டு வந்து விட்டால், வெயிலில் போட்டால் வெப்பத்தில் சுருண்டு விடும் என்றாலும் அரிசி பருப்பை விட்டு சுலபத்தில் அகற்ற முடியாது. சரி! வேறு என்ன வழி?**

**பாதி வெயிலும், பாதி நிழலும் இருப்பது போல அரிசியைப் பரப்ப வேண்டும். வெயில் பட்டு, வண்டுகள் நிழல் பகுதிக்கு வந்து, அங்குள்ள சுவர் வழியாக, சாரை சாரையாக ஏறி விடும். அப்படியே துடப்பத்தால் முறத்தில் தள்ளி வெளியே கொட்டி விடலாம்.**

**— அமைதிக் கொடி.**



## கண் பாதுகாப்புக்காக கூட்டு வழிபாடு

**யோக** நிலையிலிருந்து ஓதப்பட்ட திருமுறைகளான தேவாரமும் திருவாசகமும் வேதங்களுக்கு நிகரானவை. திரும்பத் திரும்ப இந்த அருட்பாடல்களைப் பாடும் போது அவை துன்பங்களை நீக்கி மனத்திற்கு வலிமையையும் வாழ்க்கையில் அமைதியையும், மகிழ்ச்சியையும் தரவல்லவை.

இந்த உண்மையின் அடிப்படையில் 'நந்தலாலா சேவா சமிதி' என்ற சமூக இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் சுந்தரர் அருளிய தேவாரப் பண்கள் ஐந்தினைத் தேர்ந்தெடுத்து உலகிலுள்ள அனைவரும் கண் நோய்கள் இன்றி தெளிவான பார்வையோடு இருக்க வேண்டுமென்று மைலாப்பூரில் அமைந்துள்ள அருள்மிகு வெள்ளீஸ்வரர் கோயிலில் ஜபம் செய்தனர்.

இழந்த தன் பார்வையை நவக்கிரகத் தேவர்களில் ஒருவரான சுக்கிரன், பிரார்த்தனையின் மூலம் திரும்பப் பெற்ற இடம் தான் இன்று மைலாப்பூரில் அருள்மிகு வெள்ளீஸ்வரர் ஆலயமாகும்.

இந்தத் திருக்கோயிலில் ஜனவரி 21லிருந்து பிப்ரவரி மாதம் 23 வரை ஒவ்வொரு நாளும் மாலை 6 மணியிலிருந்து 7 மணி வரை உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஜபம் செய்தனர்.

'அன்பு இல்லம்' குழந்தைகள் வந்து தேவாரப் பண்களைப் பாடியது; ஓவியர்கள் கலந்து கொண்டு வழிபாட்டினைச் சிறப்பித்தது; கண் மருத்துவர்கள் பலர் வந்து ஜபம் செய்தது — இவையெல்லாம் தனக்காக மட்டுமின்றி மற்றவர்க்காகச் செய்யப்படும் கூட்டுப் பிரார்த்தனையில் மக்கள் கொண்டிருக்கும் ஆழ்ந்த நம்பிக்கையை வெளிப்படுத்தியது.

"இறைவனை நம்பி, சில பண்களை ஒருமித்த சிந்தனையோடு, குறிப்பிட்ட நேரத்தில் பலரும் கூடிச் சொல்லும் போது ஏற்படும் ஆன்மிக அனுபவத்தை விவரிக்க முடியாது" என்று கூறிய நந்தலாலா சேவா சமிதியின் அமைப்பாளர் மதிஒளி சரஸ்வதி அவர்கள்தான் இக் கூட்டுப் பிரார்த்தனைக்கு வித்திட்டவர்.

ஒரு மாத காலம் நடைபெற்ற இக் கூட்டுப் பிரார்த்தனை 24.2.91 அன்று நடந்த சூரிய வேள்வியுடன் நிறைவுற்றது.

---

அப்பா இது நல்லதா கெடுதலா என்று புரியாது நின்றார். அம்மா எதுவும் பேசாது கீரிக் கூடையை தலையில் வைத்து கடைக்குப் போனாள். பள்ளிக்கூடம் முழுவதும் பேச்சாயிற்று. எனக்கு அப்பவே தெரியும் அவ கெட்டிக்காரி என்று பேசியது.

கே. முத்து மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தான். முதல் நாள் நாடார் முதலாளி வாங்கிக் கொடுத்த வெள்ளையில் பூப் போட்ட புடைவையும் பண்டிட் வாங்கித் தந்திருந்த வட்ட டிபன் பாக்ஸில் புளியோதரையும் அடைத்து ரன் அண்ட் மார்ட்டின் கிராமர் புத்தகமும், நூற்றி இருபது பக்க நோட்டும் எடுத்துப் போனாள்.

வராந்தாவில் சிவந்த இரண்டு பெண்களைப் பத்துப் பேர் அழ அடித்துக் கொண்டிருந்தார்கள். ராகிங் என்று பெயராம். கன்னா பின்னாவென்று கேலியாம். ஒரு மாதம் வரை இருக்குமாம்.

அவள் பயந்து கொண்டே கடக்க யாரும் மடக்கவேயில்லை.

"யாருடா அது?"

"யாரோ நர்ஸ் போல வழி விடு."

அப்பாடா என்று நிம்மதியாகவும் இருந்தது. வேதனையாகவும் இருந்தது.

மறு வாரம் விவரம் புரிந்து மடக்கி விட்டார்கள். நோட்டுப் பிடுங்கினார்கள். சமயபுரம் மாரியம்மன் துணை என்பதை உரக்கப் படித்தார்கள்.

"எதற்குத் துணை" என்று கேட்டார்கள்.

"படிப்புக்குத் துணை" என்றாள்.

"அப்ப வாரண்டா முழுக்க சமயபுரம் மாரியம்மன் துணை என்று எழுது."

பேசாது நின்றாள்.

"எழுதலை... கிளாஸுக்குப் போக முடியாது."

வாசற் கடைக்குப் போய் இருபது சாக்பீஸ் வாங்கினாள். சமயபுரம் மாரியம்மன் துணை என்று எழுத ஆரம்பித்தாள். இதற்கு மேல் என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது தாயே என்று வேண்டினாள். வேண்டுதல் பலித்தது வேறு விதமாய்.

(தொடரும்)

**வீட்டிலுள்ள பெண்களுக்கு ஏற்ற தொழில்கள்**

குங்குமம் செய்வதிலிருந்து அச்சுக் களைத் தயாரித்தல் வரை.

விலை ரூ. 10.00

**கீழை நாட்டுப் பெண்களின் உடைகள்**

விலை ரூ. 11.00

**பழத் தோட்டம் அமைப்பது எப்படி?**

**அரசு தரும் மானியங்களையும் உதவிகளை யும் சலுகைகளையும் பெறுவது எப்படி?**

விலை ரூ. 8.50

(நான்கும் தொகுப்பு: மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு. பதிப்பு: மணிமேக லைப் பிரசுரம், த. பெ. எண் 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர்., சென்னை — 600 017)

**மைதிலி**

எழுத்தாளர் தேவனின் புகழ்பெற்ற நாவல்

விலை ரூ. 16.00

(யூனியன் பப்ளிஷிங் ஹவுஸ், 51, ஜோசி யர் தெரு, நுங்கம்பாக்கம், சென்னை — 34)

**கருணை இல்லம்**

குழந்தைகளுக்கான நாவல். ஆசிரியர். மு. சிவம்.

விலை ரூ. 15.00

(அருணா நூலகம், 18, பண்ணையார் தெரு, இராசபாளையம் — 626 117)

**வடிவழகி திரு ஆயிரம் போற்றி**

லலிதா சகஸ்ரநாமத்தின் தமிழ் கவியாக் கம் புலவர். கப. துளசி.

விலை ரூ. 7.50

**சினிமாவில் வெற்றி பெறுவது எப்படி?**

கதை முதல் விநியோகம் வரை. ஆசிரியர் சுப்ர ஜா ஸ்ரீதரன்.

விலை ரூ. 32.00

**முதல் பிரசவம்**

இளம் பெண்கள் தெரிந்து கொள்ள வேண்டியவை. ஆசிரியர் டாக்டர். எஸ். ஏ. சஞ்சீவி.

விலை ரூ. 7.00

**தேவி தோத்திர மாலை**

புவனேஸ்வரி தோத்திரம், துளசி தோத் திரம் போன்றவை. தொகுப்பு: கப. துளசி.

விலை ரூ. 10.00

**பகவத் கீதை**

கீதையைத் தமிழில் கவிதையாக மொழி பெயர்த்து விளக்கவுரை. கவியாக்கம்: கப. துளசி. உரை: வளர்மதி.

விலை ரூ. 35.00



(ஐந்தும் — ஞானச்சேரி, 37, லஸ் சர்ச் ரோடு, மயிலாப்பூர், சென்னை — 4.)

**ஒரு கவிஞன் முனிவனாகிறான்**

கவிதை போன்ற நாவல். ஆசிரியர்: ஆனைவாரி ஆனந்தன்.

விலை ரூ. 20.00

(கவிக்குயில் பதிப்பகம், 59, சேஷாசல முதலித் தெரு, சைதாப்பேட்டை, சென்னை— 15)

**பூங்காற்றின் புழுக்கம்**

இராம. ராகவேந்திரனின் கவிதைத் தொகுப்பு

விலை ரூ. 10.00

(இளவழகி பதிப்பகம், 295 மாரியம்மன் கோயில் தெரு, நியூடவுன் வாணியம்பாடி, வ. ஆ. மாவட்டம்)

**ஹாங்காங், சீனா, பாங்காக், பயணக் கட்டுரை**

ஆசிரியர்: சிவசங்கரி

விலை ரூ. 12.00

**வாழ்க்கையில் உயர எண்ணும் எழுத்தும்**

ஆசிரியர்: பி. சி. கணேசன்

விலை ரூ. 9.00

**சி. ஐ. டி. சிங்காரம்**

வாண்டுமாமா எழுதிய சிறுவர்களுக்கான துப்பறியும் கதைகள்

விலை ரூ. 18.00

**துளசி**

லா. ச. ராமாமிர்தம் எழுதிய சிறுகதைத் தொகுப்பு.

விலை ரூ. 22.00

(நான்கும் — வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை — 600 017)

---

## டென்னிஸ் வித்தகி நிருபமா!

பிப்ரவரி பதினேழாம் தேதி நடுமத்தியான வெயில் மண்டையைப் பிளக்கும்படி இருந்தது. திருவல்லிக்கேணி எம். ஸி. ஸி. டென்னிஸ் மைதானத்தில் இரு பெண்கள் டென்னிஸ் ஆடிக்கொண்டிருந்தார்கள்! பெண்களுக்கான இறுதிப் பந்தயத்தில் கோவையைச் சேர்ந்த கே. வி. நிருபமாவும் பெங்களூரைச் சேர்ந்த ஆர்த்தியும் வெற்றிபெறப் போராடிக் கொண்டிருந்தனர்! இரண்டு பேருமே சளைக்காது ஆடவே ஒவ்வொரு பாயிண்டுக்கும் பகீரதப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தனர்!

ஆட்டத்தை நிர்வகித்த நடுவர் ஆர்த்தி அடித்த பந்தை 'அவுட்' என்று சொல்லிவிடவே அவருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து, "சரியாக ரைட்டில் விழுந்த பந்தை 'அவுட்' என்று சதாய்க்கிறார்களே!" என்று புலம்பித் தீர்த்தார்! அடுத்த கணம் நடுவர் குழுவின் தலைவர் நரசிம்மன் வந்த அந்த இக்கட்டான தருணத்தைச் சமாளித்து, லைன் அம்பயர்களை அமரச் செய்து, மறுபடியும் அந்தப் பாயிண்டுக்கு 'ரீப்ளே' செய்யும்படி கோரினார். ஆர்த்தி முணுமுணுத்துக் கொண்டே ஆட்டத்தைத் தொடர்ந்தார்! நிருபமா பெருந்தன்மையுடன் அந்தப் பாயிண்டைத் துறக்கச் சம்மதித்ததோடு மறுபடியும் ஆட வந்தது அனைவரது கவனத்தையும் கவர்ந்தது!



கே. வி. நிருபமா கோவையில் ஒன்பதாம் வகுப்புப் பயிலும் மாணவி. இவரது 'கஸின்' டென்னிஸ் ஆட்டக்காரரர் கே. ஜி. ரமேஷ் என்பது ஒரு பிளஸ் பாயிண்ட்! தந்தை வழக்கறிஞர் திரு. வைத்தியநாதன் முன்னாள் ரஞ்சிக்கோப்பை ஆட்டக்காரர். அவர் தம் பெண் நிருபமாவுக்கும் டென்னிஸ் பிராக்டீஸுக்கு ஊக்கம் கொடுத்ததால் சப் ஜூனியர் சாம்பியன், டென்னிஸில் பெற்ற நிருபமா இன்று முதல் தடவையாகப் பெண்களுக்கான சாம்பியன் விருதைச் சூடிக் கொண்டிருக்கிறார்!

— பி. எஸ். எம்.

# 'பூதக்' கண்ணாடி

①

படம், கதை: அஜ...

பழம் பொருள் கடை




கோடை விடுமுறை— ஊருக்கு வெளியேயுள்ள தன் வீட்டிலிருந்து கடை வீதிக்கு வந்தாள் அனிட்டா. பழம் பொருள் கடையைப் பார்த்ததும் அவள் கால்கள் நின்றன. பழம் பொருள்கள் அனிட்டாவுக்கு ரொம்பப் பிடிக்கும்—




அப்பப்பா... என்னென்ன பொருள்கள்!


அவள் கவனத்தைக் கவர்ந்தது... ஒரு புத்தகமும் அதன்மேல் ஒரு மூக்குக் கண்ணாடியும்—


மெதுவாக அந்த கண்ணாடியைக் கையிலெடுத்தாள். புத்தகத்தின் மேல் அந்த இரண்டு வரிகள்—
அது என்ன எழுத்து ஒன்னுமே புரியலை!
அவளுக்கு ஒரு பயங்கரம் காத்திருந்தது—


என்ன ஆச்சரியம்- அந்தக் கண்ணாடி வழியாக அந்தப் புரியாத எழுத் துக்கள் தமிழில் தெரிந்தன!-
இந்தக் கண்ணாடியை என்னிட மிருந்து பறிக்காதீர்


அவசரமாக அந்தக் கண்ணாடியை எடுத்துக் கொண்டு கடைக்கார அம்மாளிடம் வந்தாள்-
இந்த மூக்குக் கண்ணாடி என்ன விலை?
பத்து ரூபாய்!
பாவம் அவுங்களுக்கு இந்தக் கண்ணாடியின் விசேசம் தெரியலை!


விலையைக் கொடுத்து விட்டு, கண்ணாடியை எடுத்துக் கொண்டு வேகமாக வெளியே வந்தாள் அனிட்டா-
அந்தப் புத்தகத்தையும் வாங்கியிருக்கலாம்.. ஆனால் கையில் போதுமான பணம் இல்லையே...





யார் இவர்கள்? இந்த ராத்திரியில் ரோட்டைத் தோண்டுகிறார்கள்?!
அன்றிரவு கதைப் புத்தகம் படித்துக் கொண்டிருந்த அனிட்டா வெளியே பார்த்தாள். அங்கே-




அந்த ஆள் சட்டை முதுகில்-
அது என்ன எழுத்து? புரியலையே!...
ஆ... அந்தக் கண்ணாடி!




காலையில் வாங்கிய கண்ணாடியை மாட்டிக் கொண்டு பார்த்த அனிட்டா-
ஐயோ! என்ன கோரம்!




எல்லாம் வேறு விதமாகத் தெரிந்தது- முதலில் சாதாரணமாகத் தெரிந்த அந்த மனிதர்கள் இப்போது கண்ணாடி வழியாக—
அந்தச் சட்டை முதுகில் புரியாத எழுத்து இப்போது...
தொடரும்.

# உங்களது பலவிதத் தேவைகளுக்கு ஏற்ற வி-கார்ட் ஸ்டெபிலைசர்கள்

வோல்டேஜ் ஏற்றத் தாழ்வுகளிலிருந்து உங்கள் இயந்திரங்களைப் பாதுகாக்க இதோ, பலவித மாடல் வி-கார்ட் ஸ்டெபிலைசர்கள்.

கண்டிப்பான தரக் கட்டுப்பாட்டின் கீழ், எமது ஆராய்ச்சி மற்றும் மேம்பாட்டுப் பிரிவின் ஒத்துழைப்புடன் உயர்ந்த தர பாகங்களைக் கொண்டு தயாரிக்கப் பட்டவை.

**1.5 Amp எலெக்ட்ரானிக் ஹை-வோல்டேஜ் கட்-ஆஃப்**
- மிகைப்படுத்தியோ குறைத்தோ காட்டாது
- சாதாரண வோல்டேஜுடன் கூடிய இடங்களுக்குச் சிறந்தது
- டிவி, விசிஆர், ஸ்டீரியோகளுக்கு ஏற்றது
- ஹை-வோல்டேஜ், இயந்திரங்களினுள் புகுவதைத் தடுக்க விசேஷ கட்-ஆஃப் மெக்கானிசம்
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 350 nett

**150 விஏ**
- டெலிவிஷனுக்கு மட்டுமே
- குறைந்தவோல்டேஜிலும் கூட வேலை செய்யும் (90 வோல்ட்ஸ்)
- ஹை-வோல்டேஜ் கட்-ஆஃப்புடன் கூடியது
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 550 nett

**300 விஏ எக்ஸ்ட்ரா பூஸ்ட்**
- டிவி, விசிஆர், ஸ்டீரியோகளுக்கு
- குறைந்த வோல்டேஜ் உள்ள இடங்களில் உபயோகிக்க உகந்தது
- ஹை-வோல்டேஜ் கட்-ஆஃப்புடன் கூடியது
- உயர்ந்த பட்ச சில்லறை விலை, ரூ. 780 nett

**200 விஏ ஸ்டெபிலைசர் (ரோட்டரி ஸ்விட்ச்சுடன் கூடியது)**
- டிவி, விசிஆர்களுக்கு ஏற்றது
- 50 வோல்ட் வரை குறைவான வோல்டேஜிலும் கூட வேலை செய்யும்
- ஹை-வோல்டேஜ் கட்-ஆஃப்புடன் கூடியது
- உயர்ந்த பட்ச சில்லறை விலை. ரூ. 895 nett

**2.2 Amp எலெக்ட்ரானிக் கட்-ஆஃப் சிஸ்டம்**
- மிகைப்படுத்தியோ குறைத்தோ காட்டாது
- சாதாரண வோல்டேஜுடன் கூடிய இடங்களுக்குச் சிறந்தது
- பிரிட்ஜுகளுக்கு
- ஹை மற்றும் லோ வோல்டேஜ் கட்-ஆஃப்
- விசேஷமான டைம்-டிலே மெக்கானிசம்
- உயர்ந்தபட்ச சில்லறை விலை ரூ. 355 nett

**300 விஏ**
- டிவி, விசிஆர், ஸ்டீரியோகளுக்கு
- 90 வோல்ட்களிலும் கூட இயங்கும்
- ஹை-வோல்டேஜ் கட்-ஆஃப்புடன் கூடியது
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 650 nett

**1 கேவிஏ**
- கம்ப்யூட்டர், வாட்டர் கூலர்களுக்கு
- ஹை அண்ட் லோ வோல்டேஜ் கட்-ஆஃப்
- டைம்-டிலே மெக்கானிசம்
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 1035 nett







**500 விஏ**
- பிரிட்ஜுகளுக்கு உகந்தது
- கம்ப்ரசருக்கும் பாதுகாப்பளிக்க டைம்-டிலே வசதி
- ஹை மற்றும் லோ வோல்டேஜ் கட்-ஆஃப் மெக்கானிசம்
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 765 nett

**டைம்-டிலே அமைப்புடன் கூடிய 2.2 Amp எலெக்ட்ரானிக் கட்-ஆஃப் சிஸ்டம்**
- மிகைப்படுத்தியோ குறைத்தோ காட்டாது
- சாதாரண வோல்டேஜுடன் கூடிய இடங்களுக்குச் சிறந்தது
- 1 டன், 1.5 டன் மற்றும் 2 டன் ஏசிக்கு ஏற்றது
- உயர்ந்தபட்ச சில்லறை விலை ரூ. 675 nett

**500 விஏ ஒயிடு ரேஞ்சு**
- பிரிட்ஜுகளுக்கு
- மிகக் குறைந்த வோல்டேஜிலும் கூட வேலை செய்யும்
- ஹை மற்றும் லோ வோல்டேஜ் கட்-ஆஃப்
- டைம்-டிலே மெக்கானிசம்
- உயர்ந்த பட்ச சில்லறை விலை: ரூ. 955 nett

**3 கேவிஏ, 4 கேவிஏ, 4 கேவிஏ ஒயிடு ரேஞ்ச் & 5 கேவிஏ**
- 1 டன், 1.5 டன் மற்றும் 2 டன் ஏசிகளுக்கு என சிறப்பாகத் தயாரிக்கப்பட்டது
- ஹை மற்றும் லோ வோல்டேஜ் கட்-ஆஃப்
- டைம்-டிலே மெக்கானிசம்
- உயர்ந்த பட்ச சில்லறை விலை முறையே ரூ. 1880 nett ரூ. 2095 nett. ரூ. 3665 nett ,& ரூ. 2310 nett



Over 18 lakh Satisfied V-GUARD customers all over India




India's largest selling stabilizer
Available with all leading home appliances dealers

MediaMate 5001

பெண்மணிகள் தெரிந்து கொள்ள.....

# சீதா கல்யாணம்

"சீதா கல்யாண வைபோகமே" என்று ஒவ்வொரு வீட்டின் கல்யாணத்திலும் பாடுவது வழக்கம். சீதாதேவி சாக்ஷாத் மஹாலக்ஷ்மியினுடைய ஸ்வரூபம். சீதை நம்மைப் போல் கர்ப்பத்திலிருந்து பிறக்கவில்லை. ஸ்ரீதேவி, பூதேவி என்று மஹாவிஷ்ணுவின் இரு சக்திகள். மஹாவிஷ்ணுவின் இருதயத்திலேயே ஸ்ரீதேவி எப்போதும் குடிகொண்டிருப்பதாக புராணங்கள் கூறும். சமுத்திரத்திலிருந்து கடையும் போது ஸ்ரீதேவி வெளி வந்ததாகக்கூறப்படுவாள். பூமி தேவியினிடத்தில் தான் வராஹ அவதாரத்தில் நரகாசுரன் பிறந்தான்.

ஸ்ரீதேவிக்கும், பூமாதேவிக்கும் ஒரு விஷயத்தில் மிகவும் பொருத்தம். ஸ்ரீதேவி சமுத்திரத்தில் தோன்றினதாகச் சொல்லப்படுகிறது. பூமாதேவி பூமிக்கு அதிர்ஷ்டான தேவதையாக பூமியிலிருந்தே வந்ததாகச் சொல்வார்கள். சமுத்திர ஜலம் பூமியின் மேலும், கீழும் இருக்கின்றது. ஆகவே சமுத்திரத்திலிருந்து உண்டானவள் என்றால் பூமியிலிருந்து உண்டானவள் என்று கொள்ள வேண்டும். அதற்கேற்றாற்போல் சீதா தேவி பூமியிலிருந்துதான் வந்தாள். பிறகு கடைசியில் பூமியைப் பிளந்து கொண்டு அதில் அடைக்கலம் புகுந்து கொள்கிறாள். இவ்விரண்டையும் பார்க்கும் போது சீதாதேவியும், பூமாதேவியும் ஒரே அம்சம் கொண்டவர்கள் எனக் கருதப்படுகிறது.

தசரத மஹாராஜாவிற்கு வெகு காலம் பிள்ளை இல்லாமல் யாகம் செய்த பின் பாயச வடிவில் பகவான் மஹா விஷ்ணு வந்து தசரதனுக்கு மகனாகப் பிறந்தார். ஜனக மஹாராஜா சிறந்த ஞானியாக விளங்கி புத்ரசம்பத்தில் அபேக்ஷையில்லாமல் வாழ்ந்தவருக்கு பூமியிலிருந்து தேவியின் அம்சமாக சீதாதேவி கிடைத்தாள். இப்படி தேவதைகளின் நன்மைக்காகவும், உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகவும் அயோத்தியிலும், மிதிலையிலும் அவதரித்த ராமனுக்கும், சீதைக்கும் மனித வாழ்க்கை முறைப்படி மனிதர்கள் வாழ வேண்டிய வழி முறைகளை தெரிவிப்பதற்காகவே அவதாரம் எடுத்துக் கல்யாணம் முறைப்படி நடைபெறுகிறது.

இந்து சமயத்தில் கல்யாணம் அக்னி சாக்ஷியாக நடைபெற வேண்டும். ஏழு அடிகள் சேர்ந்து நடந்து கருங்கல்லின் மேல் கால் வைக்க வேண்டும். மாலையில் சப்தரிஷி மண்டலத்தில் அருந்ததி தரிசனம். கையோடு கை பிடித்துக் கொண்டு இந்தப் பணிகளைச் செய்ய வேண்டும். இதை வைத்துத்தான் பாணிக்ரஹணம் என்று பெயர் வந்தது. (பாணி — கை; க்ரஹணம் — பிடிப்பது) இதுவரை தனி மனிதனாக பிரம்மச்சாரியாக இருந்த ஒருவன் சாப்பாட்டிலே கூட பொறுப்பில்லாமல் இருக்கக்கூடிய நிலையில் இருந்தான். பிரம்மச்சர்ய நிலையில் இருக்கும் வரை மற்றவர்கள் வீடுகளில் அவனுக்குக் கிடைத்த உணவைச் சாப்பிட வேண்டும் என்ற நியதி. அவன் ருசியையோ, இடத்தையோ, காலத்தையோ பார்த்துச் சாப்பிட வேண்டும் என்று சொல்லவில்லை. அப்படி இருந்தவனுக்கு பாணிக்ரஹணம் என்ற மங்களகரமான கல்யாணம் ஏற்பட்ட பிறகு விசேஷமாக ஒரு பொறுப்பு வருகிறது. இதை வைத்துத்தான் கல்யாணத்திற்கு விவாஹம் என்ற பெயர் ஏற்பட்டது. "விசேஷேண வாஹயதி இதி விவாஹ:" அதாவது பொறுப்பற்று இருந்த இருவரையும், கல்யாணம் பொறுப்புள்ளவர்களாக செய்விக்கிறது.

பொறுப்புடன் வாழ்க்கை நடத்தால்தான் உலக இயல்பே சரியாக நடைபெறும். பொறுப்பில்லாத வாழ்க்கை அமைதியில்லாத வாழ்க்கை. ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழும் வாழ்க்கை அமைதியுள்ள வாழ்க்கை. ஒருவருக்கொருவர் விடாப்பிடியாக தன்னுடைய பலஹீனத்தையோ, பலத்தையோ காண்பிப்பது அமைதியற்ற நிலையை உருவாக்குகிறது. ஒரு மனிதனுடைய உடல், அதன் நிழல் இரண்டும் வெவ்வேறாக பார்வைக்குத் தோன்றினாலும், உடலில்லாமல் நிழலில்லை, நிழலில்லாமல் உடலில்லை. சில சமயம் உடலைக் காட்டிலும் நிழல் கூடியும், குறைந்தும் இருக்கும். அது போல் வாழ்க்கையில் கொஞ்சம் ஏற்றத் தாழ்வு இருக்கும். மனதினால் அவைகளை ஆலோசித்து செயல்பட வேண்டும்.

"உடலுடைய நிலை ஒரே மாதிரிதான் உள்ளது. சூரியனின் ஒளியினால் ஏற்றத் தாழ்வு ஏற்படுகிறது. அது வெறும் தோற்றமே தவிர, நிஜமல்ல" என்று நாம் எப்படி புரிந்து கொள்ள வேண்டுமோ அது போல் வாழ்க்கையில் சிறிய ஏற்றத் தாழ்வுகள் வந்தாலும் அவைகள் உள்ளத்தின் மூலம்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்.



வராமல் ஏதோ சிறு சலனத்தின் மூலம் வந்தது என்று அறிந்து. அந்தச் சலனத்தை அகற்றிக் கொண்டு இரு உடல், ஒரு மனதாக வாழ்க்கை நடத்த வேண்டும். இந்தக் காலத் திலே உடல் என்ன நிறமாக இருந்தாலும் தன்னுடைய உடலை அலங்கரிப்பதில் மேட்சிங் (Matching)வைத்துக் கொண்டிருக் கிறார்கள். ஒரேவிதமான கலரில் பொட்டு முதல் செருப்பு வரை அணிந்து கொள்வதை நாம் பார்க்கிறோம். இது வெளி Matching. அது போல் இரண்டு உடலின் நிறம், உடல் அலங்காரப் பொருள்கள் எப்படி இருந் தாலும் Matching ஆக அல்லது Matching அல் லாமல் இருந்தாலும், மனதில் இருவருடைய உள்ளத்தில் ஒரே சிந்தனை, ஒரே எண்ணம், ஒரே செயல் இவைகளெல்லாம் இருந்து விட்டால் இதுதான் அமைதியுள்ள பாதை யில் நமது வாழ்க்கையை எடுத்துச் செல்ல ஒரே மேட்சிங்.

இதைத்தான் சீதாதேவி தன் வாழ்நாளில் ராமருடன் கல்யாணம் ஆனது முதல் அரண் மனையில் வாழ்க்கை நடந்தாலும், காட்டில் வாழ்க்கை நடந்தாலும் இரண்டையும் சமமாகப் பாவித்து கணவனைப் பிரியாமல் ஒரு மனதாக வாழ்க்கை நடத்த வேண்டு மென்பதை எடுத்துக் காட்டினாள். இதை வைத்துத்தான் ''சீதா கல்யாண வைபோகமே'' என்று பாடினார்கள்.

# தெருக்கூத்தில் பெண்கள்!

கேரளாவில் 'கதகளி' என்றால், கர்னாடகாவில் 'யக்ஷகானம்' என்றால் தமிழகத்தில் 'தெருக்கூத்து' என்பார்கள். ஆனால் கதகளியும், யக்ஷகானமும் சிறப்பான, உயர்ந்த நிலையில் விளங்குகின்றன. அதன் தனித்தன்மைகள், பழமையின் சிறப்புகள் பலரால் அரசாங்க உதவியுடனும், தனியார் நிறுவனங்களின் ஆதரவினாலும் இன்னும் சீர்குலையாமல் காப்பாற்றப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

நம்முடைய தெருக்கூத்து கவனிப்பாரற்றும், சினிமா, விடியோ, லைட்மியூசிக், டி.வி. இவைகளின் மோகத்தால் காண்போர் குறைந்தும் காணப்படுகிறது. இவற்றையெல்லாம் மீறி பல குழுக்கள் இன்னும் வீரியம் குன்றாமல் ராமாயணம், பாரதக் கூத்துக்களை நிகழ்த்தி வருகின்றன. அவற்றுள் செய்யாறு அருகிலுள்ள புரிசை கண்ணப்பத்தம்பிரான் தெருக்கூத்து மன்றம் முதன்மையிடம் வகிக்கிறது. 73 வயதான கண்ணப்பத்தம்பிரான் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் தலைமையேற்று நடத்திச் செல்வதும், பின்பாட்டில் ஒருவராய் இருந்து விடிய, விடிய ஒரு தவறும் ஏற்படா வண்ணம் செயல்படுவதும் பாராட்டுக்குரியது.

இக்குழுவினர், பாண்டிச்சேரி, ஸ்ரீசங்கரதாஸ் சுவாமிகள் நாடகப்பள்ளி மாணவ, மாணவிகளைக் கொண்டு 'திரௌபதி வஸ்திராபரணம்' (பாஞ்சாலி சபதம்) என்ற தெருக் கூத்தைத் தயாரித்துள்ளனர். இதற்கு காரணகர்த்தாக்கள் நாடகப்பள்ளி இயக்குனர் டாக்டர் இந்திரா பார்த்தசாரதி விரிவுரையாளர் வி. ஆறுமுகம் ஆகிய இருவரும்தான்.

இந்தத் தெருக்கூத்தில், இதுவரை நடக்காத ஒரு சிறப்பு நடந்துள்ளது. அது நாடகத் துறை ஆய்வு மாணவிகள் எம்.எஸ். காந்தி மேரி, மு. ஜீவா, எஸ். விசாலாட்சி இம் மூவரும் பாத்திரமேற்று நடித்தது புதிய விஷயம். பெண்கள் தெருக்கூத்தில் நடிப்பது இதுவே முதல் முறை. இவர்கள் பாண்டிச்சேரி பிரெஞ்சு தூதரகம், கம்பன் கலையரங்கம் போன்ற இடங்களில் மட்டுமில்லாமல் மதுரை, புரிசை கிராமம் என எங்கு நடைபெற்றாலும் ஒத்துழைப்புக் கொடுத்து தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்பவர்கள். பின்பாட்டில்: மு. ஜீவா, ஜி. அருணா, ஜி. சரஸ்வதி (இசை ஆசிரியை, நாடகப்பள்ளி) ஆகியோரும் பங்கேற்றுள்ளார்கள்.

— சி. அண்ணாமலை.





# ராஜாளி

நான்-ஸ்டிக் குக்வேரின்
விசேஷ அம்சங்கள்



* எண்ணெய் இல்லாமலும் சமைக்கலாம்.
* விரைவாக சமைத்திடும்.
* எரிபொருள் மிச்சம்.
* சுகாதாரமானது.
* சிக்கனமானது.
* சுத்தம் செய்வது சுலபம்.
* சுலபமாக எடுத்து ஆளக் கூடியது.

தயாரிப்பாளர்கள்:

**ராஜாளி ஹோம் எக்யூப்மெண்ட்ஸ்**

50-A, அப்பர்சுவாமி கோயில் தெரு,
திருவொற்றியூர், சென்னை-19.
Ph: 543391




டீலர் விசாரணைகள்
வரவேற்கப்படுகின்றன

ஜெண்ட் பவுடர்களை போடக்கூடாது என்கிறார் என் பக்கத்து வீட்டுக்காரர். அது சரியா?

ப: சரிதான். இன்றைக்கு விற்பனைக்கு வரும் பல டிடர்ஜெண்ட் பவுடர்கள் உங்கள் மெஷினுக்கு தீங்கிழைக்கக் கூடும். மிகவும் மலிவான பொருட்களைக் கொண்டு தயாரிக்கப்படும் இந்த பவுடர்களில் முக்கியமான பொருள் எதுவும் இருப்பதில்லை. அதனால், அவை ஒழுங்காக வெளுப்பது இல்லை. துணிகளும் கெட்டுப் போய் எளிதில் பாழாகி விடுகின்றன. அது மட்டுமல்ல, உங்கள் மெஷினின் முக்கியமான உட்பகுதிகளில் தீங்கிழைக்கக்கூடிய பிசுக்குகள் தங்கி விடுவதால் அவை மிகவும் பாதிக்கப் படுகின்றன. எனவே, உங்கள் பவுடரை பற்றி முடிவெடுக்க வேண்டியது நீங்கள்தான். விலை உயர்ந்த உங்கள் மெஷினுக்கு தரமான பவுடர்களே தேவை – ஸர்ஃப் போல.

**கே: புதிதாக நான் வாங்கவிருக்கும் வாஷிங்மெஷின் விரைவில் என் வீடு வந்து விடும். அதை எந்த இடத்தில் வைப்பது நல்லது?**

ப: முதலில், நீர், மின்சக்தி, கழிவுநீர் குழாய் போன்ற மூன்று அடிப்படை வசதிகள் உள்ள இடத்திற்கருகில் உங்கள் மெஷினை வைக்கவும். சரியான எர்த்திங் மற்றும் 3 பாயிண்ட் மின் இணைப்பு ஆகியவற்றை உறுதி செய்து கொள்ளவும். அத்துடன், அந்த இடம் காய்ந்து இருப்பதும், நல்ல காற்றோட்டமாக இருப்பதும், சுத்தமான தரையுடன் இருப்பதும் மிகவும் முக்கியம். உங்கள் மெஷினில், ப்ளாஸ்டிக் சாதனங்கள் இருப்பின், அவற்றை சூடுபடும் இடத்திலிருந்து குறைந்தது ஒரு மீட்டர் தூரத்திலாவது தள்ளி வைக்கவும்.

**கே: சில நேரங்களில், என் மெஷினில் துணிகளை எல்லாம் போட்டபின், 3 அல்லது 4 துணிகள் மிஞ்சி விடுகின்றன. அவற்றைக் கையால் பிழியத் தோன்றுகிறது. ஆனால், அப்படி செய்யவும் எனக்குத் தயக்கமாக உள்ளது. அப்படி செய்வது சரியா?**

ப: இல்லை. எப்பொழுதுமே துணிகளை அளவுக்கு மீறி திணிக்கக் கூடாது. டிடர்ஜெண்ட் கரைசலில் துணிகள் சரியாக சுழல, போதிய இடம் தேவை. இல்லாவிடில், மெஷின் மெக்கானிஸத்தில் தடங்கல் ஏற்பட்டு அது பாதிக்கப் படும். துணிகளையும் சரியாக அது வெளுக்காது. மிகச் சரியான தீர்வு என்னவென்றால், மிஞ்சிய துணிகளை மீண்டும் மெஷினில் போட்டு வெளுப்பதுதான். அதற்கென நீங்கள் கஷ்டப்பட வேண்டியது கொஞ்சம்தானே!

**வெல்வீர் ரூ.101!** இந்தப் பத்தியில் நீங்கள் கேள்வி கேட்கவோ, தகவல் அறியவோ விரும்புகிறீர்களா? ஆம் எனில், உடனே எழுதி அனுப்புங்கள். அவை பிரசுரமானால் ரூ. 101/-க்கான அன்பளிப்பு செக் உங்களுக்கு கிடைக்கும். (எழுதுங்கள் இம் முகவரிக்கு: **ஸர்ஃப் வாஷிங் மெஷின் அட்வைசரி ஸர்வீஸ்,** பி.ஓ. பாக்ஸ் 758, பம்பாய்-400 021.)

மற்றும் உங்கள்




BY LEADING WASHING MACHIN
MANUFACTURERS




சலவை...ஒப்பற்ற வெள்ளைவெளேர்

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?




ஆம்... நீங்கள் உங்களது அன்றாட அலுவல்களுக்கிடையே உங்களது முன்னேற்றத்திற்காக தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா?... அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்.

○ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற உங்களது விருப்பம் நிறைவேற ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை ஒரு தடையாக இருக்கிறதா?

○ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறதா?

○ ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற ஆர்வத்தில் பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றம் ஏற்படவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா?

கவலையை விடுங்கள்.... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை இப்பொழுது அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம்... இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, மிகச் சிறந்த முறையில் தபால் மூலம் பயிற்சியளித்து வருகிறோம்.

எனவே ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால் உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சியாக இப்பொழுது ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில், "நான் விவேகானந்தா கல்வி நிலையத்தில் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, கீழ்கண்ட முகவரிக்கு இன்றே அனுப்புங்கள்.

பயிற்சி பற்றிய விபரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

நேர்முகப் பயிற்சியும் உண்டு

☎ 44 12 16

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண்: 4986, 9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-17.

NAGA



"எங்களுக்கு இனிமே கல்யாணமாகி நாங்க பிரிய நேர்ந்தாலும் இந்தக் கலையை மட்டும் விடவே போறதில்லே."

புருவத்தைச் சுருக்க வைத்த இந்த வாசகம் க்ரீன் ரூமிலிருந்து வெளிப்பட்டது. கல்யாணம் ஆகி, அப்புறம் பிரிவதா?

நாட்டிய நிகழ்ச்சியின் இடைவேளை நேரம். வெகு சிறப்பாக அமைந்த அந்த நாட்டியத்தைப் பாராட்டுவதற்காக மேடை ஓரமாக இருந்த அந்த மேக்கப் அறைக்குள் நுழைய முற்பட்டபோதுதான் மேலே குறிப்பிட்ட பேச்சு காதில் விழுந்தது.

கதவைத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்தேன். மணிமேகலையின் முகத்திலிருந்து வியர்வையை ஒற்றி எடுத்துக் கொண்டிருந்தார் அவருடைய அம்மா. அருகில், முரளிதரன் தன் ஆடைகளை எடுத்து அடுத்த நிகழ்ச்சிக்கான ஏற்பாடுகளைச் செய்ய முற்பட்டுக் கொண்டிருந்தார். அவர்களைச் சுற்றிச் சில பார்வையாளர்கள் — கண்களில் பாராட்டுப் பரவசத்துடன். அவர்களிடம் தான் மணிமேகலை முதல் பாராவைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

முரளிதரன் — மணிமேகலை ஜோடி இப்போது தமிழ் நாட்டில் மட்டுமின்றி பிற மாநிலங்களிலும் பரதநாட்டியம் ஆடி அவர்களது தகுதியை நிலை நாட்டி வருகிறார்கள்.

கலைமாமணி சாமுண்டீஸ்வரியிடம் பரதம் பயின்ற இவர்கள், அவர் வெளிநாட்டில் தங்கியிருக்கும் இக்காலத்தில் அவர் ஸ்தாபித்த நடனப் பள்ளியை அற்புதமாக நிர்வகித்து வருகிறார்கள். முரளிதரன் ஐ.சி.எஃப் நிறுவனத்தில் பணியாற்றுகிறார். மணிமேகலை எங்கும் வேலை பார்க்கவில்லை.

அது சரி, கல்யாணமாகிப் பிரிய நேரிட்டாலும்னா என்ன? கல்யாணமாகி — பிரிவதா?' என்று கேட்கிறீர்களா? விவரம் சொல்கிறேன்.

முரளிதரன் — மணிமேகலை இருவரும் உடன் பிறப்புகள். அண்ணனும் தங்கையுமான இவர்கள் ஜோடியாக மேடையில் நடனம் ஆடும் போது விவரம் தெரியாதவர்கள் அவர்களை அண்ணன் — தங்கை என்று கூறிவே மாட்டார்கள்.

இருவரும், தத்தமக்குத் திருமணம் ஆனாலும் தங்களது கணவர்/மனைவி அனுமதியுடன் நாட்டிய நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து ஜோடியாக நடத்துவது என்று தீர்மானித்திருக்கிறார்கள். திருமணமாவதால் அண்ணன் — தங்கை இருவரும் வெவ்வேறு குடும்பங்களில் வாழ நேர்ந்தாலும் என்றுமே நாட்டியத்தால் ஒன்றுபட்டுதான் இருப்பார்கள் என்று விளக்கம் கிடைத்தது.

இவர்களுடைய நாட்டிய நிகழ்ச்சிகளில் சிருங்கார இட்டம் இல்லாமல் பார்த்துக் கொள்கிறார்கள். அப்படியே இருப்பதானாலும் அது தனிநபர் நாட்டியமாகத்தான் இருக்கும். 'இருவரும் இணைந்து ஆடுவ இல்லை.

கட்டுரை: **பிரபுசங்கர்.**

# நாட்டியத்தில்...



• **40** வாட்ஸ் பல்பிற்குப் பதிலாக டியூப் லைட் உபயோகியுங்கள். டியூப்லைட் 100 வாட்ஸ் பல்ப் அளவிற்கு வெளிச்சம் தருவதோடு 60 சதவீத மின்சாரம் மிச்சப்படுத்தலாம்.

• டியூப்லைட்களில் பழைய 'சோக்'குகளைப் பயன்படுத்தாமல் எலெக்ட்ரானிக் சோக்குகள் பயன்படுத்தினால் மூன்றில் ஒரு பங்கு மின்சாரம்தான் செலவாகும்.

• பார்வையாளர் அறையில் டிம்மர் சுவிட்சுகள் அமைத்திருந்தால், அவர்களுடன் பேசும் போது விளக்குகள் பிரகாசமாக எரியவும் மற்ற நேரங்களில் டிராயிங் ரூமில் மங்கலான வெளிச்சமும் எரிய உதவுவதோடுமின்சக்தியும்குறைவாகச்செலவாகும்.

• அறைகளில் வண்ணம் பூச லைட்கலர் பயன்படுத்தினால் 40 சதவீத மின்சாரம் மிச்சமாகும். குறைந்த மின் சக்தி விளக்குகள் லைட்கலர் அறைகளுக்கு நிறைந்த வெளிச்சம் தரும்.

• பல்புகளை அடிக்கடி துடைத்து சுத்தம் செய்யும் பழக்கத்தைக் கடைப்பிடியுங்கள். தூசியும் அழுக்கும் பல்பின் 30 சதவீத வெளிச்சத்தைக் குறைகின்றன.

• ஃபேனை அடிக்கடி சுத்தம் செய்து எண்ணெய் போடுங்கள். எலெக்ட்ரானிக் ரெகுலேட்டர் பொருத்துவதால் மின்சாரம் மிச்சமாகும்.

• கெய்ஸர்களில் உள்ள வெப்பப்படுத்தும் சாதனத்தை **(Heater Element)** ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றினால் தண்ணீர் விரைவில் வெந்நீர் ஆவதோடு மின்சாரமும் மிச்சமாகும்.

• ஏசி சாதனத்தை ஆஃப் செய்தவுடன் ஏசி அறையின் ஜன்னல்களை மூடிவிட்டால் சிறிது நேரம் மின்சார செலவில்லாமல் அறை குளிர்ச்சியாக இருக்கும். ஏசி சாதன ஃபில்டரை இரு வாரங்களுக்கு ஒரு முறை சுத்தம் செய்தால் அதிக அளவு மின்சாரம் செலவாவதை மிச்சப்படுத்தலாம். ஏசி சாதனத்தை ஒரு மணி நேரம் நிறுத்தினால் 40 வாட்ஸ் டியூப் 50 மணி நேரம் எரியும் அளவிற்கு மின்சக்தி மிச்சமாகிறது என்பதை எப்பொழுதும் நினைவில் கொள்ளுங்கள்.

• அயர்ன் செய்யும் போது முதலில் குளிர்ந்த வெப்பத்தில் அயர்ன் செய்யும் துணிகளைத் தேய்த்து நேரம் செல்லச் செல்ல அதிக வெப்பம் வேண்டிய ஆடைகளை அயர்ன்செய்யும்வழக்கத்தைக்கடைப்பிடிக்க மின் செலவு குறைவாகும்.

• குடும்பத்திற்குத் தேவையான அளவு ஃப்ரிட்ஜை வாங்குங்கள். அதிக அளவு ஃப்ரிட்ஜ் அதிக மின்சாரம் செலவாகும்.

• வேண்டிய அளவிற்குக் குளிர்ந்தபின் உணவுப் பொருளை ஃப்ரிட்ஜில் வைப்பதால் மின்சாரம் மிச்சமாகும்.

• ஃப்ரிட்ஜின் லைனிங் கேஸ்கட் கெட்டுப் போனால் மாற்றி விடுங்கள்.

• ¼'' அளவில் ஐஸ் உருவாகிவிட்டால் டீஃப்ராஸ்ட் செய்து விட மின்சாரம் மிச்சமாகும்.

**— கனகா கெங்கை முத்து.**



# பரவசி

கன்னாட்ப்ளேசில் உள்ள 'ஜான்கி தாஸ்' டிபார்ட்மெண்டல் ஸ்டோரில் 'ரிடக்ஷன் சேல்' என்று காலை செய்தித்தாளில் படித்த பவானி உடனே அங்கே செல்ல முடிவு செய்தாள்.

அவள் கணவன் கணேஷ் ஆபிஸ் வேலையாக பம்பாய் சென்றிருந்தார். கார் அவளுடைய கன்னாட் ப்ளேஸ் பயணத்திற்குக் கைவசமிருந்தது.

ஜான்கிதாஸில் ஒரே பெண்கள் கூட்டம்.

பவானி இரண்டு சில்க் நைட் கவுன்களை எடுத்துக் கொண்டாள்.

கவுண்டரின் உட்புறம் நின்றிருந்த சேல்ஸ் கேர்ல் 'மேடம்! ட்ரை தெம்,' என்று கூறி ட்ரையல் ரூமைக் காட்டினாள்.



நன்றி கூறி விட்டு பவானி ட்ரையல ரூம் கதவைத் திறந்ததும் விளக்குகள் பளிச்சிட்டன. உட்புறம் முழுக்கக் கண்ணாடிகள். அவளுடைய உடலின் எல்லாப் பகுதியையும் கண்ணாடிகள் பிரதிபலித்தன.

புடைவையை அவிழ்த்து அங்கிருந்த ஹாங்கரில் தொங்க விட்டு விட்டு உள் பாவாடை, ஜாக்கெட்டுடன் நின்றாள். நைட் கவுனை அணிந்து கொள்ளுவதற்குள் தமது உடலின் பல பகுதிகளையும் நோட்டமிட்டாள்.

என்ன இது?

கல்லூரியில் 'மிஸ் கல்லூரி' பட்டம் பெற்ற போது பவானியின் உடல் 32—26—32 ஆக இருந்தது. இப்போது கிட்டத்தட்ட 42—42—42 இருக்கும் போலத் தோன்றியது.

வயிறு விரல்கள் தொடை எல்லாம் குண்டாகி இருந்தன. இதே வேகத்தில் சென்றால் அவள் ப்ரீதி கங்கூலி, டுன் டுன், பிந்து கோஷ் இவர்களுடன் போட்டியிடத் தகுதி பெற்று விடுவாள்.

ட்ரையல் ரூமின் உட்புறக் கதவில் ஒரு விளம்பரம் தெரிந்தது.

''என்ன உடம்பு ஊதி விட்டதா? பழைய உருவத்தைப் பெற வேண்டுமா? இன்றே விஜயம் செய்யுங்கள். ப்யூட்டி கிளினிக், புது தில்லி — 49.''

அவசரம் அவசரமாகப் புடைவையைக் கட்டிக் கொண்டு வெளியே வந்து நைட் கவுன்களுக்கான தொகையைச் செலுத்தி விட்டு வெளியே வந்தாள்.

அவளுடைய மாருதி சௌத் எக்ஸ்டென்ஷனை நோக்கி விரைந்தது.

காரைப் பார்க் செய்து விட்டு பியூட்டி கிளினிக்கின் கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றாள்.

ரிசப்ஷனில் ஒரு பெண். வயது முப்பது இருக்கும். என்ன ஃபிகர்? என்ன நிறம்?

பவானி மனத்திற்குள் பொறாமைப் பட்டாள்.

''குட்மார்னிங் அண்ட் வெல்கம் மேடம்!''

குரல் கூட இத்தனை இனிமையா?

''மே ஐ ஹெல்ப் யூ?''

''ஆமாம். என் உடற்கட்டைச் சரிசெய்து கொள்ள வேண்டும்...''

''அஃப்கோர்ஸ் வாங்க.''



## ம. கிருஷ்ணமூர்த்தி

ரிசப்ஷனிஸ்டின் வார்த்தைகள் தேனாக இனித்தன.

''ப்ளீஸ், நூறு ரூபாய் ரெஜிஸ்ட்ரேஷன் பீஸாகக் கொடுங்கள்.''

ஒரு நூறு ரூபாய்த் தாளை நீட்ட அது ரசீதாக மாறி பவானியின் கைக்கு வந்தது.

''ப்ளீஸ், இந்த ஃபார்மை நிரப்புங்கள்.''

ஒரு மஞ்சள் அட்டையை நீட்டினாள்.

பூர்த்தி செய்த ஃபாரத்தைப் பார்த்த அந்தப் பெண் இண்டர்காமில் யாரோடோ பேசினாள்.

''ப்ளீஸ் கோ டு ரூம் நம்பர் டென்.''

வழுக்கும் மொசாயிக் தரையில் ஜாக்கிரதையாக நடந்து பத்தாம் நம்பர் ரூமை அடைந்தாள்.

கதவை விரல்களால் தட்ட 'ப்ளீஸ் கம் இன்.' என்று பதில் வந்தது.

உள்ளே நுழைந்தாள்.

அழகாக இன்டீரியர் டெகோரேஷன் செய்யப்பட்ட சிறிய அறை. கால்கள் அழுந்தக் காஷ்மீர்க் கம்பளம்.

குட்மார்னிங், உட்காருங்கள்,'' என்றார். உள்ளே இருந்தாள் டைரக்டர் மிஸஸ் நீரஜா மாத்தூர்.

மிஸஸ் மாத்தூரின் ஃபிகர் பவானியின் பொறாமையை அதிகமாக்கியது.

டைரக்டர் தன் கண்களால் பவானியை அளந்தார்.

''எழுந்து நில்லுங்கள்''

பவானி எழுந்து நின்றாள்.

மிஸஸ் மாத்தூர் அவளைச் சுற்றி வந்தாள். ''பரவாயில்லை, சரியான நேரத்துக்கு வந்து விட்டீர்கள். சரி பண்ணிடலாம்.''

இன்னொரு பாரத்தைக் கொடுத்தாள்.

நட்சத்திரம், கோத்திரம் தவிர மற்ற எல்லா விவரங்களும் கேட்கப்பட்டிருந்தன.

''கோர்ஸ் 'டி' உங்களுக்குச் சரியாக இருக்கும். ஆறு வாரக் கோர்ஸ். மூவாயிரம் ரூபாய் ஆகும்.''

ரூபாய் மூவாயிரத்திற்குச் செக் எழுதிக் கொடுத்தாள்.

''நாளைக்கு ரசீது கிடைக்கும். எதிர் ரூமிற்குச் செல்லுங்கள்.''

பவானி எழுந்து வெளியே வந்தாள்.

எதிர்ப்புற அறை எண் 12. வசதியான குளிர்சாதனைக்குட்பட்ட அழகிய அறை.

சுழல் நாற்காலியில் ஒரு பேரிளம் பெண். வயது நாற்பதிருக்கும் அமர்ந்திருந்தாள். ஃபிகர் சுமார் 40—30—40 இருக்கும்.

பவானியின் மஞ்சள் கார்டில் ஏதோ எழுதி விட்டு, 'ப்ளீஸ் கம் இன்' என்று கூறி மற்றொரு சிறிய அறைக்குள் நுழைந்தாள்.

பவானி தொடர்ந்து உள்ளே சென்றாள்.

''ட்ரெஸ்ஸை எடுத்து விடுங்கள்.''

பவானி தயங்கினாள்.

''ம். சீக்கிரம்.''

ஒரு பெரிய பாம்பே டையிங் துண்டை நீட்டினாள். பவானி உடைகளைக் கழற்றி விட்டு துண்டை மார்போடு சேர்த்துச் சுற்றிக் கட்டிக் கொண்டு நின்றாள்.

'இதன் மேல் ஏறு.' என்று கூறி ஒரு வெயிட் மெஷினைக் காட்டினாள்.

அவள் ஏறி நின்றதும் அந்தப் பெண் பவானியின் மீதிருந்த துண்டைச் சரே லென்று உருவி விட்டாள்.

பவானியின் கல்லூரியில் மாவட்டத் தலைவர் காந்திஜியின் உருவச் சிலையைத் திறந்து வைத்த நினைவு வந்தது!

'மை காட் 65 கிலோ!'

குறித்துக் கொண்டாள்.

துண்டை எடுக்கக் குனிந்த பவானியை, 'நானும் பெண்தானே! ரிலாக்ஸ். இன்னும் மெஷர்மெண்ட் எடுக்கலை,' என்றாள்.

பவானிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது.

தோள், கழுத்து, இடுப்பு, பின்புறம், மார்பு, வயிறு எல்லாவற்றையும் இன்ச் டேப்பினால் அளந்து மஞ்சள் கார்டில் குறித்தாள்.

''முதல் ஃப்ளோர் ரெண்டாம் நம்பர் அறைக்குப் போங்கள்'' என்று கூறிக் கார்டை அவளிடம் கொடுத்தாள்.

ட்ரெஸ் செய்து கொண்டு மாடி ஏறி இரண்டாம் நம்பர் ஹாலுக்குள் நுழைந்தாள்.

அங்கே ஒரு 50—40—57 அவளை வரவேற்றது. இங்கிலீஷ் பட சமையற்காரி போல மேலே ஒரு ஏப்ரன் அணிந்திருந்தாள்.

''சீட்டைப் பார்த்துவிட்டு ட்ரஸ்ஸைக் கழற்றி விட்டுப் படு'' என்று ஒரு நீண்டு குறுகிய மேஜையைக் காட்டினாள்.

படுத்துக் கொண்டாள்.

அந்தப் பெண் பவானியின் உடலை சப்பாத்திக்கு மாவு பிசைவது போலப் பிசைந்தாள். கரங்கள் இரும்பாக இருந்தன.

அரை மணி நேரம் அவளைப் பிசைந்து புரட்டி எடுத்து விட்டு விடுதலை அளித்தாள்.

கார்டில் எதையோ குறித்து விட்டு ''ஃபாலோ மீ'' என்றாள்.

உள்ளே இன்னொரு பெரிய அறை.

ஒரு பெரிய பீங்கான் தொட்டியில் உட்காரச் சொன்னாள். பவானி பிறந்த மேனியில் உட்காரக் கழுத்து வரை ஒரு கனமான துணியால் போர்த்தி விட்டு ஒரு ஸ்விட்சைத் தட்டினாள்.

உள்ளே இருந்த வெதுவெதுப்பான நீர் சூடாகி உடலைத் தகித்தது.

ஊரில் அம்மா உருளைக் கிழங்கைத் தோலோடு இப்படித்தான் வேக விடுவாள்!

நன்றாக வெந்ததும் ஸ்விட்சை அணைத்து விடுதலை கொடுத்தாள்.

உடலெல்லாம் ஒரே வியர்வை.

ஒரு துண்டால் நன்றாக அழுத்தித் துடைத்தாள்.

''உடையணிந்து கொண்டு பேஸ்மெண்டில் உள்ள எக்ஸர்சைஸ் ஹாலுக்குப் போ.'' என்றாள்.

கீழே வந்த போது மணி பகல் பன்னிரண்டு. பவானிக்குப் பசி வயிற்றைக் கிள்ளியது.

எக்ஸர்சைஸ் ஹாலில் ஒல்லியான ஒரு இளம் பெண் — பி. டி. உஷாவைப் போன்ற தோற்றம். வெள்ளை நிறக் குட்டை ஸ்கர்ட், சர்ட் அணிந்து கொண்டு நின்று கொண்டிருந்தாள்.

கார்டைப் பார்த்தாள்.

''இங்கே வா.'' என்றாள் ஹிந்தியில்.

பூமியில் பதிக்கப்பட்டிருந்தசைக்கிளைக் காட்டி, ''இதன் மீது ஏறி உட்காரு.'' என்றாள்.

ஏறி உட்கார்ந்ததும் ''ஓட்டு.'' என்றாள்.

''இன்னும் வேகமாக....!'' என்றாள்.

கடியாரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பதினைந்து நிமிடங்கள் பவானிக்கு ஒரு யுகமாகத் தோன்றியது.

பசி மயக்கம். மூட்டுக்களில் பயங்கர வலி.

''நாளைக்கு இதே டயத்திற்கு வா. வெள்ளை ஷார்ட்ஸ் ப்ளவுஸ் கொண்டு வா.''

''சரி. இப்போ போகலாமா?''

''என்ன?'' அவளை வியப்புடன் நோக்கினாள்.

''தோ, கம் அவுட்.'' என்று அவளை வெளியே தோட்டத்துக்கு இட்டுச் சென்றாள்.

ஒரு ஐம்பது அடிச் சுற்றளவுள்ள வட்டம் ஒன்று இருந்தது.

''இதற்குள் சுற்றிச் சுற்றி ஓடு.''

---

இரண்டு ஆழாக்கு ஊற வைத்த புழுங்கல் அரிசி, ஒரு மூடி தேங்காய்த் துருவல், உப்பு, பெருங்காயம் சேர்த்துச் சற்றுக் கரகரப்புடன் நெகிழலாக அரைக்கவும். வாணலியில் அரை கரண்டி தேங்காய் எண்ணெயைக் காய வைத்து, மாவைக் கொட்டிக் கிளறவும். மாவு கெட்டிப்பட்டதும் கரண்டி கரண்டியாக இட்லித் தட்டில் எடுத்து வைத்துப் பத்து நிமிடங்கள் ஆவியில் வேக வைத்து எடுத்துச் சாப்பிட்டால் பிரமாதமாக இருக்கும்.

— உமா நாராயணசுவாமி.



பவானி ஓட ஆரம்பித்தாள்.

ஒரு நாள் யானைக் குட்டி ஒன்று சர்க்கஸ் ரிங்கிற்குள் ஓடியதைத் தான் ரசித்த காட்சி நினைவிற்கு வர பவானிக்கு அழுகையே வந்து விட்டது.

பிற்பகலில் விளைந்திருக்கிறது!

சரியாக இருபத்தி ஐந்து ரவுண்டுகள் அடித்ததும், "ஸ்டாப்," என்றாள் பி. டி. உஷா.

"பசிக்கிறதா?"

"கொலைப் பசி."

"இங்கே வா."

டைனிங் ஹால்.

பவானியின் நாவில் எச்சில் ஊறியது.

வயிற்றில் அக்கினி.

ஒரு கிழவி அவள் முன் ஒரு தட்டை வைத்தாள்.

இரண்டு இலை சாலத். ஒரு சிறிய காரெட். ஒரு தக்காளித் துண்டு. இரண்டு நீண்ட சதுர முள்ளங்கித் துண்டுகள்.

"சீக்கிரம் லஞ்ச் கொண்டு வா."

"இதுதான் லஞ்ச்!"

கிழவி உள்ளே சென்று விட்டாள்.

அவற்றை நொடியில் காலி செய்து விட்டு மிஸஸ் மாத்தூரின் அறைக்கு ஓடினாள்.

"ஹௌ டூ யூ ஃபீல்," என்று கேட்டாள்.

"ஃபைன்," என்றாள் ஹீனமாக.

"குட்! ஈவினிங் சர்க்கரை இல்லாமல் அரை கப் டீ குடி. ராத்திரி ஒரு சுக்கா ரொட்டி இரண்டு சலாத் இலை சாப்பிடு. நாளைக்குப் பத்து மணிக்கு வா."

"இன்று போய் நாளை வா," என்ற ராமாயணக் காட்சி தோன்றி மறைந்தது.

பரிதாபமாகத் தலையை ஆட்டி விட்டு வெளியே வந்தாள்.

காரை ஸ்டார்ட் செய்யக் கூட உடம்பில் சக்தி இல்லை.

ஆர். கே. புரத்தில் உள்ள ஃப்ளாட்டிற்குத் திரும்பிய போது மணி இரண்டு.

டெலிஃபோன் மணி இடைவெளி இன்றி அடித்துக் கொண்டிருந்தது.

அவர்தான் பேசினார்.

"பவானி! எங்கே போயிட்டே. இரண்டு தடவை டெலிஃபோன் பண்ணினேன்."

"கன்னாட் ப்ளேஸ் போயிருந்தேன்."

"சாயங்காலம் ஆறு மணி ஃப்ளைட்டில் வருகிறேன். வந்ததும் இன்று இரவு டின்னர் லோதி உட்லண்ட்ஸில்," என்று கூறி போனை வைத்து விட்டார்.

காலையில் சமைத்து வைத்து விட்டுச் சென்ற உருளைக் கிழங்கு கறியும், வெங்காய சாம்பாரும் அவளை அழைத்தன.

பேசாமல் படுத்தவள் நன்றாக உறங்கி விட்டாள்.

ஏகப்பட்ட கனவுகள்.

ஸ்டீம் பாத்தில் உடல் வெந்து விட்டது..

'சைக்கிளை நிறுத்தாமல் ஓட்டு,' என்று பி. டி. உஷா அதட்டுகிறாள்.

பத்து குண்டம்மாக்கள் அவள் உடலைச் சப்பாத்தி மாவு போலப் பிசைகிறார்கள்.



எல்லா வடாம்களையும் உப்பும், காரமுமாகவே செய்வதை விட்டுக் குழந்தைகளுக்கென கொஞ்சம் மாவில் சர்க்கரை கலந்து கிளறி, ஏதாவது ஒரு பழ எசன்சையும், கலரையும் சேர்த்து வடாம் பிழிந்தால் பொரித்த பின் தித்திப்பாகவும் வாசனையாகவும், கலராகவும் இருக்க, விரும்பிச் சாப்பிடுவார்கள்.

— உமா.

சர்க்கஸ் ரிங்கில் ஓடுகிறாள். கையில் சாட்டையுடன் பி. டி. உஷா துரத்துகிறாள்.

ஓடி ஓடி மயங்கி விழுந்து விடுகிறாள்.

உடம்பு இளைத்து எலும்பும் தோலுமாக ஆகி விட்டது.

'ஹாய்' என்று அலறியபடி எழுந்தாள். உடல் தெப்பமாக நனைந்திருந்தது.

"பவானி வாட் ஹாப்பண்ட். கதவைத் திறந்து போட்டு விட்டு ஏன் இப்படித் தூங்குகிறாய்? ஏதாவது சொப்பனம் கிப்பனம் கண்டாயா?"

அவர் கேட்கிறார்.

"டிரஸ் பண்ணிக் கொள். சீக்கிரம். நல்ல பசி," என்றார்.

"இல்லை. நான் வரலை."

பவானிக்கு அழுகையே வந்து விட்டது. விசித்தபடி நடந்தவற்றைக் கூறினாள்.

"இன்னும் ஆறு வாரம் போகணும்."

"வேண்டாம். நீ போக வேண்டாம்."

"மூவாயிரம் ரூபாய் செக்."

"ஸ்டாப் பேமெண்ட் பண்ணி விடலாம்," என்றவர் தொடர்ந்து.

"இதோ பாரு நம்ப கல்யாணத்தின் போது நீ ஒடிஞ்சு விழற மரப்பாச்சி மாதிரி இருந்தே. எனக்குப் பெண்கள் கொஞ்சம் பூசினாப்பிலே இருந்தாத்தான் பிடிக்கும். இப்பத்தான் நீ சதை போட்டு பஞ்சாபிப் பெண் மாதிரி அழகாக இருக்கே" என்றார்.

பவானியினால் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

"நிஜமாவா?"

"நிஜம்மாத்தான்," என்று அன்புடன் அவளைத் தோளில் தட்டியவர், "சரி சரி.. பார்ட்டிக்குக் கிளம்பு. நேரமாச்சு..." என்றார். லோதி உட்லண்ட்ஸில் இட்லி, மசாலா தோசை நினைவுக்கு வர பவானி டிரெஸ் செய்து கொள்ள ஓடினாள்!

**முதல் பரிசு:**

**பஞ்சரங்க பக்கோடா**

தேவையான பொருட்கள்:

முள்ளங்கி — 2,
காரட் — 2,
பீட்ரூட் பெரியது — 1,
உருளைக் கிழங்கு — 2,
வெங்காயம் — 200 கிராம்,
தேங்காய் — 1 மூடி,
பொட்டுக் கடலை — 200 கிராம்,
பச்சை மிளகாய் — 12,
இஞ்சி — 1 சிறிய துண்டு,
கொத்துமல்லி — சிறிய கட்டு,
கறிவேப்பிலை — 3 ஆர்க்,
ரீபைண்ட் ஆயில் — ½ லிட்டர்,
நெய் — 4 டீஸ்பூன்,
தேவையான அளவு உப்பு.




செய்முறை:

முதலில் தேங்காயைப் பூப் போல் துருவவும். முள்ளங்கி, காரட், பீட்ரூட், உருளைக்கிழங்கு ஆகியவற்றைத் தோல் சீவி நன்றாகக் கழுவி தனித்தனியாகத் துருவிக் கொள்ள வேண்டும்.

ஒரு வாணலியில் 4 டீஸ்பூன் நெய் விட்டு அடுப்பில் வைத்து நெய் காய்ந்ததும் முதலில் முள்ளங்கித் துருவலைப் போட்டு வாசனை போக வதக்கி எடுத்துக் கொள்ளவும். அதே போன்று காரட், பீட்ரூட், உருளைக்கிழங்கு ஒன்றாகப் போட்டு ஐந்து நிமிடம் வதக்கி எடுக்கவும். வதக்கிய காய்களுடன் தேங்காய்த் துருவல், ப. மிளகாய், இஞ்சி, கசகசா, பொட்டுக்கடலை ஆகியவற்றையும் சேர்த்து மிக்ஸியில் அதிகம் நீர் விடாமல் அரைத்துச் சேர்க்க வேண்டும்.

பின்பு பொடிப் பொடியாக நறுக்கி வைத்துள்ள வெங்காயம், கொத்துமல்லியை அம் மாவுடன் சேர்த்து கறிவேப்பிலையைக் கிள்ளிப் போட்டு தேவையான உப்பு சேர்த்து நன்றாகக் கலந்து பிசைந்து கொள்ள வேண்டும்.

வாணலியில் ரீபைண்ட் ஆயிலை ஊற்றி அடுப்பில் வைத்து எண்ணெய் காய்ந்ததும் பிசைந்து வைத்துள்ள மாவை சிறு சிறு உருண்டைகளாக உருட்டிப் போடவும். சிவக்க வெந்ததும் எடுத்து விடவும். கரகர வென சுவையாக இருக்கும். இதுவே பஞ்சரங்க பக்கோடா என்பது. மாலை நேர சிற்றுண்டிக்கு ஏற்றதாக இருக்கும்.


* கமலா


* உமா

— கமலா நாராயணன், பாலக்காடு.

**இரண்டாம் பரிசு:**

**மரவள்ளிக் கிழங்கு துணுக்கு**

தேவையான பொருட்கள்:

மரவள்ளிக் கிழங்கு — ¼ கிலோ,

உளுத்தம் பருப்பு — 1 ஆழாக்கு.
புழுங்கலரிசி — ½ ஆழாக்கு.
பச்சரிசி — ½ ஆழாக்கு.
மிளகு — 1 டேபிள் ஸ்பூன்.
மிளகாய் வற்றல் — 6.
ஊறவைத்த க. பருப்பு — 2 டேபிள் ஸ்பூன்.
தேங்காய் பத்தை — 3.
கறிவேப்பிலை — 2 ஆர்க்குகள்.
நெய் — 2 ஸ்பூன்.
உப்பு — தேவையான அளவு.
எண்ணெய் — பொரிப்பதற்கு.
பெருங்காயம் — சிறு துண்டு.

செய்முறை:

பு. அரிசி, ப. அரிசி, உ. பருப்பு மூன்றையும் நீரில் ஊறவைக்கவும்.

மரவள்ளிக் கிழங்கை தோல் நீக்கி குக்கரில் வேகவைக்கவும். ஊறவைத்த அரிசி, பருப்புடன், மிளகு, மி. வற்றல், உப்பு, பெருங்காயம் சேர்த்து அதிகம் அரைக்காமல் சற்று 'கரகர'வென்று



அரைத்து அத்துடன் வேகவைத்த மரவள்ளிக்கிழங்கை மசித்துப் போட்டு இரண்டு திருப்பு திருப்பி மாவை அகன்ற பாத்திரத்தில் வழிக்கவும்.

தேங்காயைப் பல்லுப் பல்லாகக் கீறவும். இதை மாவுடன் சேர்த்து, ஊறவைத்த கடலைப் பருப்பு, கறிவேப்பிலை கிள்ளிப் போட்டு நெய் சேர்த்துப் பிசையவும்.

வாணலியில் எண்ணெயை ஊற்றி அடுப்பில் வைக்கவும். நன்கு காய்ந்ததும் மாவைச் சிறிது சிறிதாகக் கிள்ளிப் போட்டு, பொன்னிறமாகப் பொரிந்ததும், கண் கூடையில் வாரி வைக்கவும்.

— உமா நாராயணசுவாமி,
சென்னை — 601 302.

**மூன்றாம் பரிசு:**

**கரகர உணவு — நட் கட்லெட்**

தேவையான பொருட்கள்:

முந்திரி — 100 கிராம்.
மைதா — 1 கப்.
வெண்ணெய் — 50 கிராம்.
பால் — ½ கப்.
வெங்காயம் (பெரியது) — 2.
பச்சை மிளகாய் — 4 to 6.
உப்பு மிளகு — சுவைக்கு ஏற்றார்போல்.
ப்ரெட் ஸ்லைஸ் — ½ பாக்கெட் (நீரில் ஊறவைக்கவும்)
காய்ந்த ப்ரெட் தூள் அல்லது ரஸ்க் தூள் (மேலே தூவுவதற்கு)



**நிறைய இட்லி தேவையா? உளுந்தை மட்டும் ஊறவைத்து ஆட்டிக் கொண்டு, அரிசியைக் கழுவி கல்லரித்து, காய வைத்து, பிட்டுக்கு அரைப்பது போல் அரைத்து வந்து (மிஷினில் கொடுத்து அரைத்து வந்து) அந்த ஈரத்துடனேயே கலந்து, உப்பு சேர்த்து, கரைத்து வைத்துக் கொண்டால் போதும்! அடுத்த நாள் காலை இட்லி பூப் போல இருக்கும்!**

**ஆம்லெட் மேல் உப்பு, மிளகுத் தூளுடன், சிறிதளவு சீரகத்தையும் சேர்த்து பொடி செய்து தூவலாம்.**

**— அமைதிக்கொடி.**

செய்முறை:

முந்திரியைத் தூளாக 'கட்' பண்ணிக் கொள்ளவும். வெங்காயத்தைச் சிறியதாக நறுக்கிக் கொள்ளவும். பிறகு White Sauce (வெள்ளை சாஸ்) கீழே கொடுத்துள்ளது போல் தயாரிக்கவும்.

வெண்ணெயைப் பெரிய பாத்திரத்தில் வைத்து உருக்கவும். பிறகு மைதாவை கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுக் கலக்கவும். பிறகு பாலை கொஞ்சம் கொஞ்சமாய் ஊற்றி சாஸ் கெட்டி ஆகும் வரை நன்கு

கலக்கவும்.

பிறகு வெங்காயம், மிளகாய், முந்திரி, பிழிந்து எடுக்கப்பட்ட ப்ரெட் ஸ்லைஸ் சேர்க்கவும். பிறகு உப்பும், மிளகுத் தூளும் கலக்கவும். அடுப்பிலிருந்து எடுத்துக் குளிர வைக்கவும். பிறகு அவற்றைச் சிறியதாய் பந்து போல் உருட்டி கைகளில் வைத்து கட்லெட் போலத் தட்டிக் கொண்டு காய்ந்த ரஸ்க் தூளில் புரட்டி எடுத்து எண்ணெயில் போட்டு பொரித்துக் கொள்ளவும். இது மாலையில் சாப்பிடுவதற்கேற்ற உணவு. தக்காளி சாஸுடன் சேர்த்துச் சாப்பிட சுவையாக இருக்கும்.

— ஆர். பத்மா, சென்னை — 78.

## ஆறுதல் பரிசு:

## பொரி வடை

தேவையான பொருட்கள்:

பொரி — 1 கப்,
பொட்டுக் கடலை — 1 கப்,
அரிசி மாவு — 1½ கப்,
ஜவ்வரிசி — 100 கிராம்,
டால்டா — 2 டேபிள் ஸ்பூன்,
உப்பு, மிளகாய்த் தூள், பெருங்காயத் தூள் தேவையானவை,
பொரித்து எடுக்க எண்ணெய்.

செய்முறை:

முதலில் ஜவ்வரிசியையும், பொரியையும் 15 நிமிடம் தண்ணீரில் ஊறவைக்கவும். பிறகு அரிசி மாவு, பொட்டுக் கடலை மாவு இரண்டையும் உப்பு, பெருங்காயம், காரம் சேர்த்து டால்டாவைக் காய்ச்சி ஊற்றிப் பிசையவும். ஊறிய ஜவ்வரிசி, பொரியைக் கலந்து கெட்டியாக வைக்கவும். ஒரு பிளாஸ்டிக் துண்டு பேப்பரில் சிறிது எண்ணெய் தடவி சிறு சிறு வடைகளாகத் தட்டி எண்ணெய் காய்ந்ததும் சிவக்கப் பொரித்து எடுக்கவும்.

— வி. ஜெயா, திருநின்றவூர்.

## ஆறுதல் பரிசு:

## கோதுமை மசாலா பூரி

தேவையான பொருட்கள்:

கோதுமை மாவு — 2 கப்,
மைதா மாவு — ½ கப்,
சன்ன ரவை — ¼ கப்,
ஆம்சூர் பொடி — 3 டேபிள் ஸ்பூன்,
பயத்தம் பருப்பு — 1 ஸ்பூன்,
மிளகாய்ப் பொடி — 3 டேபிள் ஸ்பூன்,
பெருங்காயப் பொடி — ½ டேபிள் ஸ்பூன்,
சீரகம் — 2 டேபிள் ஸ்பூன்,
உப்பு — தேவையான அளவு,
பொரிப்பதற்கு எண்ணெய் — 2 கப்.

செய்முறை:

முதலில் பயத்தம் பருப்பைச் சுத்தம் செய்து இரண்டு மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்து பிறகு ஒரு துணியில் ஆற விடவும்.

சீரகத்தை நன்றாகப் பொடி செய்து கொள்ளவும். மூன்று மாவுகளையும் நன்றாகக் கலந்து கொண்டு அதில் ஆம்சூர் பொடி, மிளகாய்ப் பொடி, சீரகப் பொடி, உப்பு, பெருங்காயம் இவைகளைப் போடவும். பயத்தம் பருப்பையும் லேசாக துடைத்து அதில் போடவும். ஒரு சிறிய கப் எண்ணெயை வாணலியில் விட்டு நன்றாகச் சுட வைக்கவும். லேசாக புகைய ஆரம்பிக்கும் பொழுது மாவு கலவையில் கொட்டி தேவையான அளவு சிறிது சிறிதாக நீர் தெளித்து சப்பாத்தி மாவு போல் கெட்டியாக நன்றாகப் பிசையவும்.

அரை மணி நேரம் கழித்துச் சிறிய சிறிய உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். பிளாஸ்டிக் தட்டில் எண்ணெய் தடவி மெல்லிய பூரிகளாகத் தட்டவும்.

வாணலியில் எண்ணெய் விட்டு காய வைக்கவும். எண்ணெய் நன்றாகக் காய்ந்தவுடன் தட்டி வைத்த பூரிகளை நான்கு நான்காகப் போட்டு மிதமான தீயில் நன்றாக சிவக்கும் வரை பொரித்து எடுக்கவும். நன்றாக ஆறியவுடன் டப்பாவில் போட்டு மூடி வைக்கவும்.

— மல்லிகாராஜன், உத்தரப்பிரதேசம்.



# 500 உஜாலா ரொக்கப் பரிசுகள்

# உஜாலா

## உஜாலாவின் விஞ்ஞானத் தன்மை

### மனோதத்துவம்

குழந்தைகள் இளமனதில் வெள்ளை ஆடைகள் எந்த அளவிற்கு சுகாதாரம், ஒழுக்கம், இலட்சியம் மற்றும் இதரப் பண்புகளை வளர்க்க உதவுகின்றன என மனோதத்துவ நிபுணர்கள் உங்களுக்கு கூறுவார்கள்.

### பௌதீகம்

வெள்ளை ஆடைகள் எவ்வாறு சூரிய ஒளியிலிருந்து பெருமளவு உஷ்ணத்தை வெளியேற்றி சருமத்தைக் காக்கின்றன என்றும் உஷ்ணத்தினால் சருமம் கருமையாகாமல் எவ்வாறு காக்கின்றன என்றும் பௌதீக நிபுணர்கள் உங்களுக்கு கூறுவார்கள்.

### இரசாயனம்

ஒப்பற்ற, நுட்பமான இரசாயனம் மட்டுமே பளிச்சென்ற, மாசற்ற ஒளி வீசும் வெண்மையை வெள்ளை ஆடைகளுக்கு தர முடியும். இவை அனைத்தும் அடங்கிய தயாரிப்பே உஜாலா. இது ஒரு சாதாரண சொட்டு நீலம் அல்ல. நீரில் விரைவாக கரைய வேண்டும் — உடைகளின் இழைகளில் ஆழ ஊடுருவி வேகமாக உறிஞ்சப்பட வேண்டும் — விஞ்ஞான முறை அற்ற தயாரிப்புகளில் இருப்பது போன்ற இரசாயனம் இருத்தல் கூடாது; அவற்றை தொடர்ந்து உபயோகித்தால் துணிகளுக்கு சேதமுண்டாகும் அல்லது குழந்தைகளின் சருமத்திற்கு தீங்கு உண்டாக்கும். தவிர துணிகளில் படிந்திடும் கறை போன்றவையினால் சோபையிழந்து காணப்படும் இவை அனைத்து விஷயங்களையும் மனதில் கொண்டே, அங்கக இரசாயனத்தில் டாக்டர் பட்டம் பெற்றுள்ள விஞ்ஞானி ஒருவரால் பல்வேறு ஆராய்ச்சி மற்றும் பரிசோதனை செய்யப்பட்டு உருவாகி உள்ளது உஜாலா.




### உஜாலா பாதுகாப்பின் சின்னம்

வாய்வழி நச்சு மூலம் (ORAL TOXICITY TEST) நடத்திய ஆராய்ச்சிகள், உஜாலா நச்சுத் தன்மை அற்றது என நிரூபித்து உள்ளன. சரும அரிப்பு பரிசோதனை (SKIN IRITATION TEST) நடத்தியதில் சருமத்திற்கு அரிப்பு ஏற்படுத்துவது இல்லை என்றும் கண்டு அறியப்பட்டுள்ளது.

உஜாலாவில் ஆடைகளுக்கு சேதமுண்டாக்கும் எந்த இரசாயனமும் கிடையாது. எனவேதான் உஜாலாவை மீண்டும், மீண்டும் வாங்குகிறார்கள்

### 500 உஜாலா ரொக்கப் பரிசுகள் :

இன்றைய நுகர்வோர்கள் இலவசமாய கிடைக்கும் மற்ற பொருள்களுக்காக இன்றி உஜாலா போன்ற நல்லதொரு பொருளை வாங்குவதன் காரணம் என்ன ? நுகர்வோர்கள் உஜாலாவை எப்படி கவனித்து வாங்குகிறார்கள் என்றும் ? எப்படி உஜாலாவைப் போல் தோற்றமளிக்கும் விஞ்ஞான முறையற்ற சொட்டு நீலங்களை வாங்குவதை தவிர்க்கிறார்கள் என்பதையும் உஜாலா பாட்டிலில் உள்ள விலாசத்திற்கு ஜூன் 30தி 1991. முன்பு அனுப்பவும். தகுந்த விமர்சனங்களுக்கு ரூ. 50 வீதம் 500 நபர்களுக்கு ரொக்கம் பரிசாக வழங்கப்படும்.

RAM/JL/103



**JYOTHY LABORATORIES, BOMBAY.**



* எனக்கென்னவோ ♀ என்றசின்னம் பஸ் நிறுத்தத்தையே குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. ஆண்கள் அடித்துப் பிடித்து விட, பல பஸ்களைக் கோட்டை விட்டு பள்ளிகள், அலுவலகங்கள் போகும் பெண்கள் தவம் கிடப்பது இந்தச் சின்னத் தின் அருகில்தானே! இன்றைய சமூகச் சூழ் நிலையில் ஆண்டுகள் கணக்கில் பெண்கள் திருமணத்துக்காகக் காத்திருப்பதையும் இது சிம்பாலிக்காக உணர்த்துவதாகக் கொள்ள லாம்.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

* மாதம் ஒரு பொருள் பற்றி மிகச் சிறப் பாக கட்டுரை வெளியிடும் மங்கையர் மலருக்குப் பாராட்டுக்கள். இப் பகுதி அனைவருக்கும் பயனுள்ள பகுதியாக இருக் கிறது. இப் பகுதியைத் தொடர்ந்து வெளி யிடுங்கள்.

சிவகங்கை, ஆர். அன்னபூரணி.

* முறத்தால் புலியை விரட்டிய தமிழ்ப் பெண் குலத்தில் பெண்கள் பத்திரிகையில் இத்தனை புறமுதுகா எனப் புரியாமல் விழித்தேன். பிறகுதான் புரிந்தது எங்கள் மணிபர்ஸின் எடைகுறைக்க நீங்கள் போட்ட திட்டமென்று.

ஈரோடு, டி. சந்திரன்.

* எரிபொருள் சரிவரக் கிடைக்காத இந் நேரத்தில், 'காஸ் மிச்சப்படுத்த...' கிடைப் பதற்கு அரிய யோசனைகளை வெளியிட்டுப் புண்ணியம் கட்டிக் கொண்டீர்!

கும்பகோணம், சி. சிவகாமசுந்தரி.

* 'மனச் சிதைவு' பகுதியில் வெளியிடப் படும் நிகழ்ச்சிகள் அவர்கள் அப்படி ஆவதற்கு நல்ல மனநிலையில் உள்ளவர் களே காரணம் என்பதை உணர்த்தியதோடு 'உண்மையான மனநோயாளி யார்?' என்ற ஐயத்தையும் கூடவே தோற்றுவித்தது.

சென்னை — 28, எம். தியாகராஜன்

* மற்றவர்கள் எவ்வளவு இளப்பமாக நினைத்தாலும், அவரவர்களுக்கு, அவர்கள் கடந்த காலத்தின் இனிய நினைவுகளைக் கிளர்ந்தெழச் செய்யும் பொருட்களைச் சேகரித்துப் பாதுகாத்து வைப்பதுதான் உயர்வு என்ற கருத்தை மிகுந்த நகைச் சுவையுடன் கூறிய சிறுகதை ரேவதி பாலு வின் அப்பாவின் ஆஸ்தி!

திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

* உமாகுமாரின் ''துர்கா''வைப் படித்த போது கண்கள் குளமாகி கண்ணீர் அருவி யாகியது. அவளின் ''கல்லானாலும் கணவன்'' கொடுமைகளுக்கு முடிவு கட்டி அவனை விட்டுப் பிரிந்து சென்று வாழ்க் கையில் போராட்டங்களை சந்தித்து முன்னேறிய 'துர்கா' — பாராட்டுக்குரிய வளே! அவள் நிலையில் உள்ள பெண் களுக்கு 'துர்கா' ஓர் உதாரணமாக இருப் பின் சாலச்சிறந்தது.

குடியாத்தம், எஸ். நிரஞ்சனா சண்முகம்.

* மங்கையர் மலரின் 'குழந்தைகள் மலர்'

## இத்தனை புறமுதுகா?



## இம்மாத இல்லத்தரசி

# சமையல் கூப்பன்

பொருள்: 'எங்க ஊர்' உணவு கடைசி தேதி: 15.4.'91

______________ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

பெரியவர்களையும் கவரும்வண்ணம் அருமையான பக்கங்களாய் அமைந்து அசர வைப்பது அருமையோ அருமை!

சேலம் — 4. ஏ. ஆர். பாலாமூர்த்தி.

* 'கோலப் போட்டி' மங்கையர் மலரில் என்ற விளம்பரங்களைக் கேட்டு மிகுந்த ஆவலோடு இந்த மாத மங்கையர் மலரைப் புரட்டினேன். மிகவும் ஏமாந்து போனேன். சென்னை நகர வாசிகளுக்கு மட்டுந்தானா இந்தப் போட்டி? இல்லையே நீங்களும் வரலாம் என்று சொல்லாதீர்கள். குடும்பப் பெண்களான நாங்கள் கணவன், குழந்தைகளை விட்டு கோலப் போட்டிக்காக சென்னை வர முடியுமா? நீங்களே சொல்லுங்கள். சென்னை நகர வாசகிகள் மட்டும் அதிர்ஷ்டசாலிகள்!

திருநெல்வேலி — 1. கமலா.

* மங்கையர் மலரின் கோலப் போட்டி சென்னையில் நடத்துவதுடன் பிற முக்கியமான நகரங்களிலும் நடத்தப்பட்டால் சுற்று வட்டத்தில் உள்ள பெண்களும் தங்கள் கைத்திறனை வெளிப்படுத்த வாய்ப்பு கிடைக்குமே!

பழனி. ஆர். எஸ். கி தாராணி.

* பாலகுமாரனின் "போராடும் பெண் மணிகள்" படிப்பவர்களைச் சிறிது நேரமாவது உலுக்கி விடும். "இப்படியும் ஒரு தாயா? இப்படியும் ஒரு தந்தையா? இப்படியும் ஒரு கணவனா?" என்று யாரிடமாவது கேட்டால், சிலராவது, 'இதை விட மோசமான தாய், தந்தைகளும், கணவர்களும் இருக்கிறார்கள்' என்று சொல்லக்கூடும்! போராட்டமில்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா என யசோதாக்கள் உணர்ந்து எழுந்து விட்டால்... எவ்வளவு முகமூடிகள் கிழியும்?

அம்பாசமுத்திரம். வெள்ளகால் இரா. கந்தையா.

* 'இளநீர் குடியுங்கள்' இழந்த ஆரோக்கியத்தை மீண்டும் பெற இளநீர் எங்ஙனம் பயனளிக்கிறது என்பதை அறிய முடிந்தது. அரிய தகவலுக்கு நன்றி.

தாம்பரம் சானடோரியம். ஜெயலட்சுமி ஈஸ்வரன்.

* திரைகடல் தாண்டிய திருவையாறு கண்டேன். பயனுள்ள கட்டுரை. கடல் கடந்து வாழும் தமிழர்கள் இதைப் படிக்கும் போது நாமும் இது போல் சீரிய பணியைத் தொடங்கலாமே, என எண்ணி செயல்படத் தொடங்குவர்.

கும்பகோணம். டி. எஸ். சீதாராமன்.

---

**அட்டை வண்ணப்படம்:**
**டி. சி. நாகேஷ்.**



# பேஷன் '91



1. பட்டு என்றால் குழந்தைகளுக்குப் பாவாடையும் சுடிதாரும் மட்டும் தானா. மிடி வகைதான் இப்போது பாஷன். எளிதில் அழுக்கும் ஆகாது. பெற்றோர்களிடம் திட்டும் விழாது. பாருங்கள் குட்டி ராணி போல் இல்லையா நான்.



3. வெயில் காலத்தில் கூட அணிபவருக்கும் காண்பவருக்கும் குளிர்ச்சியான ஆடை.

2. பட்டு விலை அதிகம் என்றால் இப்படி பளபள ஆடையிலும் சிறுமிகள் எங்களுக்கு விருப்பமே என்கிறாளோ இந்த எகிப்திய இளவரசி.

4 ஆடம்பரமற்ற கண்ணுக்கு இதமான ஆடை அணிபவரை அமைதியாகக் காட்டும் திறம்.



5 என்ன ரெடியா! பிக்னிக் போகலாமா!



6 எளிமையும், நாகரிகமும் சேர்ந்தமைந்த ஆடை எந் நேரமும் அணிவதற்குகந்தது.



வண்ணப்படங்கள்: யோகா.
உடைகள் உதவி: நாயுடு ஹால்.

— ஹேமாஸ்ரீ

கல்கத்தாவில் இனிப்பு தின்பண்டங்கள் மிகவும் பிரசித்தமானவை. அவைகளை எல்லாம் அதிக விலை கொடுத்து, கடைகளில் நாம் வாங்கிச் சாப்பிடுகிறோம். வீட்டிலேயே, குறைந்த செலவில் அவைகளைத் தயாரிக்கலாம் என்பது பலருக்குத் தெரியாது. பொதுவாக எல்லா ஸ்வீட்ஸும், பாலை அடிப்படையாகக் கொண்டுதான் தயாரிக்கப்படுகின்றன என்பதால், அவைகள் நம் உடலுக்கும் வயிற்றுக்கும் மிகவும் சிறந்ததாகும். அதனால் முக்கியமான சில பண்டங்களைத் தயாரிப்பது எப்படி என்று நாமும் தெரிந்து கொள்ளலாமே.

# பெங்கால் ஸ்வீட்ஸ்

## ரசகுல்லா:

தேவையான பொருட்கள்:

பசும் பால் — 1 லிட்டர்,
எலுமிச்சம் பழம் — 1 மூடி,
சர்க்கரை — 400 கிராம்,
பால் — 2 டேபிள் ஸ்பூன்,
டயமண்டு கற்கண்டு — 15,
மைதா — 25 கிராம்,
ரோஸ் எஸன்ஸ் — 2, 3 துளிகள்,
தண்ணீர் — 2 லிட்டர்.

செய்முறை:

ஒரு பெரிய பாத்திரத்தில் பாலைக் காய்ச்சி, நன்றாகக் கொதி வரும் பொழுது, ஒரு மூடி எலுமிச்சம் பழத்தை இதில் பிழிய வேண்டும். உடனேயே பால் திரிந்து விடும். இந்தப் பாலை மெல்லிய துணியில் கொட்டி, வாயைக் கட்டி, வடிகட்டுவது போல் தொங்க விட்டு 2, 3 மணி நேரம் வைத்திருக்க வேண்டும். பாலில் இருந்த தண்ணீரெல்லாம் போய், சக்கை மட்டும் துணியில் இருக்கும்.

இந்தச் சக்கையுடன் மைதா மாவைச் சேர்த்து, நன்றாகப் பிசைந்து, 15 சமமான உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். பின்பு ஒவ்வொரு உருண்டைகளுக்குள்ளும் ஒரு டயமண்ட் கற்கண்டை வைத்து, நன்றாக நாலாபுறமும் மூடி, வைத்துக் கொள்ளவும்.

சர்க்கரையுடன் 2 லிட்டர் தண்ணீர் சேர்த்து காய்ச்சி, கொதிக்கும் பொழுது 2 டேபிள் ஸ்பூன் பாலை விடவும். உடனே நுரைத்துக் கொண்டு வரும். அப்பொழுது அந்த அழுக்குகளை எடுத்து விடவும். பின்பு, மைதா பால் உருண்டைகளை மெதுவாகவும் ஒவ்வொன்றாகவும் அதில் போடவும். அடுப்பு நன்றாக எரிய வேண்டும். 5 நிமிடங்கள் கொதித்த பிறகு அதில் 3 டேபிள் ஸ்பூன் குளிர்ந்த நீரை விடவும். உடனே கொதி அடங்கும். மறுபடியும் கொதிக்க ஆரம்பித்தவுடன், 3 டேபிள் ஸ்பூன் குளிர்ந்த நீரை விடவும். இதே போல், மாறி மாறி 5, 6 தடவைகள் குளிர்ந்த நீரை விட்டு, கொதிக்க விடவும். 20, 30 நிமிடத்தில் ரசகுல்லாக்கள் எல்லாம் நன்றாக ஊறி, இரண்டு மடங்கு பெரியதாக ஆகி இருக்கும்.

பின்பு அடுப்பிலிருந்து இறக்கி, ரோஸ் எஸென்ஸ் சேர்த்து, ஆற வைக்கவும். ஊறிய ரசகுல்லாக்களை, ஒரு தட்டில் அல்லது அட்டைப் பெட்டியில் வைத்து, ஃபிரிட்ஜ்ஜில் மூன்று மணி நேரம் வைத்திருந்து, பரிமாறவும்.

## சம் சம் — Chum Chum

தேவையான பொருள்கள்:

பசும் பால் — 1 லிட்டர்,
எலுமிச்சம் பழம் — 1 மூடி,
சர்க்கரை — 400 கிராம்,
கோவா — 50 கிராம்,
மைதா — 25 கிராம்,
ரோஸ் எஸென்ஸ் — 2, 3 துளிகள்.

செய்முறை:

ரசகுல்லாவிற்குத் தயாரித்தது போல் இதற்கும், பாலைக் காய்ச்சி, வடிகட்டி, சக்கை தயாரிக்க வேண்டும்.

அத்துடன் மைதா மாவைச் சேர்த்து, நன்றாகப் பிசைந்து, ஒரே அளவாக 15 உருண்டைகள் உருட்டி வைத்துக் கொள்ளவும். பின்பு ஒவ்வொரு உருண்டையையும் 4 செ. மீட்டர் நீளமாகவும், 1½ செ. மீட்டர் அகலமாகவும் உருட்டி வைத்துக் கொள்ளவும்.

ரசகுல்லாவிற்குத் தயாரித்தது போல் பாகு வைத்து, அது கொதிக்கும் பொழுது, ஒவ்வொரு உருண்டைகளையும் மெதுவாகப் போட்டு சுமார் அரை மணி நேரம் கொதிக்க விடவும். பின்பு கீழே இறக்கி ரோஸ் எஸென்ஸ் சேர்த்து ஆற வைத்து, ஃப்பிரிட்ஜ்ஜில் மூன்று மணி நேரம் வைத்திருக்கவும்.

கோவாவை கொப்பரைத துருவியில் துருவி எடுத்துக் கொள்ளவும். ஃப்பிரிட்ஜ்ஜிலிருந்து 'சம்சம்' களை வெளியில் எடுத்து வைக்கவும். பின்பு, பாகிலிருந்தும் எல்லா 'சம்சம்களையும்' வெளியில் எடுத்து ஒரு தட்டில் வைக்கவும். ஊறிய ஒவ்வொரு 'சம்சம்மையும்' கோவாத் துருவலில் புரட்டி எடுத்து, ஒரு தட்டில் அல்லது அட்டைப் பெட்டியில் அடுக்கி வைத்து மறுபடியும் ஃப்பிரிட்ஜ்ஜில் ஒரு மணி நேரம் வைத்திருந்து பின்பு உபயோகிக்கவும்.

### கீர் கதம் (Kheer Kadam)

தேவையான பொருட்கள்:

பசும் பால் — ½ லிட்டர்,
கோவா — 200 கிராம்,
சர்க்கரை — 200 கிராம்,
பொடித்த சர்க்கரை — 50 கிராம்,
டயமண்டு கற்கண்டு — 15 அல்லது 20,
மைதா — 25 கிராம்,
பிங்க் கலர் எஸென்ஸ் — 2, 3 துளிகள் அல்லது பவுடர்.

செய்முறை:

ரசகுல்லாவிற்குத் தயாரித்தது போல் இதற்கும், பாலைக் காய்ச்சி, வடிகட்டி, சக்கை தயாரிக்கவும். அத்துடன் மைதா, பிங்க் கலர் சேர்த்து, அழுத்தி நன்றாகப் பிசையவும். பிசைந்த மாவை சிறிய கொட்டைப் பாக்கு அளவு உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். பின்பு ஒவ்வொரு உருண்டையின் உள்ளே ஒரு கல்கண்டு வைத்து நன்றாக மூடி வைக்கவும்.

ரசகுல்லாவிற்குப் பாகு தயாரிப்பது போல் தயாரித்து, அதில் இந்த உருண்டைகளைப் போட்டு சுமார் 25 நிமிடங்கள் கொதிக்க விடவும். பின்பு அடுப்பிலிருந்து இறக்கி ஆற வைக்கவும். ஆறியவுடன் எல்லா உருண்டைகளையும் எடுத்து, ஒரு தட்டில் வைத்து ஃப்பிரிட்ஜ்ஜில் மூன்று மணி நேரம் வைத்திருந்து, பின்பு வெளியில் எடுத்து வைக்கவும்.

பொடித்த சர்க்கரையுடன் கோவாவைச் சேர்த்து, அழுத்திப் பிசைந்து சிறிய உருண்டைகளாக சுமார் 15, 20 இருக்கும்படி உருட்டி வைத்துக் கொள்ளவும். இந்த ஒவ்வொரு உருண்டையின் மத்தியிலும், கட்டை விரலால் லேசாக அழுத்தி, அதன் நடுவில் ஃப்பிரிட்ஜ்ஜிலிருந்து எடுத்த உருண்டை ஒன்றை வைத்து, நன்றாக நாலா பக்கமும் சீராக மூடவும்.

இதே போல் எல்லா உருண்டைகளையும் செய்த பின்பு, மறுபடியும் ஃப்ரிட்ஜில் மூன்று மணி நேரம் வைத்திருந்து உபயோகிக்கவும்.

## சந்தேஷ் (Sandesh)

தேவையான பொருட்கள்:

எருமைப் பால் — ½ லிட்டர்,
எலுமிச்சம் பழம் — 1 மூடி,
பொடித்த சர்க்கரை — 30 கிராம்,
கோவா — 25 கிராம்,
பிஸ்தா பருப்புகள் — 1 டேபிள் ஸ்பூன் (துருவியது).

செய்முறை:

ரசகுல்லாவிற்குக் கொடுத்துள்ளபடியே, பாலைக் காய்ச்சி, திரித்து, வடிகட்டி, சக்கை தயாரிக்கவும். சக்கையிலிருந்து, நீர் முழுவதும் பிழிந்து எடுத்து, நன்றாகப் பிசையவும்.

அலுமினிய வாணலியை அடுப்பில் வைத்து, பாதி சக்கையைப் போட்டு, மிதமான சூட்டில் இரண்டு நிமிடங்கள் கிளறவும்.

பின்பு மீதியுள்ள சக்கை, கோவா, சர்க்கரைப் பொடியையும் போட்டு, கை விடாமல் 3, 4 நிமிடங்கள் நன்றாகக் கிளறி, அடுப்பிலிருந்து இறக்கி ஆற வைக்கவும். ஆறியவுடன், இதை சுமார் எட்டு உருண்டைகளாக உருட்டி, வடை போல் லேசாக தட்டவும். இதை 'சந்தேஷ் மோல்டு' என்ற அச்சில் அழுக்கி எடுக்க வேண்டும். இல்லையேல் பிஸ்கெட் அச்சு அல்லது, பாட்டில் மூடியால் அழுக்கி எடுக்கலாம். பார்ப்பதற்கு எல்லாம் ஒரே அளவாகவும் அழகாகவும் இருக்கும். அதன் மேல் பிஸ்தா தூள்களைத் தூவி, அலங்கரித்துப் பரிமாறவும்.

## பனீர் பர்பி

தேவையான பொருட்கள்:

பனீர் — 200 கிராம்,
கோவா — 150 கிராம்,
பொடித்த சர்க்கரை — 80 கிராம்,
ஏலக்காய்ப் பொடி — ½ டீஸ்பூன்,
டூட்டி ஃப்ருட்டி — 20 கிராம்.

செய்முறை:

பனீரை 2, 3 நிமிடங்களுக்கு நன்றாகப் பிசையவும். பின்பு அத்துடன் கோவா, சர்க்கரையைச் சேர்த்து கலந்து அடுப்பில் வைத்து, 2, 3 நிமிடங்களுக்குக் கிளறவும். உடனேயே இறக்கி, ஏலப்பொடியையும் போட்டு நன்றாகக் கலந்து, நெய் தடவிய தட்டில் கொட்டி, சமமாகப் பரத்தி, சதுரமாக துண்டுகள் போடவும்.

ஒவ்வொரு வில்லையின் மேலும் ஒரு டூட்டி ஃப்ருட்டியைச் சொருகி அலங்கரிக்கவும்.

குறிப்பு: பெங்கால் ஸ்வீட்ஸ்களை எல்லாம், அதிக நாள் வெளியில் வைத்திருக்கக் கூடாது. எப்பொழுதும் ஃப்ரிட்ஜிலேயே வைத்திருந்து உபயோகிப்பது நல்லது.

— ஜானகி சுந்தரம்.

காலையில் செய்த சட்னி மீந்து விட்டால் கவலை வேண்டாம். அந்த காலையில் செய்த கறியுடன் கலந்து ஒரு கரண்டி பால்விட்டு, அடுப்பில் கொதிக்க வைத்து இறக்கி விடுங்கள். காலையில் கறி. இரவில் கடச் கடக் கூட்டு!

— உமா.





வடாம் மாவை முதல் நாள் இரவே கிளறி, மறுநாள் இட்டால் வடாம் வெகு விரைவில்காய்வதுடன், பேப்பரிலிருந்து தானாகவே வந்துவிடும். அன்றே கிளறி, இடும் போது மாவும் சூடாக இருக்கும். வெயிலிலும் அவஸ்தைப்பட வேண்டியிருக்காது.

குறிப்பு: கொதிக்கக் கொதிக்க மாவைக் கண்ணாடிப் பேப்பரில் ஊற்றுவது உடம்புக்கு நல்லதல்ல.)

— உமா.

# பசையில் ஒட்டாத உறவுகள்

''சீதா, கடிதம் ஏதாவது உண்டா?''

சீதா ஒரு கவரை எடுத்து விட்டெறிந்தாள். அது வந்து விழுந்த வேகமே ஓரளவு நிலைமையை உணர்த்தியது.

''இங்கு பிள்ளை இல்லாத சொத்து கொள்ளை போகிறதே! அது உறுத்துகிறது எல்லோருக்கும். அதனால் உங்கள் அக்கா கல்யாணியின் பெண் கல்யாணத்திற்குத் தாராளமாகவே நாம் உதவ வேண்டுமாம்! எழுதியிருக்கிறான்...''

ரகு கடிதத்தில் கண்களைச் செலுத்தினான். அதன் 'த்வனி' குறைந்தது பதினைந்து ரூபாய்க்கு அடிப் போட்டது. ''...பிள்ளை வீட்டில் வைரத்தோடு கேட்கிறார்கள். நான் அதற்குத் தயாராக இல்லை. ஆனால் நல்ல வரனை விடவும் மனம் இல்லை. அதனால் நல்ல 'செயலாக' பிக்குப் பிடுங்கல் இல்லாமல் இருக்கும் நீ உதவினால்... (அம்மான் சீராகத்தான்)...'' கடிதம் ஓடியது. அதையும் கடனாக இல்லை என்று திட்டவட்டமாகக் கூறி விட்டது. கடிதம்.

''நாளைக்கு நமக்கு ஏதாவது என்றால் செய்ய இவர்களா வரப் போகிறார்கள்?'' உனக்கென்ன பிள்ளையா, குட்டியா? தவிர சீதாவிற்குக் கூட ஏதோ பிறந்தகத்துப் பணம் இருபதினாயிரம் பங்கு வந்திருக்கிறது என்று கேள்விப்பட்டேன்...'' என்று கூசாமல் முழுங்கியிருக்கிறாளே உங்கள் அக்கா! இவர்களுக்கு நாளைக்குத் தாங்க அரை டஜன் குழந்தைகள் இருக்கிறார்கள்... நமக்கு யார் இருக்கிறார்கள் பணம் தவிர? ''இருவரும் சம்பாதிக்கிறீர்களே!'' என்பது ஒரு வேதவாக்கு இவர்கள் வாயில் எப்போதும்... அடுத்த வருடம் நீங்கள் ரிடையராகி விட்டால்... அப்புறம் ஐந்து வருடங்களில் நானும் ஓய்வு பெற்று விடுவேன். அப்போது நமக்குத் துணை எது? அந்தப் பணப் பசைதான்... மனிதர்கள் அல்ல...'' சீதா படபடத்தாள்.

''அது பற்றி இப்போது என்ன சீதா? நாம் நம் கிராமத்திற்குப் போய் சின்னதாக ஒரு வீட்டை வாங்கிக் கொண்டு, காவிரி ஸ்னானமும், பஞ்ச நதீஸ்வர் தரிசனமும், தியாகராஜர் உற்சவமுமாக 'ஹாய்யாக' இருப்போம். நன்றாகச் சாப்பிட்டு, தூங்கி, டி.வி., சினிமா, கதை, கச்சேரி என்று அனுபவிப்போம். முடிந்தால் அவ்வப்போது எங்காவது க்ஷேத்ராடனம், சுற்றுலா என்று போவோம்...''

''ம்...! அதற்கெல்லாம் பணம்? எந்த 'ஃபாரினிலிருந்து' எந்தப் பிள்ளை உங்களுக்கு டாலர், டாலராக அனுப்பப் போகிறான்? நம்முடைய இந்தச் சேமிப்பு, பென்ஷன்தானே கடைசி வரை?''

''அதற்காக... சீதா...'' ரகு தயங்கினார்.

''உங்கள் மற்ற தம்பிகளெல்லாம் என்ன செய்யப் போகிறார்கள்? அவர்களும்தான் கணவன் மனைவி இருவரும் சம்பாதிப்பவர்கள். ஆனால் ஆசைக்கு ஒரு பெண்ணும் ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும் பெற்றிருப்பதால் அவர்கள் பாவம், சம்சாரி! இல்லை? அவர்கள் நூறோ, இருநூறோ அனுப்பி விட்டுப் பேசாது இருந்து விடுவார்கள். நீங்கள் ஒரு ஐநூறு அனுப்புங்கள் போதும். பிள்ளை இல்லாதவர்களுக்குப் பணம் காசுதான் சொத்து தெரியுமா?''

ரகு ''யுவர்ஸ் ஒபீடியன்ட்லி'' ஆனார். கையிலிருந்த பணத்தை ஃபிக்ஸட்டிலும், வேறு இன்வெஸ்ட்மென்ட்டிலும் போட்டு விட்டேன். ஓரிரு மாதங்கள் முன் சொல்லியிருந்தால் கூட சீதாவின் பணம் உதவியிருக்கும். ஒன்றும் செய்ய முடியவில்லையே என்று சீதாவிற்குக் கூட ரொம்ப வருத்தம்... என்று பவ்யமாகப் பதில் எழுதினார் சகோதரிக்கு. கல்யாணத்திற்கும் இருவரும் போகவில்லை. ஐநூறு ரூபாய் தவிர!

கிரியும், ஷோபாவும் ஸ்கூட்டரில் புறப்பட்டனர். ஜன்னல் வழியே அதைப் பார்த்துக் கொண்டிருந்த சீதாவிற்குப் பற்றி எரிந்தது. ''இவர்கள் என்ன என் வீட்டைச் சத்திரம் என்று எண்ணினார்களா? ஏதோ புதிதாக மாற்றி வந்தவர்கள் ஒரு பத்து நாள் இருப்பார்கள், வேறு வீடு பார்த்துக் கொண்டு போய் விடுவார்கள் என்று பார்த்தால்... மாதம் ஒன்றுக்கு மேல் ஆகிறது. இந்த ஷோபா ஏதோ கூடக் கூட வேலை செய்வது போலப் 'பாவ்லா' காட்டுகிறாள். ஆனால் ஒரு வேலையும் தெரியவில்லை! ஏதோ ஐநூறு ரூபாய் கொடுத்தார்கள். அது போதுமா, அவர்களுக்கு ஆகும் செலவிற்கு? அது கூட 'இந்த மகாப் பிரபு' வாங்கிக் கொள்ளவில்லை! பின் ஜாடை மாடையாக ஏதோ நான் பேச, அந்தப் பெண் என்னிடம் கொடுத்தது. ஆமாம், இவர்கள் இப்படியே ஒட்டிக் கொண்டு விடுவார்களோ, நிரந்தர

ஸ்ரீப்ரியா

மாக? மாற்றல் என்றால் அவன் மட்டும் வந்தால் போதாதா? இந்தப் பெண்ணும் ஏன் 'ஸிக் லீவு' போட்டு விட்டு அவனுடன் 'ஹனிமூன்' வர வேண்டும்? ஒரு நாலிலே, இரண்டிலே பூ, பழம் என்று கூட நுனி விரலால் தெறிப்பதில்லை! இன்று இவர் வரட்டும். ஒரு வழி பண்ணுகிறேன்'' சீதா உள்ளூரக் குமுறினாள்.

''இந்த வீட்டில் இரண்டு இளம் ஜீவன்கள் வளைய வருவது கொஞ்சம் கலகலப்பாக இல்லை சீதா? நமக்கும் காலா காலத்தில் ஒன்று பிறந்திருந்தால் இப்படித்தான் பிள்ளை, மாட்டுப் பெண்ணாக...'' என்று அன்று மாலை ஏதோ பேச ஆரம்பித்த ரகு, சீதா பார்த்த பார்வையில் ஊமையானார்.

''பெரியப்பா, அப்பாதான் ரகு பெரியப்பாவிற்கு பெரிய 'க்வார்ட்டர்ஸ்' இருக்கிறது. வேறு மூன்றாம் மனிதர்களும் அங்கில்லை. ரகு நல்ல மாதிரி ஷோபாவிற்கு அங்கு மாற்றலுக்கு வழியில்லாததால், நீ நாலைந்து மாதங்கள் அங்கிருந்து, மீண்டும் மாற்றிக் கொண்டு வந்து விடு'' என்றார். தவிர நான் வீட்டு வாடகை, சாப்பாட்டுச் செலவு என்று கொடுத்தால் நீங்கள் தப்பா நினைப்பீர்கள் என்றும் எச்சரித்தார்...'' சீதா ஏதோ சுற்றி வளைத்துப் பேசியதைக் கேட்ட கிரி, ரகுவிடம் ஏதோ மழுப்பிக் கூறினான்.



''அடடா, சே... நீ எதற்கும் எனக்குப் பணம் தர வேண்டும் என்பது இல்லை. கிரி... அது அசிங்கம். ஆனால் ஷோபா தான் ஏதோ 'டோக்கனாக' உன் பெரியம்மாவிடம் கொடுத்தாள் போலிருக்கிறதே... சரி.. அது 'பெண்களுக்குள்' என்பதால் நானும் தலையிட்டுத் தடுக்காமல் இருந்து விட்டேன்.'' அவன் மழுப்பலுக்கு ஒரு இழை கூடக் குறையாதபடிக் கூடவே மழுப்பி வழிந்தார் ரகுவும். ''ஆனால், கிரி ரகு தொடர்ந்து பேசலானார். ''இப்போது ஒரு புது ப்ராப்ளம் என்னவென்றால், சீதாவின் அம்மா அடுத்த மாதம் கண் வைத்தியத்திற்காக இங்கு வர இருக்கிறாள். அவளுக்குத் தனியாக ஒரு படுக்கை அறை வேண்டும்.. மகா தொண தொணப்பு அவள். ஒரே ஆசாரக்காரி வேறு அவள். அதனால்...'' ரகு உளறிக் கொட்டினார், சீதா சொல்லிக் கொடுத்த வார்த்தைகளை.

நல்ல காலம், மறு வாரமே கிரிக்கு மாற்றல் வந்து விட்டது. ஆனால் சீதாவின் தாய் வரவில்லை! அவள் வருவதாகவும் இல்லையே!

ஆனால், ஷோபா கெட்டிக்காரி. ''உங்கள் பெரியப்பா வீட்டில் பெரியம்மா தான் ஆட்சி!'' பாவம், பெரியப்பா! மொத்தத்தில் பிள்ளை குட்டி இல்லாததற்கு இத்தனை 'பிசினாறி'யாக இவர்கள் இருக்க வேண்டாம்...'' என்று உட்கார்ந்து சாப்பிட்டு நூறு நாள் கொண்டாடிய ஷோபாவும் நன்றியுடன்(!) கிரியிடம் சீதாவைப் பற்றி ஒரு சான்றிதழ் வழங்கவும் தவறவில்லை!

''அக்கா, உனக்கு நிஜமாக அருமையான தோழிகள்தான் வாய்த்திருக்கிறார்கள். எத்தனை 'ஃபாரின்' ஸாரீஸ் சேர்த்திருக்கிறாய்! வெளிநாட்டு வாசனைத் திரவியங்கள், கலைப் பொருள்கள்! அட, நீ பணம் படைத்தவள்; பிள்ளையா குட்டியா ஏதும் செலவு இல்லை சேர்க்கிறாய்! நாங்கள் எல்லா பசங்களுக்கும் படிப்பிற்கு 'டொனேஷன்' கொடுத்து, 'ஃபீஸ்' கட்டி, காலத்துக்கு ஏற்றபடி புடைவை, துணி என்று வாங்கி, சோறு போட்டே ஓட்டாண்டியாகி விட்டோம்! அது போகட்டும். அவர்களுக்கு நீ எல்லாவற்றிற்கும் பணம் கொடுத்தால் கூட அவர்கள் 'ரிஸ்க்' எடுத்து வாங்கி வர வேண்டாமா? அதிலும் இந்த வரி வரியான சங்கிலி! எப்படித்தான் தங்கத்தை ஒளித்துக் கொண்டு வந்தார்களோ!'' தங்கை சாந்தி ஆச்சர்யத்துடன் அடுக்கிய போது சீதாவிற்குள் ஏதோ குறளி சொல்லிற்று. புக்ககத்தவர் என்ன, பிறந்தகத்தவர் என்ன... எல்லோரும் ஒரே ரகம்தான்! உனக்குப் பிள்ளை குட்டி இல்லையே'' என்று உதட்டு அனுதாபம்! தங்களுக்குப் பணம் காசு சேரவில்லையே என்று ஒரு உள் எரிச்சல்!!

''அக்கா, நீ கட்டி அலுத்த பழம் புடைவைகள், படித்து முடித்த புத்தகங்கள், அத்திம்பேரின் பழைய பான்ட்ஸ், ஷர்ட் ஏதாவது இருந்தால் கொடேன். பரவாயில்லை. என் பெண் பிள்ளைகள் உடுத்துக் கொள்வார்கள்; படிப்பார்கள்!''

''அதென்ன, சாந்தி, பழசு கேட்கிறாய்! புதிசாகவே வாங்கித் தருகிறேன். எனக்கே, ஆபீஸ், பார்ட்டி, கிளப், 'அவுட்டிங்' என்று போவதால் புடைவைகள் எத்தனை இருந்தாலும் போதவில்லை.'' உதடு பிரிய அழகாகச் சிரித்தாள் சீதா. ஆனால் அவள் பழசும் தரவில்லை! புதிதும் வாங்கவில்லை. (ஆமாம் இவளுக்குக் கொடுத்தால் மற்றவர்கள் கேட்பார்கள்! இவளுக்கும் இதுவே ஒரு பழக்கமாகி விடும். அதெல்லாம் ரொம்ப ஒட்ட விடக் கூடாது) மாறாக, சாந்திதான் பத்து நாட்கள் தங்கிய போது துணிகளையும் தோய்த்ததற்காக அந்த வீட்டு வேலைக்காரிக்குத் தன் பழம் புடைவை ஒன்றைக் கொடுத்து விட்டு 'நல் ஆசி' பெற்றுச் சென்றாள்.

காலம் விரைவாக ஓடி விட்டது. ரகுவும், சீதாவும் அடுத்தடுத்து ஓய்வு பெறவே அவர்கள் விருப்பப்படி பஞ்சநதீஸ்வரர் சன்னிதியில் ஒரு வீடு வாங்கிக் கொண்டு 'ஹாய்யாக'க் குடும்பம் தொடங்கினார்கள்.

அன்று, பாங்கிலிருந்து பணம் எடுத்துக் கொண்டு, தஞ்சாவூருக்குச் சென்று ஏதேதோ சாமான்கள் வாங்கிக் கொண்டு, பஸ்ஸில் வந்திறங்கி அப்படியே களைப்புடன் நதிக்கரையில் அமர்ந்தனர் ரகுவும், சீதாவும். ஆமாம், வீட்டில் போய் என்ன செய்ய இருந்தது இருவரும் ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்த்துக் கொண்டு உட்காருவது தவிர? அவர்கள் கிராமத்தில் வந்து 'செட்டில்' ஆகி ஒரு வருடமாகப் போகிறது! முதுமைக் கோடுகள் சர்க்கரையில் குழைத்து அவர் முகத்தில் வரையப்பட்டிருந்தன. சீதாவிற்கு உடம்பில் ஒரு

கர்ப்பமாக இருக்கும் போது, நீங்கள்
கரும் பச்சை நிறமான கீரை வகைகளை
யும், (காரட் போன்ற) மஞ்சள் நிறமான
காய்கறிகளையும், பழங்களையும் உண
வில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

— ராஜி.



பதட்டம்; கண்களின் கீழ்க் கருவளையங்கள், கொஞ்சம் ஏதாவது வேலை செய்தாலே ஒரு அயர்வு; இரவு சரியான தூக்கமில்லை. டாக்டர் நாதன், ரகுவின் சர்க்கரைக்கும், சீதாவின் இரத்த அழுத்தத்திற்கும் மருந்து கொடுத்திருந்தார். ரகு நன்றாக நடக்க வேண்டும்; இனிப்பின்றி அளந்து, ஆனால் வயிறு காலியில்லாமல் அவ்வப்போது சாப்பிட வேண்டும். சீதா 'பெட் ரெஸ்ட்' எடுத்தால் 'ப்ரஷர்' குறையும். மனத்தில் 'டென்ஷன்' கூடாது என்றார். வீட்டு வேலைகளை யார் செய்வது?

சமையலுக்கு ஒரு மாமி ஏற்பாடாகி இருந்தது. ஆனால் அவள் காலை ஆறு மணிக்கு வந்து எட்டு மணிக்குள் காலைச் சமையல், பிற்பகல் டிபன், இரவு ஆகாரம் எல்லாவற்றையும் செய்து முடித்து விட்டு பறந்து விட்டால் மறுநாள் காலையில்தான் அவள் தரிசனம் கிடைக்கும். பொருள்கள் குளிர்ச்சியாக வேண்டுமென்றால் 'ஃப்பிரிட்ஜில்' வைக்கலாம். ஆனால் சூடாக எத்தனை நேரம் வைக்க முடியும்? பணத்திற்கு மாரடிப்பவளிடம் அதற்கு மேல் எதிர்பார்க்கவும் முடியாது. சீதாவிற்கு உடல் சோர்வோ, தலைவலியோ, ரகுவிற்கு ஒரு கீரை அதிகமாகச் சமைக்க வேண்டுமோ— எதுவானாலும் அந்தம்மாள் நிற்க மாட்டாள். எட்டு மணிக்குப் பின் அவளுக்கு வேறிடத்தில் வேலை இருக்கும். கூலி வேலை செய்பவளிடம் பரிவை எதிர்பார்க்க முடியுமா? ஆனால், இந்தம்மாள் ஒரு மாதமாகத்தான் இருக்கிறாள். அதற்கு முன்...

வீட்டோடு இருந்து கவனிக்க முதன் முதல் ஏற்பாடு செய்து கொண்ட பெண், சீதாவின் ஓரிரு பழம் புடவைகளைக் கட்டிக் கொண்டு, தோட்டத்து மலர்களைச் சூட்டிக் கொண்டு, மினுக்கி விட்டு, இரண்டு மாதத்திற்குள் வீட்டுக்கு வந்து கொண்டிருந்த பால்காரப் பையனுடன் ஓடி விட்டாள். பின் அவளைத் தேடிக் கொண்டு வந்த அவள் தாயாரின் வாயை அடைக்க சீதா இரண்டாயிரம் கொடுக்க வேண்டியிருந்தது. அதாவது தேவலை! அதன் பின் ஒரு பையன் — பெண் வேண்டாமென்று அமர்த்தப்பட்டான். அவன் ஒரு நாள் தங்கச் சங்கிலியில் இருந்த கடியாரம், அன்றுதான் பாங்கிலிருந்து எடுத்து வந்திருந்த பணத்துடன் கம்பி நீட்டி விட்டான். அதன் பின் தான் சமையல் மாமி நுழைந்தாள்.

இதையெல்லாம் கூட்டிக் கழித்துப் பார்த்தால் சீதாவின் மனத்தில் எப்படி 'டென்ஷன்' இல்லாமல் இருக்கும்?

''சே, கிராம வாழ்க்கை 'போர'டித்து விட்டது. ஒரு பத்து நாட்கள் எங்காவது போய் இருந்து வரலாமா? எங்கே போகலாம்?'' சீதா கழித்துக் கொண்டு ஓடும் காவிரியைப் பார்த்துக் கொண்டே பேசினாள். ''வேலையிலிருந்த போது உங்கள் அக்கா கல்யாணி 'வா, வா' என்று அழைத்தாள், இப்போது கடிதம் கூடப் போடுவதில்லை! இருந்தால் என்ன, உறவு விட்டுப் போகுமா? எங்காவது போய் உப்பு, புளியைத் தொடாமல் ஒரு பத்து நாள் இருக்க ஆசையாயிருக்கிறது...''



தேவையில்லாத ப்யூஸாகி போன ட்யூப் லைட்டைத் தூர எறியாமல் அதில் தேங்காய் நார் கயிறு கொண்டு அடி முதல் நுனி வரை சுற்றிச் சுற்றிக் கட்டி அதை அப்படியே மண் நிறைந்த தொட்டியினுள் நிற்க வைத்து தோட்டத்தில் வரிசையாக குரோட்டன்ஸ் செடிகளை அதில் படர விடலாம். பார்ப்பதற்கு அழகாகவும் கவர்ச்சியாகவும் இருக்கும்.

— ஜெயஸ்ரீ.

''எங்கே போவாய், சீதா? பேசாமல் மெட்ராஸ் போய், பணத்தை வீசி எறிந்து ஒரு ஓட்டலில் தங்கி டிசம்பர் சீசன் கச்சேரிகள் கேட்டு வரலாமா?'' ரகு சிறு சிறு கற்களைத் தண்ணீரில் வீசிக் கொண்டே கேட்டார்.

''ஐயே, ஒரு மாதம் ஹோட்டலிலா? ஹோட்டல் சாப்பாடு எப்போதாவது ஒரு வேளை சாப்பிட்டால் ரசிக்கும்.''

''அட, பணம் இருக்கிறது. விட்டெறிந்தால், பல ஹோட்டல்களில் பல ருசிகள், ரசிக்க...''

''ப்சு''—சீதா உதட்டைப் பிதுக்கினாள். எதிர்காலமே அவளுக்கு ஒரு கேள்விக் குறியாகத் தோன்றியது. இப்போதாவது பரவாயில்லை. ஆனால் இருவரில் ஒருவர் போன பின்? விளக்கில் திரி மிஞ்சுமோ, எண்ணெய் மிஞ்சுமோ யாருக்குத் தெரியும்? டாக்டர் 'டென்ஷன்' கூடாது என்கிறார். ஆனால் வருங்காலம் பற்றிய பயங்கரமான குழப்பம் எப்படித் தீரும்? யார் வந்து தன்னிடம் இரு என்று அன்பாக அழைத்து ஆதரிப்பார்கள்? பணம், காசு இருக்கிறது கூலியாட்களை அமர்த்த. ஆனால் பரிவு பாசம் காட்ட யார்?

''உன் தங்கைப் பெண் தஞ்சை, திருச்சி, கும்பகோணம், சுவாமி மலை என்று வந்து போயிருக்கிறாள். நம்மை எட்டிப் பார்க்க வரவில்லையே!'' ரகு வியப்புடன் கூறினார்.

''ம்... என்ன உறவு மனிதர்களோ! வர வர இந்தக் காலத்தில் மனிதர்களுக்கு இரத்த பாசமே அற்றுப் போய் விட்டது!''—சீதா வெறுப்புடன் பேசினாள்

இந்தப் பணம் காசுக்காகத்தானே அன்று நீ இரத்தபாசம் அற்று மனிதர்களை ஒட்ட விடாமல் இருந்தாய் — என்று ரகு கேட்க வில்லை; கேட்க மாட்டார்; கேட்கத் துணிச் சல் கிடையாது!

இதற்குள் ரகு தன் கையிலிருந்த ஒரு பிஸ்கோத்தை விட்டெறிய ஒரு நாய் அதைத் தாவிப் பிடித்தது. அதன் பின் அவர்கள் அலுப்புடன் அந்த இடத்தை விட்டு எழுந்த போது அதுவும் வாலை ஆட்டிக் கொண்டே அவர்கள் பின்னாடியே வந்தது. கதவைத் திறந்த சீதா வியப்புடன் திரும்பி நோக்கி னாள். அந்த நாய் அவர்கள் வீட்டு வாசலி லேயே காவலுக்குப் படுத்து விட்டது.

சீதா ஒரு கணம் அதையே உற்றுப் பார்த் தாள். ஒரு பிஸ்கோத்தை விட்டெறிந்ததால் நாய் கூட நன்றி காட்டுகிறது. அது போல அன்று தானும் யாருக்காவது ஏதாவது செய் திருந்தால்... பணம், பணம்தான் துணை என்று எண்ணாமல், மனித நேயத்துடன் நடந்து கொண்டிருந்தால்... இன்று உறவினர்கள் ஒட்டி உறவாடி ஆதரவு தந்திருப்பார்களோ!

''சீ ... ச்சீ ... நாயே, போ.'' ரகு அதை விரட்டினார்.

''ஓ... நோ... நோ... அதை விரட்டாதீர் கள்'' சீதா பதட்டத்துடன் அவர் கையைப் பிடித்த போது அவள் கையிலிருந்த பை கீழே விழுந்தது. அதிலிருந்து அவர்கள் 'பாஸ் புக்' வெளியே தெறித்தது. அதன் பக்கங்கள் காற்றில் அலைந்தன. 'பாங்க் பாலன்ஸ்' ஆறு லக்கத்தில் தெரிந்தது. இருவருடைய சேமிப்புகள், 'க்ராச்சுவிட்டி' , 'கம்யுட்டேஷன்', எல்லாம் 'ஜாயின்ட்' அக்கௌண்ட்டில் நிறைந்திருந்தது. அதோடு அன்று எடுத்திருந்த சில நோட்டு களும் கொத்தாகக் கிடந்தன. அவற்றைக் கை நிறைய பொறுக்கிக் கொண்டு சீதா நிமிர்ந்த போது நாய் கூட ஓடியிருந்தது.

ரகு, இயந்திரமாகப் பணத்தை எடுத்து எண்ணி உள்ளே வைத்தார். சீதா பெருமூச்சு உந்தித் தள்ள இரவு சமையலைச் சூடாக்கத் தன் அனாதைத்தனத்தை நொந்து கொண்டு உள்ளே நுழைந்தாள்.



நேர் புள்ளி 17 — 1

— மோகனா ஜெயம்.

# வாய்ப்புகளைக் கண்டு கொள்வாய்

நாம் நினைக்காமலே பல வாய்ப்புகள் நம் முன் வருகின்றன. அநேகமாக தவறான வாய்ப்பையே தேர்ந்தெடுத்து விடுகிறோம்.

அக்கா பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்படி ராதாவிடம் சொல்லுகிறார்கள். இப்போது ராதா முன் பல வாய்ப்புகள் விரிகின்றன. பாடம் சொல்லிக் கொடுத்ததாகப் பெயர் பண்ணி பெயர் வாங்கிக் கொண்டு போகலாம். வீணாகத் தன்னை அக்கா வேலை வாங்குகின்றாள் என்று பிறரிடம குறை கூறலாம். பிள்ளைகளின் இயல்புகளைக் கவனித்து அவர்களுக்கு ஏற்ற வண்ணம் சொல்லிக் கொடுப்பதனால் தானும் ஒரு பாடம் படித்துக் கொள்ளலாம்.

எவ்வாறாயினும் ராதா ஒரு விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம்.



அவள் எந்த விருப்பத்தைத் தேர்ந்தெடுக்கப் போகிறாள்?

அலுவலகத்தில் எதிர்பாராமல் மேலதிகாரி இரண்டு நாள் விடுமுறை எடுத்திருக்கிறார். அதனால் ரமாவிற்கு நேரம் கிடைத்திருக்கிறது. அவள் அப்போது அரட்டையடித்து பிற்கால மனக்கசப்புகளுக்குக் காரணமாகலாம். அங்கொன்றும் இங்கொன்றும் ஒழுங்கில்லாமல் கிடக்கும் விவரங்களை ஒன்றுதிரட்டி — ஒரு உருப்படியான வேலையைச் செய்து — எதிர்கால வேலைகளை எளிதாக்கலாம். நாவல் படிக்கலாம். நல்லதோர் கருத்தை எண்ணிப் பார்த்து, அதனை எப்படிப் பயன்படுத்தலாம் என்று எழுதிப் பார்க்கலாம்.

எதைச் செய்தாலும் அவளுக்குத் திருப்தியே. ஆனால் எந்தத் திருப்தியை அவள் விரும்புகிறாள்?

சூழ்நிலையின் இழுத்த இழுப்பிற்கு நாம் சென்றோமானால், முன் யோசனையில்லாமல் சின்னச் சின்ன திருப்திகளில் நம் சக்திகளைச் சிதறடிப்போமானால், அது யார் தவறு?

ரமா சொல்லலாம். 'எத்தனையோ நாளுக்குப் பிறகு நாலைந்து மணி நேரம் கிடைத்திருக்கிறது. நல்ல கருத்தைச் சிந்தித்துப் பெரிய ஆசைகளை வளர்த்துக் கொண்டால், நாளைக்குப் பழையபடி 10 முதல் 5 மணி உலகத்திற்குப் போவது கஷ்டமல்லவா!

சரி. இரண்டு மாதத்திற்கு ஒரு முறைதான் இப்படியொரு வாய்ப்பு வருகிறது என்றே வைத்துக் கொள்வோமே. அதனை எதிர்பார்க்குமளவு சிறந்தோர் திட்டம் அவள் உள்ளத்தில் பதிந்து விட்டால், அந்த ஆவலிலே அன்றாட வேலைகளின் கசப்பு அகன்று விடாதா! அடுத்தடுத்து புது வழிகள் பிறந்து விடாதா!

ஆடம்பரப் பொருட்களைக் குறைத்துக் கொண்டு, அஞ்சல் வழி படிப்பிற்குப் பணம் கட்டுவாள். சரியான கேள்விகள் எழுப்பி, சக அலுவலர்களின் படிப்பையும் அனுபவத்தையும் பயன்படுத்திக் கொள்வாள். தொலைக்காட்சி முன் உட்காரும் நேரத்தைக் குறைத்துக் கொண்டு, பின் தூங்கி முன்னெழுந்து காலையில் கால் மணி நேரம் உடற்பயிற்சி செய்வாள்.

மனத்தை வழிக்குக் கொண்டு வர அநேக திறமைசாலிகள் 'அடுத்து செய்ய வேண்டியன' என்றோர் பட்டியலைத் தம் பையில் வைத்திருக்கின்றனர். அதன்

மூலம் சூழ்நிலையைத் தம் கையில் வைத்திருக்கின்றனர்.

மின்சார வண்டி நின்று விட்டதா? மற்றவர்களைப் போல் வேடிக்கை பார்க்கும் விருப்பத்தை அவர்கள் நிறைவேற்றிக் கொள்வதில்லை. கிடைத்த நேரத்தில் படிக்கலாம் என்று தேர்ந்தெடுத்து வைத்திருந்த ஆராய்ச்சிக் கட்டுரையில் ஆழ்கின்றனர். அது அவர்கள் விருப்பம்.

அடுத்து செய்ய வேண்டியனவற்றை வரையறுப்பதில் இரண்டு நன்மை உண்டு. ஒன்று, உயர்ந்ததோர் நோக்கத்தைப் படிப் படியாகச் செயலாக்க முடிகின்றது. இரண்டு, சூழ்நிலை நம்முன் தோற்றுவிக்கும் வேண்டாத விருப்பத்தைத் தடை செய்யலாம்.

மாலை வேளைக்கு ஒரு வேலை வைத்திருந்தால், அதனைக் கவனித்திருந்திருப்போம். இல்லாவிட்டால், தள்ளுபடி



விற்பனை என்று வழியில் பார்த்த விளம்பரம் நம்மைத் தள்ளிக் கொண்டு போய் விடும்.

உயர்ந்த நோக்கத்தின் உபயோகம் இதுதான்: சின்ன ஆசைகளை அது மறக்கச் செய்கிறது, மின்மினிகளை மறைக்கும் கதிரவன் போல்.

கண்ணில் படும் அழகில் மயங்குவோர் விருப்பம், எரிச்சல் ஊட்டியவர்க்கு எதிரடி கொடுக்குமோர் விருப்பம், சோம்பலில் விருப்பம், வெறுப்பதில் ஓர் விருப்பம் என்று மனிதனின் சின்ன விருப்பங்கள் பல. இவற்றுடனே, எதிர்கால நன்மையை எண்ணும் விருப்பம், அன்பில் விருப்பம், முயற்சியில் விருப்பம், அனைவரும் நலனை அடைவதில் விருப்பம் எனச் சிறந்த விருப்பங்களும் உள்ளன.

இந்த விருப்பங்களில் ஏதேனும் ஒன்றைப் பூர்த்தி செய்ய சூழ்நிலை இடம் தரும் போது —

உயர்ந்த எண்ணம் கொண்டவன் சிறந்ததைத் தேர்ந்தெடுக்கின்றான். சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்கின்றான்.

மற்றவனோ சூழ்நிலையின் கைப் பாவை ஆகின்றான். ஆசைப்பட்டு மோசம் போகின்றான்.

ஆக, சூழ்நிலையைக் கையாளும் முறையில்தான் நல்ல வாய்ப்பு பிறக்கிறது. சூழ்நிலை எதுவானாலும் அதில் ஒரு நல்லதைக் காண்கின்றான் புத்திசாலி. தன் மனத்திலுமோர் உயர்ந்த பண்பை வலுவாக்கிக் கொள்கின்றான்.

கச்சிதமாகச் செய்யும் கவனத்தை வளர்க்குமானால், சாதாரண வேலையும் ஓர் வாய்ப்பே.

தவறுகளைத் திருத்திக் கொள்ள உதவுமானால், எதிர்ப்படும் இடையூறும் ஓர் வாய்ப்பே.

ஒழுங்காக இல்லையே ஓவியத் திறமை என்று எண்ணாமல், உள்ளதை ஒரு பொழுதுபோக்காய்க் கொள்ளலாமே. சுற்றுலா சென்றவிடத்து சாப்பாடு தயாராகவில்லையே என்று சுற்றியிருப்போர் எரிச்சல்படுகையில் இயற்கையை வரைந்து இன்பம் எய்தலாமே!

> ரவையில் புளித்த தயிர், மிளகு, சீரகம், நல்லெண்ணெய், உப்புக் கலந்து, இட்லித் தட்டில் எண்ணெய் தடவி ஊற்றி ஆவியில் வேக வைத்தால் ருசியாக இருக்கும்.
>
> — பார்வதி.

வீட்டு வேலைகளுக்குப் பின் மிஞ்சுவது அரை மணி நேரந்தான் என்று ஏன் ஆதங்கப்படுகின்றீர்கள்? தொடர்ந்து தினமும் தமிழிலக்கியம் படிக்கலாம். இல்லை, யோகாசனமே உங்கள் விருப்பம் என்றால், அதைத் தவறாது செய்யலாம். பூ வேலையில் ஆர்வமுள்ளவர்கள் அதில் புதுமைகள் செய்யலாம். அதிலும் இதிலுமாக நுனிப்புல் மேய்வதை விடுத்து, ஏதேனும் ஒன்றில் புலமை பெறலாம்.

சூழ்நிலையைக் குறை சொல்பவர்கள் இதைக் கவனிக்க வேண்டும். ஒரு நாளில் கிடைப்பது சிறிது நேரமே ஆனாலும், ஏதேனும் ஒன்றை விடாப்பிடியாகத் தொடர்ந்து செய்தால், ஒரே துறையில் உள்ளத்தை ஒன்றச் செய்தால், முன்னேற்றம் நிச்சயம். மலைச் சிகரம் ஒன்றில் ஏறியவன் மற்ற சிகரங்களையும் பார்க்க முடிவது போல், பல விஷயங்களை அறிந்து கொள்வதும் நிச்சயம்.

வாழ்க்கை முழுவதுமே வாய்ப்புதான். எதை விரும்புகிறோம் என்று புரிந்து கொண்டால், அதை எப்படியெல்லாம் தேடிக் கொள்ளலாம் என்பதும் தெரிந்து விடும்.

— பத்மாவதி செல்வராஜ்.

# இந்த மாதம் எப்படி?



## ஏப்ரல் 91

**மேஷ ராசி:**

அசுவினி, பரணி, கிருத்திகை 1 — ஆம் பாதம்.

உங்கள் ராசிக்குப் பன்னிரெண்டில் சந்திரன் இருக்கும் போது தமிழ்ப் புத்தாண்டு பிறந்தாலும் குருவின் பார்வையும் பரிவர்த்தனை மூலமும் இந்த ஆண்டு உங்களுக்கு நல்லதொரு ஆண்டாகவே இருக்கும். புத்திர பாக்கியம் உண்டாகும். மாதத்தின் முதல் வாரம் சற்று மந்தமாக இருக்கும். 3, 4, 5 தேதிகளில் சற்று உஷாராக இருக்க வேண்டும். விக்னம், தோல்வி, ஏமாற்றம் என ஏதேனும் ஒருவிதத்தில் குழப்பம் ஏற்பட வாய்ப்புண்டு. எனினும் உச்சகுரு உங்களைக் காப்பாற்றுவார். 10ம் தேதி முதல் லாப நிலைமை உருவாகும். குறிப்பாக மூன்றாவது வாரத்தில் தனலாபமும், பதவி உயர்வும் ஏற்படும். பண வரவும் உண்டு. சுபச் செலவும் உண்டு. கடல் கடந்து செல்லும் வாய்ப்பு ஒரு சிலருக்கு ஏற்படும். 17, 18, 19 தேதிகளில் உங்கள் எண்ணம் நிறைவேறும் வண்ணம் ஒரு நல்ல நிலை உருவாகிறது. அது திருமண விஷயமாகவும் இருக்கலாம். அல்லது வேலை மாற்றம் பதவி உயர்வு சம்பந்தமாகவும் அமையலாம்.

**ரிஷப ராசி:**

கார்த்திகை 2, 3, 4 — ஆம் பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 — ஆம் பாதங்கள்.

பிரஜோத்பத்தி ஆண்டின் துவக்கத்தில் உங்கள் ராசிக்கு பதினொன்றில் சந்திரனும் இராசிநாயகனாகிய சுக்கிரனும் உங்கள் ராசியிலேயே இருப்பதுடன், உங்களுக்கு இந்தப் புத்தாண்டு பலவிதத்திலும் நன்மை தரும் ஆண்டாக இருக்கும். அஷ்டமத்துச் சனி தை மாதத்தில் மாறி இருப்பதாலும் குருவின் பார்வைச் சனிக்கு இருப்பதாலும் இந்த மாதம் பூராவும் இலாபகரமாக இருக்க வேண்டும். முதல் வாரத்தின் கடைசி மூன்று நாட்கள் சற்று கஷ்டம் தரும் வண்ணம் அமையலாம். 21, 22, 23 ஆகிய தேதிகளில் பணவரவு உண்டு. பதவி ஏற்றமும் ஏற்படலாம். சுப நிகழ்ச்சி ஒன்று நடைபெறும். இதுவரை தட்டிச் சென்ற வாய்ப்பு இந்த மாதத்தில் உங்களுக்கு வலிய வந்து உதவி செய்ய இருக்கிறது. அது கலைத்துறை சம்பந்தமாகவும் இருக்கலாம். அல்லது திருமணம் புத்திரோற்பத்தியாகவும் இருக்கலாம். கலைப் பொருள் விற்பனையாளர்கள் ஷேர் மார்க்கெட்காரர்கள் இலாபம் அடையும் வாய்ப்பு அதிகம். எனினும் பொன் நகைகளை விற்போர் சற்று நஷ்டமடைய வேண்டியிருக்கும். பணிபுரியும் பெண்கள் பலவிதத்திலும் பாராட்டையோ, பதவி உயர்வையோ பெறுவர். இதுவரை எதிலும் ஏமாற்றத்தையே அனுபவித்த உங்களுக்கு இனி ஏற்றமிகு வாழ்வு அமையும்.

**மிதுன ராசி:**

மிருகசீரிஷம் 3, 4 — ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

அஷ்டமத்துச் சனியின் ஆளுகைக்கு உட்பட்டுள்ளீர்கள். என்னும் ஆகஸ்ட் வரை குரு பார்வை உங்களை ரட்சிக்கும். இந்த மாதம் உங்கள் ராசி நாதனாகிய புதன் நீச்சமும் வக்கிரமும் பெறுகிறார். உதவுகின்ற வாய்ப்பினையும் அடைகின்றார். மாதத்தின் பிற்பகுதி அதிர்ஷ்டத்தை அளிக்கும். எதிர்பார்த்த வேலை மாற்றம் அமையும். படத்துறையினருக்கு லாபம் உண்டு. ரசாயனத் துறை மற்றும் ஷேர் மார்க்கெட்காரர்களுக்கு இலாபம் ஏற்பட

வாய்ப்பு உள்ளது. எரிபொருள் துறையினருக்கு இதுவரை இருந்த சிரமங்களும் குறையலாம். அதே சமயத்தில் இதுவரை வந்த இலாபமும் இனி குறையும். மாதத்தின் பிற்பகுதி அரசியல்வாதிகளுக்கு ஆதாயம் தரும். எனவே பஞ்சாயத்திலிருந்து பாராளுமன்றம் வரை எந்தத் தேர்தலிலும் நிற்கலாம். கட்டிடம் நிலம் இவைகளை விற்பதும் வாங்குவதுமான யோகம் ஒரு சிலருக்கு ஏற்படும். இந்த மாதத்தில் 17, 18, 19 தேதிகளில் சுக்கிரன், சனியாட்சி, சூரியன், சந்திரன், குரு ஆகியோர் உச்சம் என ·உங்களுக்கு உகந்த முறையில் அமர்ந்திருக்கிறார்கள். பொன்னான வாய்ப்பு; பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

**கடக ராசி:**

புனர்பூசம் 4 — ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

இந்த மாதம் பூராவும் அனுகூலமாகவே இருக்கும். குறிப்பாக மாதத்தின் 3வது வாரம் முழுவதுமே முன்னேற்றத்தைத் தரும் நிலை தெரிகிறது. அந்தக் காலக் கட்டத்தில் கடந்த காலத்தில் இழந்த ஒன்றை — அது பொருளாகவும் இருக்கலாம் அல்லது பதவியாகவும் இருக்கலாம். மீண்டும் அடைவீர்கள். அரசியலில் ஈடுபட்டு உள்ளவர்களுக்குப் பதவியும் புகழும் வரும். அரசுப் பணியில் உள்ள பெண்களுக்குப் பதவி உயர்வுக்கான சூழ்நிலை உருவாகும். ஆயினும் 10 முதல் 14ம் தேதி வரை எதிலும் சற்று ஏமாற்றம் ஏற்படலாம். தமிழ்ப் புத்தாண்டில் உங்களுக்கு ஒரு நல்ல சேதியோ அல்லது வீடு வாகன யோகமோ ஏற்படும். கடக ராசிக் கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கைகூடி வரும். உல்லாசப் பயணம் ஒன்றில் பங்கேற்பீர்கள். எழுத்தாளர்களும் நடிப்புத் துறையினரும் சுறுசுறுப்பாக இயங்க வேண்டிய மாதம்.

**சிம்ம ராசி:**

மகம், பூரம், உத்திரம் 1 — ஆம் பாதம்.

மாதத்தின் முற்பகுதியை விட பிற்பகுதியில் காரியங்கள் கைகூடி வரும். தமிழ்ப் புத்தாண்டில் ஆரம்ப தினத்தில் எதிலும் அகலக் கால் வைக்க வேண்டாம். குருவின் பார்வை மீனத்தில் உள்ள சந்திரனுக்குக் கிடைத்தாலும் லாபாதிபதியான புதன் வக்கிர ரீதியில் நீச்சம் பெறுகிறார். மற்றபடி மாதத்தின் பிற்பகுதியில் ஒரு தொலைதூரப் பிரயாணத்தில் பங்கேற்க வேண்டியிருக்கும். சுக்கிரனால் சுகமுண்டு. குருவால் சுப விரயமும் குறிப்பாக 21 முதல் 25க்குள் ஏற்பட வாய்ப்பு உண்டு. இந்தக் காலக் கட்டத்தில் புது முயற்சிகள் மேற்கொள்ளலாம். ஆறாமிடத்துச் சனியினால் எதிர்பாராத தன லாபம் ஏற்பட வாய்ப்பு உண்டு. பொதுவாக வாகனங்களை வைத்திருப்பவர்களுக்கு வருவாய் கூடுதலாக வரும். பொறியியல் வல்லுனர்கள் அவர்கள் எந்தத் துறையில் இருப்பினும் பதவி உயர்வு பெறத் தக்க வாய்ப்பினைப் பெறுவர்.

**கன்னி ராசி:**

உத்திரம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2, — ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியை விட பிற்பகுதியே உதவுகின்ற சூழ்நிலை. அதிலும் மூன்றாவது வாரம் பூராவும் உற்சாகமாகக் காணப்படுகிறது. இந்த மாதம் கன்னி ராசிக்காரர்கள் எண்ணியது நடக்கும். எதிலும் வெற்றி உண்டு. எந்தத் திசையில் இருந்தும் எதிர்பார்த்த நன்மை கிடைக்கும். சுப நிகழ்ச்சிகள் பணவரவு, வீடு மனை வாங்கும் யோகம் அல்லது எதிர்பார்த்ததற்கு மேலான லாபத்தை பங்கு மார்க்கெட்டில் பெறுவது என லாபகரமான சூழ்நிலையே தெரிகிறது. சந்திரன் உச்ச சூரியனுடன் சம்பந்தம் பெறுகின்ற 14, 15, 16 தேதிகளில் விபரீத ராஜ யோகம் ஏற்படும் வாய்ப்பு உண்டு. அரசியல்வாதிகள் வெற்றி வாகை சூடுவார்கள். தசாபுக்தி குறிப்பாக சந்திரன் சனி குருதிசை நடப்பவர்களுக்கு எத்தனித்த எந்த காரியத்திலும் வெற்றி உண்டு. எனவே புதிய முயற்சியில் இறங்கலாம். படத் தயாரிப்பாளர்கள் 28ந் தேதியில் சுதர்சன ஹோமத்துடனோ அல்லது சத்தியநாராயண பூஜையுடனோ தங்கள் முயற்சியை ஆரம்பித்தால் அமோக வெற்றி அடைவார்கள். இது மற்ற துறையினருக்கும் பொருந்தும்.



**சில இடங்களில் தூக்கி எறியக் கூடிய தம்ளரில் காப்பி கொடுப்பார்கள். அதனைத் தூக்கி எறியாமல் வீட்டிற்கு எடுத்து வந்து கழுவி, அதில் சிறிது மரத்தூள் அல்லது மணல் நிரப்பி, பூக்களைச் செருகி வைத்தால் பார்க்க மிகவும் அழகாக இருக்கும்.**

**— வஸந்தி.**

## துலா ராசி:

சித்திரை 3, 4 — ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

மாதம் பூராவும் சூரியனும் புதனும் சற்று உதவுவார்கள். மற்ற கிரகங்கள் குறிப்பாக குருவின் உச்ச நிலை உகந்ததாக இல்லை. 10ல் குரு பதவியை கெடுப்பான் என்பர். இராசி நாதனாகிய சுக்கிரன் எட்டில் இருப்பது நல்லதே. கணவன் மனைவி உறவில் விரிசல் இல்லை. குடும்பத்தில் குழப்பம் இருக்க நியாயமில்லை. மாதத்தின் கடைசி வாரம் சுபநிகழ்ச்சிக்கோ, பணவரவுக்கோ அல்லது விவாக சம்பந்தமான செயலுக்கோ வாய்ப்பினைத் தரும். குறிப்பாக 21 முதல் 27 வரை நல்ல காலகட்டம். அஷ்டமத்துச் சந்திரன் ஆட்சி சுக்கிரனுடன் இருப்பதால் சந்திராஷ்டம நாட்களான 17, 18, 19 கெடுதலைச் செய்யும் நாட்களாக இருக்காது. மாறாக திடீர் யோகத்திற்கு வழிவகுக்கும். வெளியூர்ப் பிரயாணம் ஒன்று எதிர்பாராமல் ஏற்படும். அதனால் பயனும் உண்டு. இந்த ராசிப் பெண்களுக்கு மாதக் கடைசியில் மகிழ்ச்சிகரமான செய்தி ஒன்று வரும். அது திருமண விஷயமாகவும் இருக்கலாம் அல்லது வெளிநாட்டிலிருந்தும் வரலாம். பதவி உயர்வும் ஏற்படலாம்.

## விருச்சிக ராசி:

விசாகம் 4 — ஆம் பாதம், அனுஷம், கேட்டை

மாதத்தின் முதல் ஐந்து நாட்கள் வரை மனதில் விரக்தியும் ஏமாற்றமும் இருக்கலாம். ஆனால் மூன்றாம் இடத்து சனீஸ்வரன் இதுவரை உங்களை அலைக்கழித்து வந்த நிலை மாறி இனி உங்களுக்குத் தேவையான நேரத்தில் தேவையானதைக் கொடுத்து இரட்சிக்க இருக்கிறார். ஒருமுறை திருநள்ளாறு திவ்ய க்ஷேத்திரத்திற்குச் சென்று அவரை அர்ச்சனை மூலம் ஆராதித்து வாருங்களேன். அதன் பிறகு உங்கள் செயல்கள் யாவினும் வெற்றி கிடைக்கும். இந்த மாதத்தில் 19, 20 தேதிகளில் எவ்வித புதுத் தொழிலுக்கும் முயல வேண்டாம். அதன் பிறகு நீங்கள் எதிர்பார்க்கும் எந்த இனத்திலும் வெற்றி உங்களுக்கே. குருவின் பார்வை, சனியின் மூன்றாம் இடத்து நிலை, சுக்கிரனின் பார்வை ஆகிய அனைத்தும் உங்கள் வீட்டில் சுப நிகழ்ச்சிகளை ஏற்படுத்தித் தரும். தட்டிச் சென்ற திருமணமும், பாதிப்படைந்திருந்த பதவி உயர்வும், தொழிலில் ஏற்பட்டிருந்த தேக்கமும் மாறி உங்கள் மனம் மகிழும் என்பது உறுதி. நடிப்புத் துறையினருக்கு அமோகமான வரவேற்பும், புதிய ஒப்பந்தமும் ஏற்படும். அத்துடன் வீடு, மனை வாங்கும் யோகமும் உண்டு.

பேர்ச்சம்பழத்தைக் கூழாகச் செய்து தண்ணீரில் கலந்து தகுந்த அளவு சர்க்கரை போட்டுக் கொதிக்க வையுங்கள். கொதித்து 'ஜாம்' மாதிரி பக்குவமாக வரும் போது வாணலியிலிருந்து இறக்கி ஆற வைத்து பாட்டிலில் போட்டு வைத்துக் கொள்ளுங்கள். ரொட்டியில் தடவிச் சாப்பிட்டால் ருசியாக இருக்கும்.

— கீதா.



## தனுசு ராசி:

மூலம், பூராடம், உத்திராடம் 1 — ஆம் பாதம்.

உங்களுக்கு இம் மாதம் பூராவும் சற்று மனச் சஞ்சலத்துடன் இருக்க வேண்டிய சூழ்நிலை தெரிகிறது. இராசிநாதன் உச்சம் பெற்றுள்ள காரணத்தால் விபரீதம் ஏதும் நிகழ நியாயமில்லை. நான்காம் வாரத்தில் முதல் நான்கு நாட்கள் விபரீத ராஜயோகம் ஏற்படத்தக்க சூழ்நிலையை அஷ்டமத்துக் குருவும் சந்திரனும் உண்டாக்கலாம். அதன் விளைவாக எதிர்பாராத தனலாபம், பதவி லாபம் என ஏதோ ஒருவிதத்தில் லாபம் ஏற்படலாம். எனினும் எதிலும் எச்சரிக்கையுடன் செயல்படுங்கள். ஏமாற்றத்திற்கும் வாய்ப்புண்டு. பிரயாணத்தில் தடங்கல் உண்டாகலாம். சுப நிகழ்ச்சி ஒன்று நிகழ தடை உண்டாக்கலாம். 17ந் தேதியிலிருந்து மூன்று நாட்கள் மனதுக்குகந்த நாட்களாக அமையும். உத்திராட நட்சத்திரக்காரர்கள் சற்றுக் கூடுதலான நன்மை அடையலாம். அரசியலில் ஈடுபட்டவர்கள் அலைக்கழிக்கப்படுவார்கள்.

## மகர ராசி:

உத்திராடம் 2, 3, 4 — ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 — ஆம் பாதங்கள்.

இராசிநாதன் ஆட்சியில் உள்ளார். உச்ச குருவின் பார்வையும் உள்ளது. சுக்கிரனால் சுகமுண்டு. குடும்பத்தில் அமைதியும் உண்டு. மாதத்தின் பிற்பகுதியில் ராகுவால் சற்று அலைக்கழிப்பு ஏற்படும். இரும்பு சம்பந்தமான தொழில்களில் உள்ளவர்கள்

அல்லது அத்தகைய தொழிற்சாலைகளில் பணிபுரிபவர்கள் பதவி உயர்வு பெறலாம். கட்டிடம் கட்டுபவர் நாடகத்துறையினர் கூடுதலான இலாபத்தைப் பெறலாம். உணவு வியாபாரிகள் சிற்றுண்டித் தயாரிப்பாளர்கள், மற்றும் அழகு சாதன விற்பனையாளர்கள் சற்று முன்னேற்றத்தைக் காண்பர். வக்ர புதனால் தேர்வு எழுதும் மாணவர்கள் நன்கு எழுதி நல்ல எண்கள் பெற முடியும். அந்த அளவுக்கு சூரியனும், புதனும் முறையே மாதத்தின் முற்பகுதியிலும், பிற்பகுதியிலும் குருவின் அருளைப் பெறுகிறார்கள்.

### கும்ப ராசி:

அவிட்டம் 3, 4 — ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 — ஆம் பாதங்கள்.

ராசிநாதன் 12ல் ஆட்சி. ஆனால் அது வரை கும்ப ராசிக்கு குருபார்வை இல்லை. எனினும் சனீஸ்வரனுக்கு இருப்பதால் தொல்லைகள் குறைவு. பிற்பகுதியில் ராகு இழந்ததை மீட்டுத் தருகின்ற கோதண்ட ராகு ஆனதால் நீண்டகாலமாக வசூலாகாத கடன் பைசலாகும். கோர்ட் விவகாரத்தில் ஜெயமேற்பட்டு இழந்ததை மீட்பீர்கள். சுகஸ் ஸ்தானத்தில் உள்ள சுக்கிரன் வீட்டு யோகத்தையும் ராகு வாகன யோகத்தையும் அளிக்கிறார். எனவே வீடும் வாங்கலாம். அல்லது இரண்டிலிருந்து நாலு சக்கர வாகனத்தையும் வாங்கலாம். உன்னதமான நிலையும் இல்லை. அதே சமயம் தாழ்ந்த நிலையும் வராது. அன்றாடப் பணிகள் அது குடும்பத்திலும் சரி வெளியிடத்திலும் சரி அதிகப் பிரச்னை ஏதும் இல்லாமல் நடக்கும். எனினும் முடிந்தால் வீட்டில் சனீஸ்வர தீபம் ஒன்றை காலையிலும் மாலையிலும் ஏற்றுவது நல்லது. சனீஸ்வரத் துதியையும் படிப்பது நன்று.

### மீன ராசி:

பூரட்டாதி 4 — ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

உச்சகுரு உங்கள் இராசிநாதன். அவர் உங்கள் இராசியை ஒன்பதாம் பார்வையால் பார்ப்பதால் பலவிதத்திலும் ஆதாயம் ஏற்பட வேண்டும். இதுவரை ஒன்றையும் காணோமே என ஏங்கும் அன்பர்களுக்கு இனி படிப்படியாக லாபம் ஏற்படும். அது வியாபாரத் துறையிலும் இருக்கலாம். அல்லது தொழில் துறையாகவும் இருக்கலாம். நடிப்புத் துறையில் இருப்பவர்களுக்கு நல்ல யோக காலம். லாட்டரி வியாபாரிகள் இதுவரை இலாபத்திற்கு லாட்டரி அடித்து வந்தாலும் இனி உள்ளபடியே லாட்டரியில் இலாபம் பெற வாய்ப்பு உண்டு. வெளிநாட்டுப் பயணம் ஒன்று ஏற்படலாம். அது மாதத்தின் முற்பகுதியில் இராசிநாதனால் ஏற்படலாம். வாகன யோகம் உண்டு. பதவி உயர்வும், பணவரவும் உங்களில் சிலருக்குக் கிடைக்கலாம். நகை வாங்குவீர்கள். அல்லது அடகிலிருந்து மீட்பீர்கள். இது வரை படுத்திவந்த வியாதியிலிருந்து படிப்படியாக விடுபடுவீர்கள். நல்லதொரு கால கட்டம் ஆரம்பம் எனலாம். தசாபுக்தி நன்கு அமைந்தவர்களுக்கு இராஜயோகம் ஏற்படும். 11ல் உள்ள சனீஸ்வரன் பல வகையிலும் நன்மைபுரிய இருக்கிறார்.



'முளை கட்டிய வெந்தயத்தை' வெயிலில் உலர்த்திப் பொடி செய்து வைத்துக் கொண்டால், ஒரு ஸ்பூன் வெந்தயப் பொடியுடன் இளநீர்.. அல்லது மோர் கலந்து காலையில் வெறும் வயிற்றில் பருகிவர உஷ்ண சம்பந்தமான நோய்கள் வராது. மேனி மினுமினுப்படையும்.

— ராஜி ராஜு.

### இவளா என் மகள்?

"எவ்வளவோ கஷ்டங்களை எல்லாம் கூட்டுக் குடும்பத்தில் சமாளித்துப் பொறுமையில் பூமாதேவி எனப் பெயர் எடுத்தேன். அப்படிப்பட்ட என் வயிற்றில் பிறந்துள்ள இந்தப் பெண் இப்படி எடுத்தெறிந்து பேசுகிறதே! எவரையும் லட்சியம் செய்யாமல் இருக்கிறதே! எனக்குத்தான் மதிப்புத் தருவதில்லை அவளது அப்பாவிடமாவது பயம் உள்ளதா என்றால் அதுவும் இல்லை. இவள் எப்படித்தான் என் மகளாகப் பிறந்தாளோ?'' என அங்கலாய்க்கும் தாய்க்குலத்தை இன்று பல குடும்பங்களில் காணலாம்.

பொதுவாக சிம்ம லக்கினம், சிம்ம ராசியில் பிறந்த குழந்தைகள் சற்றும் அடங்காமல் சுதந்திரத்துடன் இருக்க விரும்புவது சகஜமே. ஏன் எனில் இலக்கினேசனும், இராசிநாதனுமாகிய சூரியன் தனது ஒளியாலும் காந்த சக்தியாலும் மற்ற கிரகங்களைத் தன் வயப்படுத்தும் ஆற்றல் மிக்கவர். அவரைச் சுற்றியே அனைத்து கிரகங்களும் செயல்படுகின்றன. எனவேதான் சிம்ம லக்னத்தில் அல்லது சிம்ம இராசியில் பிறந்த குழந்தைகளுக்கு மற்றவர்களை அடக்கி ஆள்வதில் ஆலாதி திருப்தி என்றும்



மாங்காய் தளர் ஊறுகாய் செய்யும் போது அதன் மேல் மிகச் சிறிது வெல்லத் தூளைத் தூவிக் ஊறினால் ஊறுகாய் மிகவும் சுவையாக இருக்கும்.

— வஸந்தி.

மற்றவர்கள் அடங்க வேண்டிய நிலை எனவும் ஜோதிடர்கள் கூறுவர். அது மட்டுமல்ல சிம்ம லக்கினத்தில் பிறந்த ஒருவர் இருந்தால் அவர் வீட்டிற்கு எதிர் வீட்டில் இருப்பவர்களுக்கு பாதிப்பு உண்டு என்றும் கூறுவர்.

அப்படிப்பட்ட சிம்மலக்கின குழந்தையின் நிலையை அதன் கையில் உள்ள ரேகைகளைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். குறிப்பாக புத்திரேகையும் ஆயுள் ரேகையும் (X—Y. L—T) பிரிந்து இடைவெளியுடன் காணப்படும் கைகளை உடையவர்கள் உரிமை வேட்கை கொண்டிருப்பார்கள். அண்மையில் ஒரு பெண்ணின் கைகளில் இத்தகைய ரேகையைக் கண்ட போது அந்தப் பெண் தனது பெற்றோர்களின் அணுகுமுறையையே குறை கூறியதுடன் அவர்களை அன்னியர்களாகவே கருதுவது உணர முடிந்தது. மேற்கண்ட இரு ரேகைகளும் இணைந்து ஒரு புள்ளியில் (O) குரு மேட்டிற்குக் கீழோ ஆரம்பிக்க வேண்டும். அப்படி ஆரம்பித்தால் எவருடனும் இணைந்தோ அல்லது விட்டுக் கொடுத்தோ வாழ முடியும் என்பதை அவ்விரு ரேகைகளின் இணைப்பு காட்டும். அதே சமயம் சிறந்த சுதந்திரத் தியாகிகளுக்கோ, அல்லது உரிமைக்காகப் போராடும் தலைவர்களுக்கோ இப்படி இரு ரேகைகளும் பிரிந்து நிற்காமல் இணைந்தே இருக்கும். ஆனால் குருமேட்டில் ஒரு முக்கோணமும் (T) சூரிய மேட்டில் நக்ஷத்திரக் குறியுடன் கூடிய ஒரு செங்குத்துக்கோடும் (a—b) இருப்பதைக் காணலாம். ஆனால் பிடிவாதமும் முரட்டுத்தனமும் உடைய பெண்ணின் கையில் புத்திரேகை சங்கிலியுடன் காணப்படும். இத்தகைய கைகளில் விதிரேகையினிடையே பல குறுக்குக் கோடுகளும் காணப்படும். இதுபோன்ற குழந்தைகள் பெற்றோருக்கும் அடங்காமல் தனது பிடிவாதத்தால் மற்றவர்களிடம் வெறுப்பும் சம்பாதித்துக் கொள்வார்கள். ஆனால் வெளி உலகில் சாது போலக் காட்சி அளிப்பார்கள். மனோதத்துவ நிபுணரிடம் அப்படிப்பட்ட குழந்தைகளை அழைத்துச் சென்றால் அவர்களே அக் குழந்தையுடன் பேசி விட்டுக் கடைசியில் குழந்தையிடம் குறை இல்லை பெற்றோர்களிடம்தான் குறை என்று கூறுமளவுக்கு புத்திசாலித்தனமாகச் சமாளிக்கும் பண்பு அக் குழந்தைகளிடம் குடிகொண்டிருக்கும். எனவே அப்படிப்பட்ட குழந்தைகள் உள்ள வீட்டில் பெற்றோர்கள் உள்ளக்குமுறல் சதா இருந்து கொண்டே இருக்கும். இதை மாற்ற உள்ளபடியே அப் பெற்றோர்களின் அணுகுமுறையிலும் மாற்றம் ஏற்பட வேண்டும். அடக்கப் பார்த்தால் அதிகமாகுமே தவிர குறையாது அத்துடன் அத்தகைய குழந்தைகளின் குறைபாட்டை மாற்ற மற்றவர்களிடம் குறை கூறுவதை முதலில் நிறுத்த வேண்டும். ஒப்பிட்டுப் பேசுதல் கடுமையாகத் திட்டுதல் போன்றவற்றை விடுத்து அக் குழந்தையின் போக்கிலேயே விடுவதுடன் அதன் எதிர்பார்ப்புகள் குடும்பச் சூழ்நிலைக்கு ஏற்றதல்ல என்பதைக் காலப்போக்கில் குழந்தை உணரும் வண்ணம் நமது செயல் நிலை அமைதல் வேண்டும்.

சோதிட ரீதியாக அத்தகைய குழந்தைகள் திருந்த சண்முகஸ்வரருக்கும், துர்க்கைக்கும் அதன் பெயரில் வாரா வாரம் அர்ச்சனை செய்வது ஓரளவு நலம் தரும். அத்துடன் அக் குழந்தையை உறவினர் அல்லாத வேறு ஊரில் உள்ள நண்பர்களின் இல்லங்களுக்கு அழைத்துச் சென்று அங்கு அக் குழந்தையைப் பற்றி ஒன்றும் இகழாமல் அதனது நற்குணங்களைப் புகழ்ந்து பெருமையாகப் பேசி நல்லதொரு சூழ்நிலையை உருவாக்குதல் சாலச் சிறந்தது. அதை விடுத்து இவளா என் மகள் எனக்குறை கூறி அங்கலாய்க்கக் கூடாது.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்.





# பாணம் திரும்பியது

ஜேநீதலா

''ஜீதா... எனக்குச் சாப்பாடு வைக்காதே.''

''ஏன்?''

''இன்று நான் திரும்பி வர தாமதமாகும். ஸ்வாமிகள் பேட்டி கொடுக்கும் தினம் இன்று. என் முறை வரும் வரை காத்திருந்துதான் வருவேன். ஆகையால் அங்கேயே காண்டீனில் சாப்பிட்டுக்கிறேன்.'' நாத்தனார் சொல்லி விட்டு புறப்பட்டார்.

''இந்த அதிகாலை வேளையில் தனியாக போறாயே அம்மா'' மாமியார் அங்கலாய்த்தார்.

''என்ன செய்யறது? எனக்குக் காரியம் ஆக வேண்டாமா? தம்பிக்கு ஆபீஸ் போகணும். கீதாக்குச் சமையல் செய்யணும். யாரைத் துணைக்குக் கூப்பிடறது? நீ அநாவசிய கவலைப்படாதே. எனக்குப் பழகிய ஊர்தானே இது. நான் போயிட்டு வரேன்'' நாத்தனார் படி இறங்கிச் சென்று விட்டார்.

நாத்தனார் தலை மறைந்ததும் மாமியார் ஆரம்பித்தார்.

''நான்கு நாட்களாக மாதுாருக்கு ஸ்வாமிகளைத் தரிசிக்கப் போறாளே, ஒரு நாளாவது நீயும் வர்றியா அம்மா என்று கேட்டாளா பார்த்தியா? வயசானவா என்றாலே எல்லாருக்கும் நிஷித்தம். எனக்கென்ன ஒருத்தொருத்தர் போல 'சுகர்' வியாதியா? பிரஷரா? சரீரம் கொஞ்சம் ஸ்தூலமாக இருப்பதால் நடப்பது நிதானம்.'' மத்தபடி உடம்பு நன்றாகத்தானே இருக்கேன். கூட்டிண்டு போனால் குறைஞ்சா போயிடுவாள்?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை. இந்த அதிகாலை வேளையில் ஆட்டோ கிடைக்காது. பஸ் ஸ்டாப்பிற்கு ஒரு பர்லாங்க் நடக்கணும். உங்களுக்கு சிரமமாக இருக்கேன்னு கூப்பிடலை.'' நான் நாத்தனாருக்குப் பரிந்துரைத்தேன்.

''நீ சப்பைக் கட்டு கட்டாதே. என்னைக் கூட்டிண்டு போறது அவளுக்கு அசௌகரியம். அதான். நான் இன்னும் கொஞ்சம் தெம்பாக இருந்தால் அம்மா என் கூட துணையாக நீயும் வரயான்னு கூப்பிடுவாள்.''

மாமியார் மனதை மாற்ற முடியாது. நான் மௌனமானேன். மாலை மணி மூன்று —

நாத்தனார் திரும்பி வந்தாள். கழுத்தில் புதிதாக டாலர் பளபளத்தது.

''ஏது? புதுதாக இருக்கே'' என்றேன்.

''ஸ்வாமிகள் பேட்டி முடிந்ததும் கொடுத்தார். ஒன்றும் கவலைப்படாதே. நான் எல்லாம் பார்த்துக்குறேன்'' என்றார்.

''சாப்பிட்டீங்களா?''

''ஆச்சு.''

''அப்ப, காப்பி தரேன்.'' காப்பியைக் கலந்து வந்து தம்ளரை நீட்டினேன்.

''நாளைக்கு ராத்திரி ஊருக்குப் போக வரும்போதே டிக்கெட் வாங்கிண்டு வந்துட்டேன்.''

''ஏன் நாளைக்கே கிளம்பறீங்க? நாளைக்கு, நாளன்னிக்கு உங்க தம்பிக்கு லீவுதானே. இரண்டு நாள் சேர்ந்து இருக்கலாமே'' என்றேன்.

''இல்லை நாளன்னிக்கு மெட்றாஸ்லே சாலை மறியலாம். பஸ் இருக்காது. நாளைக்கே கிளம்பிடறேன். வந்த காரியம் தான் ஆகி விட்டது. நாளைக்கு ஒரு தரம் ஸ்வாமிகளை மறுபடி தரிசனம் செய்துண்டு வந்துடறேன். போதும்.''

''நாளைக்கும் போகப் போறீங்களா?''

''ஆமாம். பேட்டி கிடைத்ததும் வராம நின்னுட்டேன்னு ஸ்வாமிகள் நினைக்கப் படாது பாரு.''

இரவு. படுக்கை அறையில் கணவர் கேட்டார் —

''நாளைக்கு வீட்டில என்ன காரியம் இருக்கு?''

''விசேஷமா எதுவும் இல்லை. உங்க அம்மாக்குப் பிறந்த நாள். கோவிலில் அபிஷேகத்திற்குக் கொடுத்து இருக்கேன். ஆகையால் கோவிலுக்குப் போயிட்டு வர வேண்டும்.''

''அப்ப, நீ அம்மாவை அழைத்துக் கொண்டு கோயிலுக்குப் போய் விட்டு வா. நான் அக்காவோட மாலூருக்குப் போய் ஸ்வாமிகளைத் தரிசனம் செய்து கொண்டு வருகிறேன்.''

''நீங்க போறதானால் அம்மாவையும் கூப்பிடுங்கோ.''

''அம்மாவால முடியாது.''

''முடியுமோ முடியாதோ. அதை அவா சொல்லட்டும். ஏற்கெனவே அக்கா நாலு நாட்களாக மாலூர் போயிட்டு வர்றா தன்னை ஒரு நாள் கூட கூப்பிடலைன்னு புலம்பறா. நீங்களும் நாளைக்குக் கூப்பிடாம போனா, பிறந்த நாளும் அதுவுமா அம்மா மனசு வருத்தப்படுவா.''

''சரி, காலையில பார்த்துக்கலாம்'' என்று திரும்பிப் படுத்துக் கொண்டார்.

காலை விடிந்தது. நாத்தனார் கிளம்புவதற்குத் தயாராக இருந்தார். இவர் எழுந்து வந்து மாமியாரைக் கேட்டார்.

''அம்மா அக்காவுடன் நானும் மாலூர் போகிறேன். நீங்களும் ஸ்வாமிகளைத் தரிசனம் செய்ய வர்றீங்களா?''

''என்னைக் கூட்டிண்டு போறது உங்களுக்குத் தொந்தரவாக இருக்குமே?''

''அதைப் பற்றி என்ன கவலை? உங்களுக்கு வேண்டும் என்றால் கிளம்புங்க'' என்றார்.

''பிறந்த நாளும் அதுவுமாக ஸ்வாமிகள் தரிசனம் செய்ய பாக்கியம் செய்து இருக்கணும். உங்களுக்குச் சிரமம் இல்லையென்றால் வரேன்'' என்று மாமியார் கிளம்பி விட்டார்.

மூவருமாக மாலூர் சென்று திரும்பும் போது மணி இரண்டு. பசி தாகத்துடன் களைத்துப் போயிருந்தார்கள். அதிலும் மாமியாருக்கு முடியவே இல்லை.

சாப்பிட்டு விட்டு எல்லோரும் ஒரு குட்டி தூக்கம் போட்டனர். மாலை மணி நான்கு.

காப்பியைக் கலந்து வந்து தம்ளரை மாமியாரிடம் நீட்டினேன். தம்ளரை வாங்க நீட்டிய கை நடுங்கியது. அவரால் எழுந்து உட்கார முடியலை. உடம்பெல்லாம் நடுங்கத் தொடங்கியது. கம்பளிகள் போர்த்தியும் குளிர் அடங்கவில்லை. ஒருவழியாக காப்பியைக் குடிக்க வைத்து ஒரு 'பாராசிடாமல்' மாத்திரையைப் போட்டுக்க வைத்தோம். பத்து நிமிடங்கள் கழித்து நிதானத்திற்கு வந்தார். மெதுவாக எழுந்து கட்டிலில் உட்கார்ந்தார்.

''எனக்கோ வயசாயிடுத்து. முன்னைப் போல வெளியில வர முடியுமா? சினிமா டிராமாக்கு வர்றியான்னு கூப்பிட்டால் வரலைன்னு சொல்லிடுவேன். ஸ்வாமி தரிசனம் செய்ய வரேளான்னு கூப்பிட்டீங்க. எப்படி வரலைன்னு சொல்ல முடியும்? தப்பாகாதோ!'' மாமியார் பாணத்தை எங்கள் மேலேயே திருப்பினார்.

என் கணவர் என்னைப் பார்த்து முறைத்தார்.



15 — 8 இடைபுள்ளி — மோகனா ஜெயம்.

என்னுடன் பேசிப் பழகுவதாக நினைத்துக் கொண்டு இந்தப் பக்கத்தைப் படியுங்கள்:

பல ஆண்டுகள் நான் அனுபவத்தில் கண்டு அறிந்து கொண்ட சில பயனுள்ள விஷயங்களைச் சொல்கிறேன்:—

○ நவீனப் புத்தகங்களிலிருந்து பெண்கள் பயிலும் உடற்பயிற்சிகளில் மிகவும் பயனுள்ள ஆறு பயிற்சிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். அதில் (1) முதல் இரண்டு நின்று கொண்டு செய்யும் உடற்பயிற்சி. (2) அடுத்த இரண்டு உட்கார்ந்து கொண்டு; அடுத்து (3) படுத்துக் கொண்டு பயில்வது. தினமும் இதைச் செய்யக் குறிப்பிட்ட நேரம் ஒதுக்க வேண்டிய அவசியம் இல்லை. சமையல் செய்யும்போது—உதாரணமாகத் தோசை வார்க்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். கல்லில் மாவை வார்த்து விட்டு 1 வது பயிற்சியையும், மாலையில் டி. வி. பார்க்கும் போது 2 வது பயிற்சிகளையும், இரவில் தூங்கப் போகும் முன் 3 வது பயிற்சிகளையும் தினமும் செய்யுங்கள். இரண்டு மாதத்தில் உங்கள் தோற்றத்தில் புதுப் பொலிவு தெரியும்.

○ வீட்டில் யாருக்காவது ஜுரம் என்று டாக்டர் வீட்டிற்குப் போகிறீர்கள். க்ரோஸின் 10 மாத்திரை வாங்கச் சொல்கிறார் அல்லது தொண்டைப் புண் என்று சொன்னால் ஒரு நாளைக்கு 3 வீதம் 4 நாட்களுக்கு எரித்ரோஸின் வாங்கிப் போடச் சொல்கிறார். அநேகமாக நமக்கு இரண்டு நாளில் பூரண குணமாகி விடுகிறது. டாக்டரிடம் போன் செய்து கேட்டால் மாத்திரையை நிறுத்திவிடச் சொல்கிறார். ஆக 4, 5 மாத்திரைகள் பயன் இல்லாமல் போகவே அலமாரியில் ஒரு மூலையில் போட்டு விடுகிறோம். அது அத்தனையும் பணம். பணத்தை வீணாக்காதீர்கள். ஒவ்வொரு வகை மாத்திரைக்கும் ஒரு தனி கலர் செய்து மாத்திரை பெயர் கொட்டை எழுத்தில் எழுதி வையுங்கள். அடுத்து எப்போதாவது டாக்டர் யாருக்காவது குறிப்பிட்ட மாத்திரையை வாங்கச் சொல்லி எழுதிக் கொடுத்தால் வீட்டிற்கு வந்து முதலில் அந்த மாத்திரைகள் இருக்கின்றனவா என்று பாருங்கள். டாக்டர் 10 வாங்கச் சொல்லி இருக்கிறார். நம்மிடம் 6 உள்ளது. எனவே 4 வாங்கிக் கொண்டால் போதும். இப்படிப் பணத்தை விணடிக்காமல் இருக்கலாம். ஆனால் ஒன்று முக்கியமாகக் கவனிக்கவும். நாம் வைத்து இருக்கும் மாத்திரைகளில் எக்ஸ்பையரி தேதி சரியாக உள்ளதா என்று சரி பார்த்துக் கொள்ளுங்கள்.

○ குளியல் பொடி பக்குவம் ஒன்று சொல்கிறேன்:

பாசிப் பயிறு — 125 கிராம்,
கடலைப் பருப்பு — 125 கிராம்,
கஸ்தூரி மஞ்சள் — 50 கிராம்,
பூலாங்கிழங்கு — 125 கிராம்,
ஆவாரம் பூ, ரோஜா இதழ் — 50 கிராம்,
கசகசா — 25 கிராம்,
துளசி இலை காய்ந்தது — ஒரு கை அளவு,
சந்தனப் பவுடர் — 1 டப்பா,
காய்ந்த எலுமிச்சம்பழத் தோல் — 6.

இதை மருந்துக் கடையில் வாங்கிச் சுத்தம் செய்து கல் இல்லாமல் வீட்டில் இடித்து மிஷினில் அரைக்கலாம். மிக்ஸியில் அரைக்கலாம். கல் திருகலிலும் அரைக்கலாம். இதைச் சோப்பிற்குப் பதிலாகத் தேய்த்துக் குளிக்க வேண்டும். அப்படிக் குளித்தால் ஏற்படும் நன்மைகள்:—

1. நாளடைவில் சருமம் பொலிவாகத் தெரியும்.

2. பருக்கள் வராது., கை, காலில் இருக்கும் அளவுக்கதிகமான உரோமங்கள் உதிர்ந்துவிடும்.

3. கரப்பான், சிரங்கு முதலியவை மறைந்து விடும்.

4. இரவில் தேய்த்துக் குளித்து விட்டுப் படுத்தால் கொசு கடிக்காது. நறுமணம் நல்ல தூக்கத்தைக் கொடுக்கும்.



# ரெஜினா பக்கம்



# வருவாயைப் பெருக்கிக் கொள்ள...

இப்போது எல்லோருக்குமே சேமிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டு இருக்கிறது. தன்னுடைய சிறு சேமிப்பினை எதில் போட்டால் லாபம், இன்ன வருமானம் உள்ளவர்கள் இப்படிச் சேர்க்கலாம் எனப் பட்டியலிட்டுக் கூறலாமே என ஆர்வமேற்பட்டது.

இந்த யோசனையைக் கேட்டவுடன், 'இப்படி எண்ணுவதே அடிப்படையில் தவறு' என்கிறார் ஒருவர். அவர் கூறும் யோசனையும் சிந்திக்கத் தக்கதே —

''ஐந்து அல்லது பத்து வருடங்கள் கழித்து எந்தப் பொருளை வாங்க வேண்டும், நமது இலட்சியம் என்ன என்று ஒரு இலக்கினை வைத்துக் கொள்வதை நாம் சேமிக்கத் துவங்கும் போது மறந்து விடுகிறோம். இதுதான் நாம் செய்யும் பெரிய தவறு'' என்கிறார் 'மெட்ரோ கன்ஸல்டன்சி சர்வீசின் ஆலோசகர் திரு. டி. என். ஷெனாய்.

''நாம் வாங்க விரும்பும் பொருள் இன்று இருக்கும் விலையை மனதில் கொண்டு சேமிக்கத் துவங்குகிறோம். ஆனால் ஐந்து வருடங்களுக்குப் பிறகு பண வீக்கத்தின் காரணமாக அப் பொருளின் விலை இரண்டு மடங்கோ அதற்கு மேலோ எகிறி விடுகிறது. கஷ்டப்பட்டு சேமித்த பணம் போதாமல் நமக்கு ஏமாற்றமே மேலிடுகிறது. இதைத் தவிர்ப்பதற்கு ஒரே வழி பின்னால் எதற்காவது உதவட்டுமே என்று வங்கிகளிலோ மற்ற சேமிப்புத் திட்டங்களிலோ போட்டு வைக்காமல் பிற்காலத்தில் எதற்காக இப் பணத்தைச் செலவழிக்கப் போகிறோம் — குழந்தைகளின் மேற்படிப்பிற்கா, வீடு வாங்குவதற்கா? வயதான காலத்தில் நிலையான வருமானமென்றால் மாதம் எவ்வளவு — என்றெல்லாம் தெளிவாக மனதில் திட்டமிட்டு விட்டு அந்தக் குறிக்கோளை அடையக் குறிப்பிட்ட தொகையைச் சேமிக்கத் துவங்குவதுதான் புத்திசாலித்தனம்.

சராசரியாகப் பொருட்களின் விலை ஆண்டொன்றுக்குப் பண வீக்கத்தின் காரணமாக 11.6% ஏறுகிறது என்று புள்ளி விவரங்கள் கூறுகின்றன. ஆனால் இது எல்லாப் பொருட்களுக்கும் பொருந்துவதில்லை. அதுதான் பார்க்கிறோமே. வளைகுடாவில் போர் என்றால் நம் நாட்டில் வாழைக்காய் விலை 50% அல்லவா ஏறுகிறது? இதை மனத்தில் கொண்டு நாம் ஒரு வீட்டை வாங்கத் தீர்மானித்தோமானால் ஐந்து வருடங்களுக்குப் பிறகு அதன் விலை எவ்வளவு ஏறலாம் என்று தோராயமாக மதிப்பிட்டு விட்டுப் பின்பு எந்தச் சேமிப்புத் திட்டத்தைப் பின்பற்றலாம் என்று திட்டமிட வேண்டும். ''பொதுவாக வங்கிகளின் வட்டி விகிதம் 12%க்கு மேல் இருப்பதில்லை. விலை ஏற்றம் அதற்கு மேலாக இருக்கும் போது இந்தவிதச் சேமிப்பால் என்ன லாபம்?

''என்னைப் பொறுத்தவரை வியாபாரம், வீட்டு மனையில் முதலீடு, பங்கு மார்க்கெட்டில் இறங்குவது இவைதான் வருவாயைப் பெருக்கிக் கொள்ளும் வழிகள்'' என்கிறார் ஷெனாய்.

ஆனால் இவற்றிலிருந்து கண்டிப்பாக ஆதாயம்தான் வரும் என்பது நிச்சயமா? வங்கிகள் என்றால் போட்ட பணமாவது திரும்ப வரும் என்பது உறுதி. ஆனால் இவற்றிலோ நஷ்டமும் ஏற்படலாமே.

"Higher the safety, lower the return" என்று 'பட்'டென்று பதில் வருகிறது.

''தனியார் கம்பெனிகள் மற்றும் பங்கு மார்க்கெட்டில் முதலீடு என்பது கம்ப சித்திரமல்ல. சில அடிப்படை நெளிவு சுளிவுகளைப் புரிந்து கொண்டால் வருவாயைப் பெருக்கிக் கொள்வது மிகச் சுலபம். பொதுவாகத் தனியார் நிறுவனங்களின் ஃபிக்ஸெட் டெபாஸிட் செய்தால் 14% அல்லது அதற்கு மேல் வட்டி கிடைக்கும். இப்படிப்பட்ட நிறுவனங்களைத் தேர்ந்

தெடுக்கும் போது கவனிக்க வேண்டிய விஷயங்கள் :

1. அக்கம்பெனி RBI கோட்பாடுகளுக்கு உட்பட்டு இயங்குகிறதா என்று கவனியுங்கள். கம்பெனியின் பெயரில் 'லிமிடெட்' என்ற சொல் சேர்க்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள்.

2. அந்த நிறுவனம் தரும் விளம்பரங்களிலும், ஃபிக்ஸெட் டெபாஸிட் விண்ணப்ப பாரத்திலும் நிறுவனங்களின் இயக்குனர்கள் பற்றிய விவரங்கள், கடந்த இரண்டு, மூன்று வருடங்களாக அந் நிறுவனம் அளித்து வரும் வட்டி விகிதம் போன்ற முழு விவரங்கள் இருக்கிறதா என்று பாருங்கள்.

3. எந்த நிறுவனமும் cumulative deposit அல்லாத வகையில் 14%க்கு மேல் வட்டி அளிப்பதில்லை. 19%, 20% என்றெல்லாம் ஆசை காட்டினால் உஷார். (சில வருடங்களுக்கு முன் சீட்டுக் கம்பெனி ஒன்று இப்படி அதிக வட்டி அளிப்பதாக முன் வந்ததும், அதை நம்பிப் பலர் ஏமாந்ததும் நினைவிருக்கிறதா?

4. முதலீடு செய்திருக்கும் நிறுவனம் பற்றிய செய்திகளை உன்னிப்பாகக் கவனியுங்கள். தலைமையில் மாற்றம், தொழிலாளர் பூசல், தயாரிப்புக்கு வரவேற்பின்மை போன்ற ஏதாவது காரணம் நிறுவனத்தின் நஷ்டத்துக்கு அடிகோலும் போலிருந்தால் உடனே முதலீட்டை எடுத்து விடலாமே.''

''இதே போலத்தான் பங்கு மார்க்கெட். பங்கு மார்க்கெட் என்றால், ஏதோ இலட்சாதிபதிகளின் தொழில் என்று நினைக்கிறார்கள். ரூ. 1000 போன்ற சிறிய மூலதனத்துடன் கூட இதில் இறங்கலாம் என்பதைப் பலர் அறிவதில்லை. குஜராத்தில் நான் பார்த்திருக்கிறேன் — டாக்ஸி டிரைவர்கள் முதல் அலுவலகப் பியூன்கள் வரை ஆர்வத்துடன் இதில் ஈடுபடுகிறார்கள். நிறுவன நிலவரங்கள், மார்க்கெட் ஏற்ற இறக்கங்கள், வெளியுலகப் பாதிப்புகள் போன்றவற்றை நுணுக்கமாக ஆராய்கிறார்கள். ஒருவரோடொருவர் விவாதித்துக் கொள்கிறார்கள். இப்போது கேரளத்திலும் இந்த ஆர்வம் பரவி வருகிறது. அந்த மாநிலப் பத்திரிகைகளும் நிறுவனங்களின் தொழில் நிலை பற்றிய செய்திகளைப் பிரசுரித்துத் தூண்டுகோலாக உதவுகின்றன.

தொழில் துறை பற்றிய செய்திகளை ஊன்றிப் படித்து எந்த நிறுவனங்கள், முன்னணியில் இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்வது, சென்னை ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் நூலகத்தில் உள்ள டைரக்டரியில் உள்ள குறிப்புகளைப் படித்து விவரங்களை அறிந்து கொள்வது, இந்த நுணுக்கங்கள் தெரிந்தவர்களோடு விவாதித்துப் பயன் பெறுவது — போன்றவைதான் பங்கு மார்க்கெட்டில் இறங்குவதற்கு அடிப்படை. முழு ஈடுபாடு இருந்தால் தானாகவே நாட்கள் செல்லச் செல்ல மார்க்கெட்டின் ஏற்ற இறக்கம் புரிய ஆரம்பிக்கும்.

நகரில் எங்கு பார்த்தாலும் புதுக் கட்டிடங்கள் முளைக்கின்றனவா? சிமெண்டுக்கு நல்ல 'டிமாண்ட்' இருக்குமே. சிமெண்ட் தயாரிப்பு நிறுவனங்கள் நல்ல இலாபகரமாக இயங்குமே — பெட்ரோல் தட்டுப்பாடா — ஸ்கூட்டர், மோபெட் தயாரிக்கும் நிறுவனங்களின் நிலை சற்று இறங்கு முகமாக இருக்குமே... இப்படிக் கண்டு கொண்டு இல்லத்தரசிகள் சர்வ சாதாரணமாக ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கலாம்'' என்கிறார் ஷெனாய்.

— நிர்மலா சக்கரவர்த்தி.





# தேடினேன்... தினம் தேடினேன்...

நேற்று எங்கள் வீட்டில் நடந்தது. கப்போர்ட் வாயில் சாவி இல்லை. வழக்கமாகப் பூட்டி சாவியைப் பத்திரமாக வைக்கும் எல்லா இடங்களிலும் தேடியாகி விட்டது. டேபிள் ட்ராயரில், படுக்கை அடியில், சாமி பிறைக்குள்.... எங்குமில்லை. இரண்டு மணி நேரம் தேடியதுதான் மிச்சம். யார் கடைசியாகப் பீரோ திறந்தது என்ற புலன் விசாரணை தொடங்கி நானில்லை என்று ஒருவர் ஒருவராக நழுவியதில் முடிந்தது. அன்று முழுவதும் மூடே இல்லை. இரவு பீரோக்குள் வைக்க வேண்டிய துவைத்த புடைவைகளை மடித்து ஹேங்கர்களில் மாட்டி.... கப்போர்ட் ஹேண்டிலில் மாட்ட முயற்சிக்கும் போது, ஹேண்டில் 'படக்'கென்று திரும்ப ''அட.... கப்போர்ட் திறந்துதான் இருக்கிறது....'' திறந்து பார்த்தால் உள்ளே அலமாரியில் சாதுவாய் உட்கார்ந்திருந்தது சாவி. நிம்மதி கலந்த சிரிப்புடன் நிகழ்ச்சி முடிந்துவிட்டது.

சிந்திக்கத் தூண்டவில்லையா?

தேடுதல். பொருட்களைக் கண்ட இடத்தில் வைத்துவிட்டு தேடுதல். வைத்த இடத்தை மறந்துவிட்டுத் தேடுதல். இது நம் தினசரி வாழ்க்கையின் முக்கிய வேலையாகி விட்டது.

வீட்டுத் தலைவரிலிருந்து ஆரம்பிப்போமா? வாட்சை கழட்டி எங்காவது வைத்து விட்டு, ''இங்கேதான் வைத்தேன்

....கால் முளைத்தா போய்விட்டது..'' என்றவாறு காலை நேர அவசரத்தில் சிவதாண்டவம் ஆடிவிட்டு, அதே வாட்ச் வேறு இடத்தில் கிடைக்கும் பொழுது அசடு வழியும் மனிதர் இவர். முக்கியமான ஆஃபீஸ் பேப்பரைக் காணவில்லை என்று தலையைப் பிய்த்துக் கொண்டு, அது நேற்று படித்த நியூஸ் பேப்பர் நடுவில் கிடைக்க, நிம்மதிப் பெருமூச்சு விடுபவர்.

மனைவி குக்கர் சப்தத்தின் பின்னணியில், கல்லிலிருந்து எடுபடாத தோசையுடன் போராடிக் கொண்டிருக்கையில், அவள் அக்கறையுடன் எடுத்து வைத்திருக்கும் பனியன் ஜட்டியைக் கவனிக்காமல், அலமாரிக்குள், கொடி மேலே அவைகளைத் தேடியபின், தொண்டை வரள கத்தி மனைவியை உதவிக்கு அழைப்பவர். டெலிபோன் பக்கத்தில் வழக்கமாக இருக்கும் பேப்பர் பேட், பென்சில் அங்கே இருப்பதில்லை என்று போன் பேசுகையில் மறு பக்கம் உள்ளவர் காதுபட கத்துவார். மறு நாள் அந்த பேடும் பென்சிலும் அவர் ப்ரீஃப்கேஸில் அகப்படுவது நிச்சயம்.

இவர்தான் இப்படி என்றால் இவர் பெற்ற செல்வங்கள் அதுக்கும் மேலே.

பிள்ளைகள் படிப்பதும், பள்ளிக்குச் செல்வதும், மற்ற (பாட்டு, வயலின், டான்ஸ்) வகுப்புகளுக்குச் செல்வதும், அம்மாவுக்குச் செய்யும் உபகாரம் என்பது அவர்கள் நினைப்பு.

டைம்டேபின் அடுக்குகையில்,கெமிஸ்ட்ரி புக் காணவில்லையென்று வீடு முழுக்கப் பரபரக்கத் தேடிவிட்டுக் கத்தியபின், அதைப் போனவாரம் டீச்சரிடம் கரெக் ஷனுக்குக் கொடுத்திருப்பது சாவகாசமாக ஞாபகம் வரும். ஸ்கூல் யூனிபார்மை அம்மா இஸ்திரி செய்து எடுத்து வைத்தாலும் அதன் கூட இருக்கும் பேட்ஜ், பெல்ட், டை இவற்றைக் காணவில்லை என்று புலம்பி விட்டு, தேடுவார்கள். பொதுவாக புஸ்தக அலமாரி என்னும் காட்டுப் புதருக்குள் இவை கிடைப்பது நிச்சயம். தலைகால் புரியாத இந்த ஷெல்ப்புக்குள் இருந்து தினசரி தேவையானவற்றை எப்படிதான் தேடி எடுக்கிறார்களோ? அரைமணி தினம் தேடுவார்கள். ஆனால் அலமாரியை அடுக்கி வைக்க மாட்டார்கள். பொதுவாக பெற்றோர் இவர்களுக்குக் கதவு போட்ட அலமாரி செய்து தருவது இதற்காகத்தான். கன்றாவி கண்ணில் படாமல் இருக்கட்டும்.

ஷூவுக்குள் நேற்றைய ஸாக்ஸை தோய்க்கப்போடாமல் வைத்துவிட்டு அலமாரியில் அவைகளைத் தேடி, ஒழுங்காக இருப்பதைக் கலைப்பது தினப்படி வேலை.

அம்மா ஆகப்பட்டவள் தான் மறந்து வைக்கும் பொருட்களையும், மற்றவர் மறந்து வைக்கும் பொருட்களையும் தேடப் பிறந்த ஜன்மம். வாழ்நாளில் பாதி இதுக்கே சரியாகிவிடும்.

தேடல்கள் விதம் விதமானவை.

ரேஷன் கார்ட், பால் கார்ட், இவற்றை இடம் மாறி வைத்து விட்டு தேடுதல்.

புடைவையைத் தேர்ந்து எடுத்து வைத்து விட்டு அதற்கேற்ற ப்ளவுஸ் தேடுதல். பல நேரங்களில் கலைந்திருக்கும் அலமாரியில் வேண்டுகின்றதை கண்டே பிடிக்க முடியாது. ஆரஞ்சு ப்ளவுஸ் தேடும் போது அதைத் தவிர எல்லாம் கிடைக்கும்... போன வாரம் தேடிய பூப்போட்ட ஸ்கார்ப், தம்பி குழந்தைக்குத் தர வேண்டும் என்று போன மாதம் தேடிக் களைத்த உல்லன் ஸாக்ஸ்... ஆரஞ்சு ப்ளவுஸ் மட்டும் கிடைக்காது. அடுத்த தடவை கைக்குட்டை தேடும் போது தான் கிடைக்கும். இது என்ன மர்மம்?

கணவன் கல்கத்தாவிலிருந்து ஆசையுடன்



வாங்கி வந்த அருமையான லெதர் ஹேண்ட் பேக்.... பார்ட்டிக்குப் புறப்படும் போது எங்கே வைத்திருக்கிறேன்?.... ஞாபகம் வராது. ரொம்பவும் தேடினால்..... முன்னாடியே எடுத்து வைக்க வேண்டியது தானே என்று கத்துவார். வழக்கமாக உபயோகிக்கும் பதினைந்து ரூபாய் பர்ஸை எடுத்துக் கொண்டு, வீட்டைப் பூட்டி கிளம்பி தெருமுனை அடையும் பொழுது 'பளிச்' சென்று ஞாபகம் வரும்.

---

**போளிக்குப் பூரணம் செய்யும் போது, வெல்லம், வேக வைத்த கடலைப் பருப்பு, தேங்காய்த் துருவல், ஏலக்காய் எல்லாவற்றையும் ஒன்றாக அரைத்து, அடுப்பில் வைத்து வாணலியில் கிளறவும். (வெல்லம் உருகி விடுமே என்ற பயம் வேண்டாம்) தொட்டால் கையில் ஒட்டாத பதம் வந்ததும் இறக்கிப் போளி செய்யுங்கள். சுவை கூடுவதுடன் நான்கு நாட்கள் வரை கெடாமல் இருக்கும்**

— ஜீவெம்.



சமையலறைத் தேடல்களும் உண்டு. ஒண்ணுக்கு இரண்டாக இருக்கட்டும் (அதான் எவ்வளவு வாங்கினாலும் வேண்டியிருக்கே) என்று மாத ஆரம்பத்தில் வாங்கி வைத்த எல்.ஜி.. காயம் ... எந்த டப்பாவில் வைத்தேன் என்று தேடுதல். போன வருடம் மாமியார் காய வைத்துத் தந்திருந்த வேப்பம்பூவைப் பத்திரமாக ப்ளாஸ்டிக் கவரில் ஸ்டேபிள் செய்து எங்கே வைத்தேன் என்று ஞாபகம் வராத தேடல். ப்ரிட்ஜில் போன வாரம் வாங்கிய பொக்கிஷமான ஐம்பது கிராம் முந்திரிப்பருப்பை ...அடுப்பில் வாணலியில் அரை முட்டை நெய் கருகிக் கொண்டிருக்கும் போது... தேடுவாள். அது அங்கே இருந்தால்தானே? அதைத்தான் அப்பாவும் பெண்ணும் சனிக்கிழமையன்று, அம்மா மார்க்கெட் சென்றிருந்தபோது, தின்று விட்டிருந்தார்களே!

இந்தத் தினப்படித் தேடல்கள் தவிர ஸ்பெஷல் தேடல்களும் உண்டு. ஆபீஸ் வேலையாக லண்டன் செல்ல வேண்டும். பாஸ்போர்ட்டைத் தேடினால் கிடைக்கவில்லை. கோபத்தில் கணவன் வாயிலிருக்கும் பற்களை முழுவதும் கடித்துத் துப்புவதற்குள்... தேட வேண்டிய பரிதாப நிலை.

எட்டு வருஷம் முன்பு புக் பண்ணிய டெலிபோன் ரிஜிஸ்ட்ரேஷன் நம்பர் அடங்கிய சாணகல பழுப்புக் காகிதம்; அஞ்சு ரூபாயில் தொடங்கி மேலும் முப்பது ரூபாய் சேர்த்திருந்த பெண்ணின் ''ஸ்டூடண்ட்ஸ் ஸேவிங்க்ஸ் பேங்க்'' பாஸ்புக்; முந்தாநாள் ப்ரெண்டிடம் எக்ஸ்சேஞ்ச் செய்து 'இங்கேதான்' வைத்திருந்த பையனின் போர்ச்சுகல் ஸ்டாம்ப். அது கிடைக்கும் வரை புழுவாகத் துடிப்பான். (இந்த அக்கறைல பாதி படிப்பிலே இல்லே!) ''எங்கிட்ட 'விமல் கூப்பன்'

காத்திருக்க வேண்டாம். கஷ்டப்பட வேண்டாம். பிதுக்குங்கள்,
லேசாக ப்ரஷ் பிறகு ப்ளஷ்.

# புதிய ப்ளஷ் அப்

இன்ஸ்டண்ட் லிக்விட் டாய்லெட் க்ளீனர்.

புதிய ப்ளஷ் அப் இன்ஸ்டண்ட் லிக்விட் டாய்லெட் க்ளீனர் மிக வேகமாக செயல்படும் லிக்விட் க்ளீனர். இது டாய்லெட்டை பளபளப்பாகவும், சுகாதாரமாகவும், சுத்தமாகவும் வைத்திருக்கும்.



ப்ளஷ் அப் ஒரு கரும் நீல வேகமாக செயல்படும் கெட்டியான திரவம். இதன் இனிமையான நறுமணம் எந்தச் சமயமும் டாய்லெட்டை சுத்தமாகவும் மணமாகவும் வைத்திருக்கும்.



ப்ளஷ் அப்பை உபயோகிப்பதும் வெகு எளிது. நீங்கள் அழுந்த தேய்க்கவோ, ப்ரஷ் உபயோகிக்கவோ, இரவு முழுதும் விட்டு வைக்கவோ வேண்டிய அவசியமில்லை. ப்ளஷ் அப்பின் திரவத்தை டாய்லெட்டின் விளிம்புகளில் சுற்றி வர விட வேண்டும். பிறகு லேசாக ப்ரஷ் செய்தால் சுத்தமான டாய்லெட் தயார்.



ப்ளஷ் அப்பின் தனிப்பட்ட 90° கோணமுள்ள விசேஷமான மூடி உபயோகிக்க எளிதாக இருக்கும். இனி உங்கள் கை டாய்லெட்டில் படும் என்ற கவலையே வேண்டாம்.

உம். இனி தாமதம் ஏன், முந்துங்கள் உங்கள் ப்ளஷ் அப் பாட்டிலை இன்றே வாங்குங்கள். இனி உங்கள் டாய்லெட்டை சுத்தம் செய்ய நவீனமான வழியை கையாளுங்கள்— பிதுக்குங்கள். லேசாக ப்ரஷ் பிறகு ப்ளஷ்.

இது மற்ற க்ளீனர்களைவிட மலிவானது கூட.






Orbit/WL/1428-90-TAM

விநியோகஸ்தர்கள்: முல்லர் அண்ட் பிப்ஸ் (இண்டியா) லிமிடெட்
பம்பாய் 400 001.

தயாரிப்பவர்கள்: வால்ஸன்ஸ் லெபாரட்டரீஸ்

**ப்ளஷ் அப்** ஆஹா! டாய்லெட் சுத்தம் செய்வது இவ்வளவு சுலபமானதா!

இருக்கு. நீங்க வேணா எடுத்துக்கோங்க'' என்று ஜம்பமாய் அடுத்த வீட்டு அம்மாளிடம் சொல்லியாகிவிட்டது. அவர்கள் கிளம்பித் தயாராகி வந்து கேட்கும் போது கூப்பன் கிடைத்தால்தானே.... அசடு வழியத் தேட வேண்டும்.

இப்படி எல்லாவற்றையும் தேடித்தரும் அம்மாவுக்கு ''தேடல் திலகம்'' என்ற பட்டம் தராலாமா? எங்கே தேடுவது என்பது அவளுக்கே கை வந்த கலை. எங்கே இருக்கக் கூடும் என்று கணிப்பதில் 'ஷெர்லாக் ஹோம்ஸ்'.

சாதாரண பொருளாக இருந்தால் வெறும் டென்ஷன் மட்டும்தான். முக்கியமான பொருளாக இருந்தால் கூட பிள்ளையாரை உதவிக்கு அழைப்பாள் (தேங்காய் உடைக்கிறேன்) மனிதர்கள் மறந்து வைப்பதைத் தெய்வம் வந்து தேட வேண்டும்.

நம் வாழ்வின் அருமையான பல மணி நேரங்களை முழுங்கிவிடும் தேவையற்ற தேடலை எப்படித் தவிர்ப்பது?

முதலில் எதையுமே எடுத்த இடத்தில் வைக்கப் பழக வேண்டும். முதலில் கஷ்டமாக இருக்கும். ஆனால் போகப் போக பழகிவிடும். அப்புறம் அறியாமல் கூட தவறு நேராது.

சிறு குழந்தைகளையும் பழக்க வேண்டும். விளையாடும் போது அவர்கள் பரப்பும் பொம்மைக் கடையை அவர்களைக் கொண்டே உரிய இடத்தில் அடுக்கச் செய்யும். படிக்கும் பிள்ளைகள் தம் பொருட்களைப் பாதுகாப்பாக வைக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ஏதாவது காணவில்லை என்று அவசரமாகத் தேடுகிறார்களா?.... தேடட்டும். உடனே உதவிக்கு ஓடாதீர்கள். அம்மா என்ற அன்பு மயமானவள், பல்லைக் கடித்துக் கொண்டு தன் வேலையைப் பார்த்துக் கொண்டு நின்றால், நாளடைவில் அவர்களின் தேடல் பழக்கம் குறையும். ஏதாவது முக்கியமானது தொலைந்து விட்டால்.... தேடித் தரலாம். ஆனால் வாடிக்கையாக்கி விடாதீர்கள்.




## புதியவை அறிமுகம்

சுவையான சமையலை எளிதாக்கும் மாகி, மீண்டும் ஒரு சுவையை அறிமுகப்படுத்தி இருக்கிறது. அது — எலுமிச்சை மசாலா க்யூப்ஸ். இதையும் மற்ற மாகி நூடுல்ஸ் போலவே உபயோகிக்கலாமாம்.

உங்களுக்கென்று சிறிது நேரம் ஒதுக்கி உங்கள் உடமைகள், புடைவை, ரவிக்கை முதலியனவற்றைப் புரியும்படி அடுக்கி வையுங்கள். சமையல் அறையிலும் பொருட்களை நிதானமாகக் கையாண்டு எடுத்த இடத்தில் வைக்கப் பழகுங்கள். உபரியான பொருட்களை ஒன்று அல்லது இரண்டு பெரிய டப்பாக்களில் சேர்த்துப் போட்டு வைத்தால் தேட வேண்டாமே!

பொருட்களை அவைக்குரிய இடத்தில் வைக்க தேவைப்படும் நேரம், தேடுவதற்கு எடுக்கும் நேரத்தை விட மிகக் குறைவுதான். தேடித் தேடி இளைக்காதீர்கள்.

— பானுகுமார்



கூட்டு, குழம்பு இவைகளுக்கு அரிசி மாவைக் கரைத்து விடுவதற்குப்பதில், பொட்டுக்கடலை மாவை விடலாம். ருசியும் கூடும். சீக்கிரம் ஊசியும் போகாது.

— பார்வதி.

உங்கள் உணவில் பசலைக் கீரைக்கும் பங்கிருந்தால், உங்கள் உடல் தொத்து வியாதிகளிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் பலத்தைப் பெறும். இரும்புச் சத்து உள்ளதால் இரத்த சோகை உடையவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம். வைட்டமின், கால்சியம், ஹீமோகுளோபின், புரதப் பொருள் சம்பந்தமான அமினோ திரவங்களும் இதில் அடங்கியுள்ளன.

— ஹிலெம்.



# திருமணமலர்

## மணமகள் தேவை

* மணமகன் வயது 29, வெளி நாட்டில் சிறந்த அரசாங்க உத்தியோகம், ரூ. 40,000, கிராமணி அல்லது இந்து நாடார் வகுப்பைச் சேர்ந்த 20—25 வயதுக்குட்பட்ட, படித்த, உயரமான, அழகான பெண் தேவை. நல்ல குடும்பத்தில் பிறந்த வேறு வகுப்பைச் சேர்ந்த பெண்ணும் சம்மதம். பெட்டி எண்: 10001.

* Wanted fair good looking employed/unemployed girl from respectable family for Hindu boy 27/5'4"/2000 Central employee of propertied well settled family. Any caste can apply Box No.10002

* இந்து வன்னிய குல க்ஷத்திரியர், வயது 29, எம். எஸ்ஸி., பி.ஹெச்டி. பட்டம் பெற்று அமெரிக்காவில் பணியாற்றும் 5'4" உயரமுடைய சிவந்த, அழகிய மணமகனுக்கு/(ஆயில்யம் 4 ஆம் பாதம்), எம். எஸ்ஸி., எம். பி. பி. எஸ்., பி. ஈ. படித்த, அழகுள்ள, குடும்பப்பாங்கான, அமெரிக்காவுக்குச் செல்லச்சம்மதமுள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 10003.

* விஸ்வாமித்ர கோத்திரம், வயது 30, தமிழ்நாடு அரசு பணியில் இருக்கும் தெலுங்கு கர்ண கம்மவார், மாத வருமானம் ரூ. 2500/- உள்ள வரனுக்கு 23 லிருந்து 28 வயதுக்குட்பட்ட மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 10004.

* சைவ பிள்ளை, வயது 23, 5'9" உயரம், ரூ. 6000/- மாத வருமானம், சொந்தமான மாவு மில்லும், ஆட்டோமொபைல் ஒர்க் ஷாப்பும் உள்ள பையனுக்குக் குடும்பப்பாங்கான இதே இனத்தைச் சேர்ந்த பெண் தேவை. பெட்டி எண்: 10005.

* துளுவ வேளாளர், ஆற்காடு முதலியார், 29 வயது, 5'8" உயரம், பி. எஸ்ஸி., பி. ஜி. டிப்ளமா பெற்ற, புகழ் வாய்ந்த வேலூர் ஆஸ்பத்திரியில் பணி, ரூ. 2150/- பண்புள்ள குடும்பம், நல்ல தோற்றம், குணமுள்ள மணமகனுக்குத் தகுந்த மணமகள் தேவை. வேலையில் உள்ளவர், இல்லாதவர் என்ற பேதமில்லை. பெட்டி எண்: 10006.

* அய்யர், பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், மகம், 31/5'6"/1200/- பி. ஏ. படித்துள்ள, கோவையில் தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் வசதியான குடும்பத்தைச் சேர்ந்த பையனுக்கு லட்சணமுள்ள, படித்த, குடும்பப்பாங்கான, பெண் தேவை. ஜாதகத்துடன் குடும்ப விவரங்களுடன் எழுதவும். பையனுடையது சுத்த ஜாதகம். பெட்டி எண்: 10007.

* ஸ்ரீவத்ஸம், பிரஹசரணம், ரேவதி 27/5'7" R.E.C. திருச்சி பி. ஈ., கனடாவில் சாஃப்ட் வேர் எஞ்சினியராக உயர்ந்த வருமானமும் சுத்தமான பழக்க வழக்கங்களும் உள்ள வரனுக்கு நல்ல சிவப்புள்ள 23 வயதுக்குட்பட்ட, 5'3" மேல் உயரமான, அழகான, ஒல்லியான, பிராமணப் பட்டதாரி மணமகள் தேவை. பெட்டி எண்: 10008.

* ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத்திரம், பி. ஏ./33/157 செ.மீ. பெற்றோருக்குக் கடைசிப் பிள்ளை, தாய் தந்தை இல்லை. சொந்த வியாபாரத் மாதம் ரூ. 3000/- நிரந்தர வருமானம் உள்ள இவருக்கு நல்ல வேலை பார்க்கும் அல்லது சுயதொழில் செய்யும் மணமகள் தேவை. ஐயர்/ஐயங்கார் மற்றும் பிராமணர்களின் எந்த உட்பிரிவும் சம்மதம். பெட்டி எண்: 10009.

* வடமாள், கௌண்டின்ய கோத்திரம், உத்திரம் நட்சத்திரம், +2, ஆறடி உயரம், லிமிடெட் கம்பெனியில் ரூ. 1500/- மாத வருமானம் பெறும் முப்பது வயது ஐயர் பையனுக்கு, சென்னையில் வேலை பார்க்கும் குறைந்தது 5'3" உயரமுள்ள பொருத்தமான மணமகள் தேவை. பெட்டி எண்: 10010.

* சோழிய வெள்ளாளர் இனத்தைச் சேர்ந்த, 30 வயது உடைய, மத்திய அரசு அலுவலகத்தில் பணிபுரியும் மாதம் ரூ. 2300/- வருவாய் பெறும் மணமகனுக்கு அழகிய, குணமுள்ள, நல்ல குடும்பப்பாங்கான, பெண் தேவை. ஜாதகம், மற்றும் குடும்ப, படிப்பு, விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 10011.

* தமிழ் வண்ணார வகுப்பைச் சேர்ந்த பாங்கில் வேலை பார்க்கும் 30 வயது மணமகனுக்கு, அதே இனத்தைச் சார்ந்த பட்டதாரி, வேலையில் உள்ள/இல்லாத மணமகள் தேவை. பெட்டி எண்: 10012.

* இந்து, சோழிய வெள்ளாளர் வகுப்பைச் சேர்ந்த 30 வயதுடைய அரசுப் பணியில் மாதச் சம்பளம் ரூ. 1500/- பெறும் ஒரே பையனான மணமகனுக்கு, இதே இனத்தில் உள்ள அழகு, குணமுள்ள பெண் தேவை. பெட்டி எண்: 10013.

* தெலுங்கு நியோகி பராசர கோத்திரம், வயது 28, ரேவதி நட்சத்திரம், பி. எஸ்ஸி., மாநில அரசு வருவாய்த் துறையில் பணிபுரியும் மணமகனுக்கு நல்ல குடும்பப்பாங்கான படித்த பெண் தேவை. ஜாதகத்துடன் எழுதுக. பெட்டி எண்: 10014.

* வன்னியர் (செட்டியார்) முருந்தன் உடையான் மகரிஷி கோத்திரம், பி. ஏ. பொருளாதாரம் இரண்டாம் வகுப்பில் தேறிய 30 வயது நிரம்பிய சொந்தத் தொழில் செய்யும் மாதம் ரூ. 2000/- வருமானம் உள்ள மணமகனுக்கு, படித்த பெண் தேவை. ஜாதகம் இருந்தால் தெரியப்படுத்தவும். பெட்டி எண்: 10015.

* Alliance invited for a Keralite Brahmin boy Naidrupa Kasyapa Gothram Vadamal star Chithirai age 29 years doing business girl should be educated below 24 years. Contact with horoscope P.V. Subramanian 6 Thilakar Street, Adivaram, Palani - 624 601

* தந்தை பிள்ளை, தாய் பிராமணர், பையன் வயது 26, பி. எஸ்ஸி., டிக்கெட் பரிசோதகர், தென்னக ரயில்வே, திருச்சி. சுத்த சைவம். பிள்ளை அல்லது பிராமணர் குலத்தில் பிறந்த, படித்த, பண்புள்ள பெண் தேவை. பெட்டி எண்: 10017.

* Thengalai, Vaisista, Punarpoosam 32/170/(1200) self employed graduate, (Post graduate in Electronics Instrumentation) boy requires, preferably from graduate employed girl. Subsects no bar. To Box No.10018

* Alliance invited for Thanjavoor Karkathar Pillai boy aged 26, 165 cms, medium build and complexion, doing Ph.D (Chem. Engg.) in USA,

after M.S in Canada. Girls in Post graduate, MBBS, BE level, 23 and below, fair and slim looked for. Boy's father serving Senior Control Officer. Excellent family back ground. Advt. for selection. To Box No.10019

• Alliance invited for Vadagalai Iyengar boy 24/186 cms Poorattathi/Kousika Gothram B.Com/ACA/ICWA employed as executive in reputed private sector from slim good looking girl 19 to 21/167 cms with computer science degree. Box No.10020

* Saiva Vellala M.Sc., PGDCA working as Computer Programmer in UP Govt. organisation Lucknow 27/169/4000 seeks fair good looking graduate girl with good family background. Contact with horoscope to Box No.10021

* Brahacharanam Hartha Mirugaseersham Tanjorian 30/158/3500 Junior Telecom Officer Bombay seeks suitable Central/Bank employed bride transferable to Bombay to Box No. 10022.

• Alliance invited for Bharadwaja Gothram Sourashtra boy 5'4", 30 years Mechanical Engineer Transport Owner well settled. Girl should be between 22-25 years minimum SSLC. Apply immediately with family details, horoscope, to Box No.10023

• Wanted for Senior Clerk in TVS Factory salary Rs. 1800 p.m. B.Com/ Ht. 5'5"/age 27 graduate girl preferred. Employment not must. Boy's star Mirugaseerisham, Muthkala Gothram, Brahacharanam. Subsect no bar. Only son. Box No.10024

• Match for Palghat Iyer boy, 38/160 cms. Moolam/Brahacharanam, B.Com./LL.B., working as clerk in PHED Govt. of MP. Employed girls transferable to MP preferred. Box No.10025

O 36 வயது. படிப்பு பி.காம்.. தேசிய வங்கியில் மத்திய மஹாராஷ்ட்ராவில் ஆபீஸராக பணி புரியும் ஹரித கோத்திரம். ரேவதி நட்சத்திரம். பிரஹசரணம் வரனுக்கு 30 வயதுக்குட்பட்ட படித்த வேலைக்குச் செல்லாத பெண் தேவை. சுத்த ஜாதகம். உயரம் 5' 6''. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 10026.

O பிரஹசரணம். ஸ்ரீவத்ஸ கோத்திரம். உத்ரம் நட்சத்திரம். 28 வயது. 5'5'' உயரம். டி.டி.ஈ. (ஏ.எம்.ஐ.ஈ.) தமிழ் நாடு எலெக்ட்ரிசிடி போர்டு. பையனுக்கு பட்டதாரி. உத்தியோகத்திலிருக்கும் மணமகள் தேவை. பெட்டி எண்: 10027.

• வடமாள், கௌசிக கோத்திரம், உத்திரம், 26 வயது, 165 செ.மீ., நிரந்தர சொந்த மாத வருமானம், ரூ. 3000க்கும் மேல் உள்ள பையனுக்கு இதே வகுப்பில் 20—22 வயது படித்த, அழகான, குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்க. பெட்டி எண்: 10028.

• அரசு வேலையில் ரூபாய் 2500/- மாதச் சம்பளம் பெறும் அழகான, வசதியான, 29 வயது ரெட்டியார் மணமகனுக்கு வேலையில் உள்ள அல்லது வசதியான அழகான ரெட்டியார், மணமகள் தேவை. ஜாதகத்துடன் விவரங்களை அனுப்பவும். பெட்டி எண்: 10029.

• சோழிய வெள்ளாளர், வயது 25, உயரம் 5' 10'' நல்ல சிவந்த நிறமுள்ள, அழகான, சொந்தத் தொழில், வசதியான வீடு உள்ள, பையனுக்கு. (கேட்டை நட்சத்திரம்), சிவப்பான, அழகிய, 20 வயதுக்குட்பட்ட, நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த பெண் தேவை. (உட்பிரிவுகள் சம்மதம்) ஜாதகம் தேவை. பெட்டி எண்: 10030.

• நல்ல வசதி உள்ள வேளாளர் பிள்ளை, வயது 25, பட்டதாரி (H.A.L)இல் வேலை (பெங்களூர்) உயரம் 5' 6.'' ஒரே பையன், நட்சத்திரம், மகம், ராசி — சிம்மம், இந்த வரனுக்கு அழகிய, குணமான, மணப்பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 10031.

• பையனின் வயது 32, பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், ரோஹிணி, நட்சத்திரம், அண்ணனுடன் கூட்டாகத் தொழில் செய்யும் பையனுக்கு வேலையிலுள்ள அல்லது இல்லாத பெண் தேவை. நிறம் மாநிறம், ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10032.

O ஐயங்கார், கௌசிக கோத்திரம், வயது 36, உயரம் 5' 6,'' கிருத்திகை, நல்ல சிவப்பு, பெரிய கம்பெனியில் உத்தியோகம் உள்ள வரனுக்குத் தகுந்த நல்ல வேலையில் உள்ள மணமகள் தேவை. பெட்டி எண்: 10033.

• பிரபல இந்திய தேசிய நியூஸ் பேப்பருக்கு நியூஸ் ஏஜென்ஸியை முக்கிய நகரில் நீண்ட காலமாக இடைவிடாது குடும்பம் வழியே தொடர்ந்து வந்து நடத்திக் கொண்டிருக்கும் அந்த நியூஸ் பேப்பர் ஏஜென்ஸியில் நல்ல வருமானம் உள்ள தஞ்சை வடமான் அய்யர், பாரத்வாஜ கோத்திர, நல்ல உயரமுள்ள, படிப்பு ஹையர் செகண்டரி. 30 வயதுள்ள பையனுக்கு (கன்னிய குடும்பம்), நல்ல குடும்ப மணமகள் தேவை. பெட்டி எண்: 10034.

O தெலுங்கு விஸ்வகர்மா (தங்க வேலை), சிவந்த நிறம், 167 செ.மீ. உயரம், அமெரிக்காவில் எம். எஸ். கம்ப்யூட்டர் சயன்ஸ் படித்து இந்தியா திரும்பும் நிலையிலுள்ள வசதியான குடும்பத்தைச் சேர்ந்த ஒரே பையனுக்கு சிவந்த, அழகிய பட்டதாரிப் பெண், 24 வயதிற்குள் தேவை. பெட்டி எண்: 10035.

O தென்னக இரயில்வேயில் கௌரவ் ஒன்று ஆபீஸராக பணி புரிந்து கொண்டிருக்கும் ஷெட்யூல்ட் (எஸ்.சி.) வகுப்பைச் சார்ந்த வயது 39, மாத வருமானம் ரூ.3,000/— உள்ள பி.ஈ., வரனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த பட்டப் படிப்பு அரசு வேலையிலுள்ள 27 முதல் 33 வயதுடைய மணமகள் தேவை. பெட்டி எண்: 10036.

O தமிழ், வடமாள், வாதுல கோத்திரம், ஹஸ்தம், 44 வயதுள்ள, குறைந்த வயது தோற்றமுள்ள, சட்டப்படி விவாகரத்து பெற்ற, டாக்டருக்கு, நல்ல குடும்பப்பாங்கான ஐயர் மணமகள் தேவை. 28 — 34 வயதுள்ள, வேலையில்லா பட்டதாரி விரும்பத்தக்கது. எல்லா உட்பிரிவுகளும் சம்மதம். ஜாதகத்துடன் அனுப்பவும். பெட்டி எண்: 10037.

O கவரா நாயுடு 31/5' 6''/2250 திருச்சியில் அரசாங்க ஸ்டெனோவாக உள்ள வரனுக்கு மணமகள் தேவை. காஜுலுபலிஜா நாயுடுவும் விண்ணப்பிக்கலாம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10038.

O பிரஹசரணம், கௌண்டின்ய கோத்திரம், தமிழ் ஐயர், 27/+2 பாஸ் செய்த 160/1500 பூரம் நட்சத்திரம். சொந்தத் தொழில் செய்யும் மணமகனுக்கு மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 10039.



○ பரணி/32/செங்குந்த முதலியார்/தனியார் நிறுவனம்/பர்சேஸ் ஆபீஸர்/2700/பி.காம்../165 செ.மீ..க்கு அழகும், தகுதியும், குணமுமுள்ள குடும்பப்பாங்கான பெண் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் உடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10040.

• Tamil Iyer Ashtasahasram Vadhoolam 165/3200/35 Medical representative at Thanjavur very fair very clean habits Philanthropist noble family wanted preferably transferably employed affectionate understanding life partner. Subsed accepted. To Box No.10041

○ முதலியார் வகுப்பைச் சேர்ந்த 29/5'6''/டி.ஈ.ஈ./3500 சென்னையில் ஒரு பெரிய மின்னியல் நிறுவனத்தில் பணிபுரியும் அஸ்த நட்சத்திரம் மணமகனுக்கு 24 வயதிற்குள், நல்ல அழகும், படிப்பும், சிவந்த நிறமும் கொண்ட மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 10042.

• Horoscopes invited from non-Bharadwaja Telugu Velanadu Brahmin graduate girls employed/unemployed for Rly. employed boy 27/170/1600 Rohini star. Reply to Box No.10043

○ சென்னை வடமான், ஐயர், வாதூல கோத்திரம், அவிட்டம், முதல் மகன், பட்டதாரி, 30 வயது, தனியார் நிறுவனம் ரூ.2500/–க்கு மத்திய/மாநில அரசு/வங்கி/இன்ஷுரன்ஸ் வேலை செய்யும் வடமான் மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10044.

• Alliance for Kerala Iyer boy, Delhite, Srivalsam, Vadamal, Thiruvathirai, HSC, well employed, LIC agent, 30/170/2000. Employed or unemployed with reasonable education, fair, Tamil/Kerala Iyer girl preferred to Box No. 10045.

• Bombay based Palghat Iyer parents Koundinyam Brahacharanam seeking suitable alliance for two graduate sons aged 27 and 26 both graduates height 5'6'' and 5'8'' stars Chithirai (suddha jatakam) and Uttaram boys handsome fair well settled. Girls should be smart fair good looking slim. Ad intended for wider choice only write to Box No.10046

• Wanted slim, fair, good looking non-Srivatsa Vadamal girl graduate, below 24 yrs, 160 - 165 cms, for well settled Bombay based boy, Chartered Accountant 28/170, Pooradam, send horoscope to Box No.10047

○ வரதட்சணை தேவை இல்லை. வாணிப செட்டியார் (அசைவம்) மத்திய அரசில் எழுத்தர் வேலை (நிரந்தரப் பணி) பதவி உயர்வு உண்டு. மாதம் ரூ.2,200/– சம்பளம். வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவருக்கு, கௌரவமான, அடக்கமான குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள், ஜாதகத்துடனும், மற்ற முழு விவரங்களுடனும் விண்ணப்பிக்கவும். வாழ்க்கை ஒப்பந்தம் விரும்பப்படுகிறது. பெட்டி எண்: 10048.

• Wanted a very fair, beautiful graduate bride from good affluent family for tall Aiyar B.Tech (Civil), 32, employed in a reputable construction company as Project Engineer. Haritha Gothram, Kartikai star, shuddha jatakam, son of a senior company executive in Bombay. Girl main consideration, but family should be well-to-do. Subsects among Brahmins acceptable. Please reply with horoscope and particulars, only if girl is very beautiful and fair, to Box No.10049

• Wanted employed graduate girls for for Vadagalai Iyengar boy 32/175 Avittam Srivatsa Gothram decently employed in a reputed Public Limited Co., Rs.2500/-p.m. + perks own house at Madras. Subsect no bar. Contact with horoscope to Box No.10050



○ 24 மனை தெலுங்கு செட்டியார் 8 வீடு, 29 வயது, எம்.எஸ்.ஸி., பி.எட்., எல்.ஐ.சி. அஸிஸ்டெண்ட், ரூ.2500/– இடது கால் ஊனம் உள்ள பையனுக்கு அதே வகுப்பில் 16 வீட்டில் மணமகள் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: மாரிமுத்து, சக்தி விநாயகர் தோட்டம், காந்தி கிராமம் — 624 302.

○ ஆற்காடு முதலியார் வகுப்பைச் சேர்ந்த இந்திய விமானப் படையில் பணிபுரியும் வயது 32/ உயரம் 165 செ.மீ../படிப்பு பி.எஸ்.ஸி., டி.ஈ.சி.ஈ./ரூ.3100/ மாத வருமானம் உள்ள மணமகனுக்கு வேலையில் உள்ள/இல்லாத படித்த நல்ல தோற்றமும் அழகும் உள்ள 25 வயதுக்குள் குடும்பப்பாங்கான மணமகள் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: திரு. செங்கல்வராயன், பிளாட் நெ. 124, காமகோடி நகர், நாராயணபுரம், சென்னை — 601 302.

○ வன்னியகுல க்ஷத்திரியர், ரேவதி நட்சத்திரம், நல்ல நிறம், உயரம் 170 செ.மீ., பட்டதாரி, கைதொழில் செய்யும் 27 வயது மணமகனுக்கு, நல்ல அழகான, படித்த, குணமுள்ள மணமகள் தேவை. செவ்வாய் தோஷம் உள்ளவர்களும் தொடர்பு கொள்ளலாம். பெட்டி எண்: 10051.

○ பாரத்வாஜ கோத்திரம், ஸ்மார்த்த பிராமணர், வடமான், வயது 30, உயரம் 169 செ.மீ., பி.எச்.டி. படித்த பையனுக்கு படித்த, வேலை பார்க்கும் அழகிய குடும்பப்பாங்கான மணமகள் தேவை. ஜாதிமத பேதமில்லை. பெட்டி எண்: 10052.

○ பாரத்வாஜ, வடமான், ஆயில்யம், ஏழில் செவ்வாய், குரு பார்வை, தமிழக அரசு வேலை, பட்டதாரி 30/166/1700 சொந்த வீடு, ஒரே பையனுக்கு மாற்றுதலுடன் கூடிய வேலையிலுள்ள வேலையில்லாத அழகான, குடும்பப்பாங்குள்ள பெண் தேவை. விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண்: 10053.

○ வாத்திமான் ஐயர், பாரத்வாஜ கோத்திரம், உத்திராடம், வயது 32, தனியார் கம்பெனியில் ரூ.1500/– பி.காம்., படித்த வரனுக்கு அதே பிரிவைச் சேர்ந்த வேலைக்குச் செல்லும் வேலையில்லாத பெண் தேவை. முழு விவரங்களுடன் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 10054.

திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்ய 1.3.91 முதல் கட்டணம் ரூ. 75/— தொகையை, 'மங்கையர் மலர்' என்ற பெயருக்குச் சென்னையில் உள்ள ஏதாவது ஒரு வங்கியில் மாற்றக் கூடிய MICR டிமாண்ட் டிராப்டாக அனுப்ப வேண்டும். அல்லது மணி யார்டர் மூலமாக அனுப்பலாம். போஸ்டல் ஆர்டர் ஏற்றுக் கொள்வதில்லை. ஒரு விளம்பரத்தில் ஒரு வரனுக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். திருமண மலர் பகுதியில் விளம்பரம் செய்பவர்களின் விலாசங்களைக் கொடுப்பதற்கில்லை. விளம்பரங்களுக்குப் 'பதில் அனுப்புபவர்கள், "விளம்பரதாரர், பெட்டி எண்.... C/o. மங்கையர் மலர், கிண்டி, சென்னை — 600 032 என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.

O 43 வயது இளமை தோற்றம் உள்ள, பாங்கில் மானேஜராக வேலை பார்க்கும் வடகலை கௌசிக கோத்திரம் அய்யங்கார் பையனுக்கு வேலையுள்ள, வேலையில்லாத பட்டதாரி, 34 வயதுக்குள் உள்ள பெண் ஜாதகம் வரவேற்கப்படுகிறது. உயரம் 5'6" அவிட்டம் நட்சத்திரம். பெட்டி எண்: 10055.

O செங்குந்த (கைகோள) முதலியார், வயது 28, 160 செ.மீ., மாத வருமானம் ரூபாய் 3000/— பட்டம் படித்த, சொந்தத் தொழில்புரியும் மணமகனுக்கு பணிபுரியும் மணமகள் தேவை. உட்பிரிவுகளும் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10056.

O 29 வயது எம்.ஏ., எம்.காம்., பட்டதாரி இளைஞர். மாத வருமானம் ரூ.2500/— உயரம் 5' 5". பெற்றோர்கள் இல்லை. குணமுள்ள மனைவி தேவை. எம்மதமும் சம்மதம். ஏழைப் பெண்களுக்கு முதலிடம் தரப்படும். பெட்டி எண்: 10057.

O சோழிய வெள்ளாளர் (அசைவம்), ரயில்வே, டிவிஷனல் அஸிஸ்டெண்ட், டி.எம்.ஈ., 27/165/2500/— உள்ளவருக்கு, டிகிரி படித்த, நல்ல நிறமுள்ள பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். ஆசிரியை/ஆசிரியை பயிற்சி பெற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 10058.

O தஞ்சாவூர் இந்து கார்காத்த வேளாளர் பிள்ளை, சைவம், புது தில்லியில் மத்திய அரசில் டவுன் பிளானர். 32/5.11/5000. சதயம், செவ்வாய் 7ல் உடைய மணமகனுக்கு சைவப் பிள்ளை/முதலியார்/செட்டியார் பட்டதாரி மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 10059.

O இந்து வெள்ளாள முதலியார், 26/1600/எம்.ஏ., பி.ஜி.எல்./167 செ.மீ., அரசு போக்குவரத்தில் பணிபுரியும் சிகப்பான வரனுக்கு (செவ்வாய் தோஷம் இல்லை) 19 — 24 வயதுக்குள் நன்கு படித்த நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. மனமுள்ளவருக்கு முதலிடம் அளிக்கப்படும். வரதட்சிணை தேவையில்லை. பெட்டி எண்: 10060.

O புனே, தனியார் கம்பெனி, நிரந்தர உத்தியோகம், படிப்பு பி.ஏ., ரூ.3000/— சம்பளத்திலிருக்கும், பத்மசாலியர் (உட்பிரிவு பித்தக்காளுசெட்டிவாளு), பிருகு மகரிஷி கோத்திரம், மகம் நட்சத்திரம், வயது 29, உயரம் 165 செ.மீ., மணமகனுக்கு, குறைந்த பட்சம் எஸ்.எஸ்.எல்.சி., படித்த குடும்பப்பாங்கான பெண் தேவை. பெட்டி எண்: 10061.

O வடகலை அய்யங்கார் கௌசிக கோத்திரம், சித்திரை நட்சத்திரம், வயது 26 (18.12.65) திருச்சி தென்னக ரயில்வேயில் மாதம் 1500 ஊதியம் பெறும் வாய் பேசாத நல்ல நிறமுடைய அழகிய பையனுக்கு 10 அல்லது 12 வது படித்த வேலைக்கு தகுதியுள்ள அல்லது வேலை பார்க்கும் யுள்ள அல்லது வேலை பார்க்கும் பெண் தேவை. பெட்டி எண்: 10062.

**1991 மார்ச் முதல் திருமண மலர்ப் பகுதியில் விளம்பரம் செய்யக் கட்டணம் ரூ. 75/- ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது.**

## மணமகன் தேவை

* Alliance invited from Iyer grooms age upto 28 years employed as Officer in Government/Banks, Engineer, Chartered Accountant drawing above Rs. 3000/- p.m. for a domestically trained Brahacharanam Iyer graduate girl 21 years/168 cms Haritha Gothram, Ayilyam star. Subsect no bar. Reply with horoscopes & details to Box No.20020

* Alliance invited from parents of professionals/officers for Kousika Gothram, Vadagalai Iyengar girl 22/165, Ayilyam, graduate domestically well trained. Correspond with horoscope to Box No.20021

* Alliance invited for Koundinya, Telugu Mulakanadu Brahmin, 25 years, employed in Private Firm, graduate gorl. Settled in Madras. Subsect acceptable. Please reply with horoscope to Box No.20022

* Velnadu Telugu Brahmin Bharani Mesharasi, State Govt employed girl 2000/- p.m. aged 35, grooms below 42 and employed in State/Central Government or reputed companies preferred. Other Telugu subsects acceptable to Box No.20023

* Arya Vysya Telugu, undergraduate fair and good looking girl aged 27 years 5.2"/Nabilla Gothram star Kirthikai seeks suitable alliance from employed/business bachelor. Correspond with horoscope and bio-data to Box No.20024

* Vadama Mouthkalya Gothram Ayilyam first padam 26/5'2" graduate type or tailoring knowing domestically well trained medium colour decent marriage assured. Looking for a boy employed in Govt/Decent Pvt firm. Subsect no bar to Box No.20025

* Alliance invited from well placed nonsodamarshna Iyer boys for graduate girl 28/152/Maham, fair complexion decent marriage. Reply with horoscope and bio-data to Box No.20026

* Require alliance from Bank/Govt employed groom for Gavara-Naidu girl 25/157, M.A., B.Ed.

Thiruvonam, mars in 8th place. Subsect no bar. Send horoscope to Box No.20027

○ கௌசிக கோத்திரம், அய்யர், மழநாடு, பிரஹசரணம், மூலம் நட்சத்திரம் முதல் பாதம், வயது 33/4'10" செ.மீ., உயரம் உள்ள கூட்டுக் குடும்பத்தில் பிறந்த பி.காம்., பட்டதாரி, தனியார்த் துறையில் வேலை பார்க்கும் பெண்ணிற்கு நன்கு படித்த, நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. வடமான் சம்மதம். நல்ல முறையில் திருமணம் செய்து தரப் படும். ஜாதகம் விவரமுடன் எழுதவும். பெட்டி எண் 20028.

* Alliance invited from well-employed/settled/good looking broad-minded aged 35-40 Telugu speaking Brahmin settled in Tamil Nadu for a girl of 35 years/163 cms/2000 p.m. working in TWAD Board lately divorced, no encumbrances. Please reply with horoscope and family bio-data with educational qualifications to Box No.20029

* Alliance invited for Sukla Yajur Srivatsa Pooram 167/26/1600 Delhi employed Tamil Iyer girl from Govt well employed Tamil Iyer grooms. Father living separately. Elder sister intercaste marriage. Subsects acceptable to Box No.20030

○ தமிழ் ஐயர், அஷ்ட சகஸ்ரம், கௌண்டின்ய கோத்திரம், அவிட்ட நட்சத்திரம், +2 மற்றும் தமிழ், ஆங்கிலம் டைப்ரைட்டிங் பாஸ் செய்த குடும்ப வேலைகள் நன்கு தெரிந்த 26 வயதுள்ள பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள வரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: .20031.

* Alliance invited highly qualified person for Haritha, Brahacharanam, Iyer girl, 30 years. Anusham, 5.6" M.A., M.Phil, good colour and good personality. Knows Carnatic music and plays veena and well trained in domestic works. Only Vadama and Brahacharanam accepted. To Box No.20032

* Wanted broadminded, loving & affectionate Brahmin bridegroom for 25 yrs. old Iyengar girl (innocent divorcee) working in Central Govt. as steno. Divorcees/widowers without encumbrances no bar. Reply to Box No.20033

* Wanted suitable bridegroom for Vadama, Kousika girl, Magam, 38/152 cms M.A., M.Ed., employed in Education Department. Subsect no bar to Box No.20034

○ தென்கலை அய்யங்கார் பாரத்வாஜ கோத்திரம், மூலம், 3ம் பாதம், பி.ஏ., எகனாமிக்ஸ் மற்றும் இந்தி பி. எட். பாஸ் செய்து கோவையில் பொதுத் துறை நிறுவனத்தில் இந்தி டைப்பிஸ்ட்டாக பணிபுரியும் சிகப்பு நிறம் அழகுள்ள 23 வயது பெண்ணிற்கு நிரந்தர பணியிலுள்ள மணமகன் தேவை. வடகலையும் சம்மதம். பெட்டி எண்: 20035.

* கௌண்டின்ய கோத்திரம், வடமான் மிருகசீரிஷம், வயது 40, சிவப்பு நிறம், வீட்டுக் காரியங்களில் தேர்ச்சி பெற்ற, வாய் பேசாமலும், காது கேளாமலும் உள்ள பெண்ணுக்கு மணமகன்/தாரம் இழந்தவர் தேவை. எளிய முறையில் திருமணம் செய்து தரப்படும். பெட்டி எண்: 20036.

* பலிஜா நாயுடு, வயது 25, எஸ். எஸ். எல். சி., தேர்ச்சி, லட்சணம் உள்ள, சமையல் கலையில் தேர்ச்சியுள்ள, குடும்பப் பொறுப்புகளைத் திறமையாக் நடத்தத்தக்கமணமகளுக்கு உயரம் 150 செ. மீ.க்கு மேல் உள்ள எஸ்.எஸ்.எல்.சி. படிப்பிற்குக் குறையாத பணிபுரியும் மணமகன் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 20037.

○ தென்கலை அய்யங்கார், வாதூல கோத்திரம், ரேவதி நட்சத்திரம், 34 வயது, எஸ்.எஸ்.எல்.சி. டைலரிங் படித்த குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நிரந்தர வேலையிலுள்ள வரன் தேவை. திருமணம் நன்கு செய்து தரப் படும். வடகலையும் சம்மதம். ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 20038.

○ கம்மவார் நாயுடு இனத்தைச் சேர்ந்த 29 வயது எம்.ஏ. பி.எட்., படித்த பெண்ணிற்கு வேலையிலுள்ள அதே இனத்தைச் சேர்ந்த மணமகன் தேவை. பெட்டி எண்: 20039.

○ அழகான குடும்ப நிர்வாக மறிந்த 19 வயது ஐயர் பெண்ணிற்கு 28 வயதிற்குள் உத்தியோகம் அல்லது தொழில் மூலம் சம்பாதிக்கும் மணமகன் தேவை. பெண் வடமாள், கௌசிக கோத்திரம், ஆயில்யம், தாயில்லாதவள். 152 செ.மீ., 10வது தேர்ச்சி டைப், ஷார்ட் ஹாண்ட், தையல் பயிற்சி உடையவள். ஜாதகம் பரிமாறிக் கொள்ளலாம். பெட்டி எண்: 20040.



○ வடகலை, அய்யங்கார், கௌண்டன்ய கோத்திரம் 30/3000/- எம்.காம்., எம்.எட்., படித்து (பூரம்) காரைக்குடிக்கு அருகில் அரசு அங்கீகாரம் பெற்ற தனியார் மேல்நிலைப் பள்ளியில் முதுநிலைப் பட்டதாரி ஆசிரியையாக நிரந்தரப் பணியிலுள்ள பெண்ணிற்கு அதே பிரிவைச் சேர்ந்த மணமகன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 20041.

○ கார்காத்த வேளாளர் வகுப்பு, பிறந்த தேதி 29.8.1961, எம்.ஏ., படிப்பு, பெங்களூரில் அமெரிக்கன் கம்பெனியில் ரூ.3000/- சம்பளத்தில் உள்ள பெண்ணுக்குத் தகுந்த கார்காத்த/சோழிய வேளாளர் மணமகன் தேவை. பெங்களூரிலேயே வேலையானால் உத்தமம். முழு விவரத்துடனும் ஜாதகத்துடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 20042.

○ மாத்வ தேசிஸ்த தேசிய வங்கியில் பணிபுரியும் 25/155/1500/- மூன்று ஆண்டு டிப்ளமா இன் எலக்ட்ரானிக்ஸ் கம்யூனிகேஷன் இன்ஜினியரிங், ஆத்ரேய கோத்திரம், மூலம் நட்சத்திரம், மராட்டி, கன்னடம் பேசும் மாத்வ வரன் தேவை. பெட்டி எண்: 20043.

* Wanted non-Bharadwaja Madhwa Kannada/Desastha groom for fair graduate bride 35 years. To Box No.20044

* Alliance from Govt/Public sector decently employed groom for Vadama, Kousika, Dip. in Music, TTC Iyer girl, aged 25, height 5 ft. domestically well trained. Star Ayilyam. Subsect no bar. Reply to Box No.20045

* Fair, good looking, smart, Tamil Vanniya Chettiar, progressive minded, homely middle class, 26 yrs/155 cms, Central Govt employed, Madras, transferable, seeks gentle, progressive minded, well settled, professionals, well employed business man. No

dowry. Simple marriage. Caste no bar. Box No.20046

O பாரத்வாஜ கோத்திரம். சுவாதி நட்சத்திரம். தென்கலை 34 வயது. எஸ். எஸ். எல். ஸி., படித்த குடும்பப்பாங்கான அழகான 5'4'' உள்ள பெண்ணிற்கு அரசு/நிரந்தர தனியார் கம்பெனியில் வேலை பார்க்கும் தகுந்த மணமகன் தேவை. வடகலை சம்மதம். பெட்டி எண்: 20047.

O முக்குலத்தோர் அகமுடையார் இனத்தைச் சார்ந்த முதுகலை பட்டம் பெற்று திருச்சியில் அரசு மருத்துவமனையில் மருந்தாளுனராகப் பணிபுரியும் 25/154/2000 மாநிறமான பெண்ணிற்கும், பொறியியல் துறையில் பட்டம் பெற்று திருச்சியில் மத்திய அரசு நிறுவனத்தில் பணிபுரியும் 23/155/2000 மாநிறமான பெண்ணிற்கும் தகுந்த வரன்கள் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 20048.

O கோவையில் தனியார் பள்ளியில் பணிபுரியும் 35 வயதுடைய வடமாள் அய்யர் ஆத்ரேய கோத்திரம், திருவோண நட்சத்திரம், பி.ஏ., பி.எட்., படித்த பெண்ணிற்கு அதே இனத்தில் (உட்பிரிவு சம்மதம்) அரசு, பேங்க், கம்பெனி உத்தியோகம் பார்க்கும் மணமகன் தேவை. பெட்டி எண்: 20049.

O துளுவ வேளாளர் இனத்தைச் சேர்ந்த, பி.யு.சி., படித்த பெண், மாநிறம், வயது 28, உயரம் 5'5'' ஆடிட் ஆபீசில் வேலை. இடது கைப்புறம் சிறிதளவு வெள்ளைத் தழும்பு உண்டு. தகுந்த வரன் தேவை. உத்தியோகம் பார்க்கும் சேலம், ஈரோடு, கோவை வாசியாக இருத்தல் நலம். பெட்டி எண்: 20050.

• Alliance invited from decently employed settled grooms for Vathima Bharadwaja good looking girl Anusham 31/150 SSLC, home loving unemployed domestically trained. Subsects no bar. Send horoscope, family details to Box No. 20051.

O மாத்வ தென் கன்னட வகுப்பு (உடுப்பி), விஸ்வாமித்ரர் கோத்திரம், ஆயில்யம் நட்சத்திரம் 4 ஆம் பாதம், 26 வயதுள்ள பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்திலுள்ள மணமகன் தேவை. பெட்டி எண்: 20052.

O கேரள அய்யர், வடமாள், ஆத்ரேய கோத்திரம், மகம், 22 வயது, பி.எஸ்.ஸி., டைப்ரைட்டிங் ஹையர் படித்த, குடும்பப்பாங்கான, அழகான பெண்ணுக்கு, 28 வயதுக்குள் படித்த, நல்ல வேலையில் உள்ள, நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, கேரள அய்யர், வடமாள் மணமகன் தேவை. பெட்டி எண்: 20053.

O தனியார் நிறுவனத்தில் டைப்பிஸ்டு வேலையில் உள்ள மலையாள நாயர், வயது 24, ஐந்து அடி, மாநிறம், செவ்வாய் தோஷமுள்ள பெண்ணுக்கு நல்ல வேலையில் இருக்கும் செவ்வாய் தோஷமுள்ள மலையாள நாயர் மணமகன் தேவை. பெட்டி எண்: 20054.

O சைவ வேளாளர் மணமகள் பி.எஸ்.ஸி., டி.ஸி.ஏ., மாநிறம், வயது 25, உயரம் 156 செ.மீ., மூல நட்சத்திரம். ஜாதகம் இல்லை. வேலைக்கு முயற்சி நடக்கிறது. இதே குலத்தில் பிறந்த தகுந்த மணமகன் தேவை. பெட்டி எண்: 20055.

O உயரம் 150 செ.மீ., வயது 30, செவ்வாய் தோஷமுள்ள, தட்டச்சு, தையல் தெரிந்த பணியில்லாத பெண்ணிற்கும், அவரின் சகோதரி 148 செ.மீ., உயரமுள்ள வயது 28, அரசுப் பள்ளியில் ஆசிரியையாக, மாதம் ரூ.1750/— வருமானம் பெறும் பெண்ணிற்கும் உத்தியோகத்தில் உள்ள மணமகன்கள் தேவை. நாயுடுவில் எந்த பிரிவினரும் சம்மதம். பெட்டி எண்: 20056.

• Alliance invited from non-Bharadwaja Vadama well employed graduate bachelor bridegroom below 42 yrs for a fair M.Com CAIIB Bank employed girl 37/4000. Subsects no bar. Reply with horoscope to Box No.20057

• Wanted bridegroom Smartha-Desastha Marathi speaking graduate 24-26 years decently employed in Banks/Govt. Services other than Mounabargava Gothram for a graduate girl, star Thiruvadurai 4th padam aged 20 years. Box No.20058

O வடகலை, ஸ்ரீவத்ஸ, கிருத்திகை/26/5'2''/பி.ஏ./சுருக்கெழுத்து, தட்டெழுத்து (ஆங்கிலம், தமிழ்) ஹையர் தேறியுள்ள குடும்பப்பாங்கான தெய்வ பக்தியுள்ள பெண்ணிற்கு நிரந்தர வேலையுள்ள வரன் தேவை. சீர் வரிசைகள் சிறப்பாக செய்து தரப்படும். தென்கலையாயினும் பரவாயில்லை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 20059.

O 1952ல் பிறந்த வடகலை ஐயங்கார், பெண், பாரத்வாஜ கோத்திரம், சித்திரை நட்சத்திரம், நல்ல குடும்பத்தைச் சேர்ந்த நிரந்தர வேலை உடைய மணமகன் தேவை. அரசு ஊழியராக இருத்தல் நலம். பெட்டி எண்: 20060.

• Alliance invited from non-Bharadwaja BE/CA/MBA/M.Tech' boy for a post graduate MSc' Vadagalai fair girl 29/160 cms. Kartihgai, Apply with horoscope with details. Thenkalai no bar, to Box No.20061

• Alliance invited from really interested broad-minded well placed decent family boy below 35 for Brahmin girl 28 M.Com CAIIB Bank employed physically handicapped capable of doing all types of work independently. Box No.20062

O தென்கலை, ஹரித கோத்திரம், மகம் நட்சத்திரம், 28/5'6,'' தனியார் கம்பெனியில் மாதம் ரூ.750/- சம்பாதிக்கும் பெண்ணிற்குத் தகுந்த வரன் தேவை. வடகலையும் சம்மதம். பெட்டி எண்: 20063.



O பத்திரிகைத் துறையில் ஆர்வம் கொண்ட எளிய திருமணத்தில் விருப்பம் உள்ள, வீட்டுப் பணி தெரிந்த பொறுப்பு மிக்க பெண், முதலியார் வயது 30, எஸ்.எஸ்.எல்.ஸி., உயரம் 4.10, முதலியார் பிள்ளை மணமகன் தேவை. தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: என். சந்திரா அம்மாள், நெ. 10, முகம்மது உசேன்கான் தெரு, இராயப்பேட்டை, சென்னை—14. (ஐஸ் ஹவுஸ் அருகில்)

• பிரஹசரணம், பாரத்வாஜ கோத்திரம், மிருகசீரிஷம், சிவந்த நிறம், 5 அடி உயரம், +2 பாஸ் (தமிழ் ஐயர்) வயது 24, வடமாள் பிரிவும் சம்மதம். பெண்ணிற்கு மத்திய/மாநில அரசு அல்லது நல்ல தனியார் வேலையில் உள்ள படித்த வரன் தேவை. 30 வயதுக்குள் இருப்பது விரும்பத்தக்கது. முகவரி: ஸ்ரீ பேச்சியம்மா நிலையம், 76, சிறுவாணி ரோடு, பேரூர், கோவை — 641 010.

• Wanted professionally qualified Iyer groom for Haritha Vadamal girl star Swathi, 23 years, B.A. (Hons) studying M.A. height 5'4''. Subsect no bar. Reply with horoscope to Box No.20065

